# பொருநராற்றுப்படை

## முகவுரை.



பொருநராற்றுப்படையாவது, கடைச்சங்கப்புலவர்களுள், நக்கீரனார்முதலிய நல்லிசைப்புலவர்களால் அருளிச்செய்யப்பெற்று அவர்களால் தொகுக்கப்பெற்ற பத்துப்பாட்டுக்களுள் இரண்டாவது; பத்துப்பாட்டுக்களிவையென்பதைப் பின்வரும் வெண்பாவாலுணர்க:

"முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி - மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து."

பொருநராற்றுப்படையென்பதற்குப் பொருநரை வழிப்படுத்துவதென்பது பொருள். இளஞ்சேட்சென்னி புதல்வனாகிய சோழன் கரிகாற்பெருவளத்தானாற் பெருஞ்செல்வம்பெற்றுக் கவலையின்றிப் போதுகின்ற பொருநனொருவன் வறுமைத்துன்பத்தால் வாடிவருகின்ற பொருநனொருவனைப்பார்த்து, 'நீ கரிகாற்பெருவளத்தானிடஞ்செல்லின், பெருஞ்செல்வம்பெற்று வாழ்வாய்' என அவனை வழிப்படுத்தியதாக அவ்வரசன்மீது முடத்தாமக்கண்ணியார் பாடியது.

பொருநர் - ஒருவகைச்சாதியார்; ஏர்க்களம்பாடுதல், போர்க்களம்பாடுதல்முதலியன இச்சாதியாருடைய தொழில்கள்; அவர்களுள், இப்பாட்டிற்குரியபொருநன் போர்க்களம்பாடுவோன்; இதனை, இந்நூல், ருஎ - ம் அடியின் விசேடவுரையாலுணர்க. 'பொருந்' என்பது இப்பெயர்க்கு முதனிலை. இந்நூல்வகையைச்சார்ந்தனவாய், கூத்தராற்றுப்படை, பாணராற்றுப்படை, புலவராற்றுப்படை, விறலியாற்றுப்படையெனப் பண்டைக்காலந்தொடங்கிப் பலநூல்கள் வழங்கிவருகின்றன. நிற்க.

# முகவுரை

இந்நூல், உசஅ - அடிகளையுடையது; இடையிடையே வஞ்சியடிகள் கலக்கப்பெற்ற ஆசிரியப்பாவாக அமைந்துள்ளது; வஞ்சியடிகளை, களஅ - ம் அடிமுதலியவற்றிற்காண்க.

இதனால், கரிகாற்பெருவளத்தானுடைய வள்ளன்மையும் அவன் வீரமும் அவனாண்ட சோழநாட்டின் வளங்களும் காவிரிநதி பயன்படுத்தலும் நன்குபுலப்படும்.

இந்நூலாசிரியராகிய முடத்தாமக்கண்ணியாருடைய வரலாறு வேறொன்றும் தெரியவில்லை.

சோழன் கரிகாற்பெருவளத்தான் வரலாற்றின் விரிவை இப்புத்தகம், சுகூ - ம் பக்கத்திற்காண்க.



9034

## இந்நூல் உரையாசிரியராகிய

# நச்சினார்க்கினியர் வரலாறு.



### விருத்தம்.

எவனுலக வாயிடைவந் தமுதவா யுடையனென வியம்பப் பெற்றோன்
எவன்பண்டைப் பனுவல்பல விறவாது நிலவவுரை யெழுதி யீந்தோன்
எவன்பரம வுபகாரி யெவனச்சி னார்க்கினிய னெனும்பே ராளன்
அவன்பாத விருபோது மெப்போது மலர்கவென தகத்து மன்றே.

இந்நூலின் உரையாசிரியராகிய ஆசிரியர் நச்சினார்க்கினியர், பாண்டி வளநாட்டுள்ள மதுராபுரியிற் பிராமணகுலத்திற் பாரத்துவாசகோத்திரத்திற் பிறந்தவர். தமிழ்ப்பாஷையிலுள்ள பலவகையான எல்லாநூல்களிலும் அதிபாண்டித்தியமுடையவர். இவரது சமயம் சைவமே. இவர் இன்னாரென்பது, "வண்டிமிர் சோலை மதுரா புரிதனி, லெண்டிசை விளங்க வந்த வாசான், பயின்ற கேள்விப் பாரத் துவாச, னான்மறை துணிந்த நற்பொரு ளாகிய, தூய ஞான நிறைந்த சிவச்சுடர், தானே யாகிய தன்மை யாளன்" என்னும் உரைச்சிறப்புப்பாயிரத்தால் விளங்கும். சிவஸ்தலங்களுட்சிறந்த சிதம்பரத்தினது திருநாமங்களாகிய 'திருச்சிற்றம்பலம்,' 'பெரும்பற்றப்புலியூர்' என்பவற்றை முறையே ஆறெழுத்தொருமொழிக்கும் எழெழுத்தொரு மொழிக்கும் உதாரணமாக இவர், தொல்காப்பியம் எழுத்ததிகாரத்து மொழி மரபில், "ஓரெழுத்தொருமொழி" என்னுஞ் சூத்திரத்து விசேடவுரையிற் காட்டியிருத்தலாலும், சைவசமயத்துச சிறந்தநூல்களாகிய திருவாசகம் திருச்சிற்றம்பலக்கோவையார் என்பவற்றினின்றும் தமது உரைகளிற் பலவிடங்களில் இலக்கிய விலக்கணப் பொருள்களுக்கன்றித் தத்துவப்பொருளுக்கும் மேற்கோள்கள் எடுத்துக்காட்டியிருத்தலாலும், அங்ஙனம் மேற்கோள்கொண்ட சிலவிடங்களில் எழுதியுள்ள விசேடவுரைகளாலும், நாமகளிலம்பகத்து 'மேகம் மீன்ற' என்னும் ௩௩௩-ம் செய்யுளில், 'போகம்மீன்ற புண்ணியன்' என்பதற்கு எழுதிய விசேடவுரையாலும், திருமுருகாற்றுப்படை யுரையிற் காட்டிய சில நயங்களாலும், உரைச்சிறப்புப்பாயிரத்தில், "தூய ஞான நிறைந்த சிவச்சுடர், தானே யாகிய தன்மை யாளன்" எனக்கூறப்பெற்றதனாலும், மற்றுஞ் சிலவற்றாலும், இவர் சைவசமயியாதல் நன்குவெளியாகும்.

இவ்வுரையாசிரியர், பத்துப்பாட்டினுள் இந்நூலுக்கன்றி மற்றநூல்களுக்கும் தொல்காப்பியத்திற்கும் கலித்தொகைக்கும் சீவகசிந்தாமணிக்கும், குறுந்தொகையில் பேராசிரியர் பொருளெழுதாதொழிந்த இருபது செய்யுட்

களுக்கும் உரைசெய்தருளினர். இன்னும் சிலநூல்களுக்கு இவர் உரையியற்றினரென்பர்; அவை இவையென்று புலப்படவில்லை. இக்காலத்து வழங்கும் திருக்கோவையாருரை பேராசிரியராற் செய்யப்பட்டதென்று தெரிகின்றமையாலும், இவர் அந்நூற்குச்செய்த வேறுரை கிடையாமையாலும் அதற்கும் திருக்குறள் முதலிய மற்றுஞ்சிலவற்றிற்கும் இவர் உரைசெய்திருப்பதாக இவருடைய உரைச்சிறப்புப்பாயிரத்திலேனும் வேறொன்றிலேனும் கூறப்படாமையாலும், அவைகள் இங்கே எழுதப்பட்டில.

சீவகசிந்தாமணிக்கு நச்சினார்க்கினியர் முதன்முறை ஒருரையெழுதி, அக்காலத்துப் பிரசித்திபெற்றிருந்த சைனவித்துவான்கள் சிலருக்குக்காட்ட, அவர்கள்* அவ்வுரையை அங்கீகரியாமை கண்டு, பின்பு ஆருகதநூல்கள் பலவற்றையும் நலமுற ஆராய்ந்து இரண்டாமுறை ஓர்உரையை யெழுதி அவர்களுக்குக் காட்டவே, அவர்கள் உற்றுநோக்கி வியந்து அவ்வுரையை அங்கீகரித்துக்கொண்டார்களென்று சைனர் கூறுகின்றனர்.

நாமகளிலம்பகத்தில் "கண்ணுளார் நுங்காதலர்" என்னும் சா௩-ம் செய்யுளுரையில் 'ஈங்குத் தன்மையையுணர்த்துதல், "செலவினும் வரவினும்" என்னுஞ் சூத்திரத்திற் கூறினும்' என்றும், குணமாலையாரிலம்பகத்தில் "மங்கை நல்லவர்" என்னுஞ்செய்யுளுரையில் 'ஆசிரியர் "நண்டுந் தும்பியும்" என்று தும்பியைப்பின்வைத்தது. மேல்வருஞ் சூத்திரத்தில், "மாவு மாக்களு மையறி வென்ப" என்ற ஐயறிவு இதற்கும் எறுதற்கென்றுணர்க; இதனை வாராததனால் வந்ததுமுடித்த லென்னுந் தந்திரவுத்தியாற் கொள்க வென்று ஆண்டு உரை கூறிப்போந்தாம்' என்றும் நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலால், இவர் தொல்காப்பியத்திற்கு உரையெழுதினபின்பு சீவகசிந்தாமணிக்கு உரையெழுதினரென்று விளங்குகின்றது.

தொல்காப்பியவுரைமுதலியவற்றில் இவரால் எடுத்துக்காட்டப்பட்டுள்ள மேற்கோள்களமைந்த நூல்களுள் இதுகாறும் விளங்கியவை வருமாறு:—

க. அகத்தியம்.
உ. அகநானூறு.
௩. அணியியல்.
௪. அவிநயம்.
ரு. ஆசாரக்கோவை.
சு. இராமாயண வெண்பா.
எ. இறையனாரகப்பொருள்.
அ. ஏலாதி.
௯. ஐங்குறுநூறு.
க0. ஐந்திணையெழுபது.
கக. ஐந்திணையைம்பது.
கஉ. கடகண்டு.
க௩. கலித்தொகை.
க௪. களவழிநாற்பது.
கரு. காக்கைபாடினியம்.
கசு. குணநாற்பது.
கஎ. குறிஞ்சிப்பாட்டு.
கஅ. குறுந்தொகை.
க௯. கூத்தநூல்.
உ0. கைந்நிலை.
உக. கொன்றைவேந்தன்.
உஉ. சிலப்பதிகாரம்.

உந. சிறுகாக்கைபாடினியம்.
உச. சிறுபஞ்சமூலம்.
உரு. சிறுபாணாற்றுப்படை.
உசா. சினேந்திரமாலை.
உஎ. சீவகசிந்தாமணி.
உஅ. தகடூர்யாத்திரை.
உகூ. திணைமாலைநூற்றைம்பது.
௩0. திணைமொழியைம்பது.
௩க. திரிகடுகம்.
௩உ. திருக்குறள்.
௩௩. திருக்கோவையார்.
௩ச. திருமுருகாற்றுப்படை.
௩ரு. திருவாசகம்.
௩சா. தொல்காப்பியம்.
௩எ. நற்றிணைநானூறு.
௩அ. நாடகநூல்.
௩கூ. நாலடியார்.
ச0. நெடுநல்வாடை.
சக. பட்டினப்பாலை.
சஉ. பதிற்றுப்பத்து.
ச௩. பரிபாடல்.
சச. பல்காப்பியம்.
சரு. பல்காயம்.
சசா. பழமொழி.
சஎ. பன்னிருபடலம்.
சஅ. பாரதவெண்பா.
சகூ. புறநானூறு.
ரு0. புறப்பொருள்வெண்பாமாலை.
ருக. பூதபுராணம்.
ருஉ. பெருங்கதை.
ரு௩. பெரும்பாணாற்றுப்படை.
ருச. பெரும்பொருள்விளக்கம்.
ருரு. பொய்கையார்முதலாயினோர் செய்த அந்தாதி.
ருசா. பொருநராற்றுப்படை.
ருஎ. மணிமேகலை.
ருஅ. மதுரைக்காஞ்சி.
ருகூ. மலைபடுகடாம்.
சா0. மாபுராணம்.
சாக. முத்தொள்ளாயிரம்.
சாஉ. முதுமொழிக்காஞ்சி.
சா௩. முல்லைப்பாட்டு.
சாச. மோதிரப்பாட்டு.
சாரு. யாழ்நூல்.
சாசா. வசைக்கடம்.
சாஎ. வஞ்சிப்பா.
சாஅ. வளையாபதி.
சாகூ. விளக்கத்தார்கூத்து.

தொல்காப்பியவுரைமுதலியவற்றில் வேதம், வேதாங்கம் முதலிய பல நூல்களிலிருந்தும் பல உரைகளிலிருந்தும் பற்பல அரியவிஷயங்களை ஆங்காங்கு எடுத்துக்காட்டி நன்குவிளக்கிப்போகின்றமையின், இவரை வடமொழியிலும் மிக்க பயிற்சியுள்ளவராகச் சொல்லுதற் கிடமுண்டு.

உரையாசிரியர், சேனாவரையர், பேராசிரியர், ஆளவந்தபிள்ளையாசிரியர்முதலிய உரையாசிரியர்கள் இவருடைய உரையில் எடுத்துக்கூறப்பட்டிருத்தலின், அவர்களுக்கு இவர் காலத்தினாற்பிற்பட்டவரென்று தெரிகின்றது.

அமிழ்தினுமினிய தமிழ்மடவரல் செய் அருந்தவத்தின் பெரும்பயனாக அவதரித்தருளிய இம்மகோபகாரியின் அருமைபெருமைகள் விரிவஞ்சி விடுக்கப்பட்டன

இவருடைய மேம்பாட்டைப்பாராட்டி அக்காலத்து ஆன்றோராற்செய்யப்பட்ட உரைச் சிறப்புப்பாயிரச் செய்யுட்கள் வருமாறு:—

வெண்பா.

பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியு
மாரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்குஞ் . சாரத்
திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
விருத்திநச்சி னார்க்கினிய மே.

தொல்காப் பியத்திற் றொகுத்த பொருளனைத்து
மெல்லார்க்கு மொப்ப வினிதுரைத்தான் - சொல்லார்
மதுரைநச்சி னார்க்கினியன் மாமறையோன் கல்விக்
கதிரின் சுடரெறிப்பக் கண்டு.

ஆசிரியப்பா.

பாற்கடல் போலப் பரந்த நன்னெறி
நூற்படு வான்பொரு ணுணணிதி னுணர்ந்த
போக்கறு கேள்விப் புலவோர் புலத்தி
னற்பொருள் பொதிந்த தூக்கமை யாப்பினைத்
தேக்கிய சிந்தைய னாகிப் பாற்பட
வெழுத்துஞ் சொல்லும் பொருளுமிம் மூன்று
மிழுக்கற வாய்ந்த வழுக்கின்றேல் சீர்த்தித்
தொல்காப் பியமெனுந் தொடுகடற் பரப்பை
மறுவுங் குறைவு மின்றி யென்றுங்
கலையி னிறைந்த கதிர்மதி யென்ன
நிலையுடை கலத்தி னெடுங்கரை காணக்
கல்லா மாந்தர் கற்பது வேண்டியு
நல்லறி வுடையோர் நயப்பது வேண்டியு
முறையிடை யிட்ட காண்டிகை யுரைத்து
மான்றோர் புகழ்ந்த வறிவினிற் றெரிந்து
சான்றோ ருரைத்த தண்டமிழ்த் தெரிய
லொருபது பாட்டு முணர்பவர்க் கெல்லா
முரையற முழுதும் புரைபட வுரைத்து
மொலித்திரைத் தலத்தி னுணர்ந்தோ ருரைக்குங்
கலித்தொகைக் கருத்தினைக் காட்சியிற் கண்டதற்

குள்ளுறை யுவமமு மேனை யுவமமுந்
தெள்ளிதிற் றெரிந்து திணைப்பொருட் கேற்ப
வுள்ளுறை யுவமத் தொளித்த பொருளைக்
கொள்பவர் கொள்ளக் குறிப்பறிந் துணர்த்தி
யிறைச்சிப் பொருளுக் கெய்தும் வகையைத்
திறப்படத் தெரிந்து சீர்பெறக் கொளீஇத்
துறைப்படு பொருளொடு சொற்பொருள் விளக்கி
முறைப்பட வினையை முடித்துக் காட்டிப்
பாட்டிடை மெய்ப்பாடு பாங்குறத் தெரித்துப்
பாற்பட நூலின் யாப்புற வுரைத்த
நாற்பெயர் பெயரா நடப்பக் கிடத்திப்
போற்ற வின்னுரை பொருள்பெற விளம்பியும்
வையம் புகழ்ந்து மணிமுடி சூட்டிய
பொய்யில் வான்கதை பொதிந்த செந்தமிழ்ச்
சிந்தா மணியைத் தெண்கடன் மாநிலம்
வந்தா தரிப்ப வண்பெரு வஞ்சிப்
பொய்யா மொழிபுகழ் மையறு காட்சித்
திருத்தகு முனிவன் கருத்திது வென்னப்
பருப்பொருள் கடிந்து பொருட்டொடர் படுத்து
வினையொடு முடியப் புனையுரை யுரைத்து
நல்லறி வுடைய தொல்பே ராசான்
கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்
பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்
கிதுபொரு ளென்றவ னெழுதா தொழிய
விதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்துந்
தண்டமிழ் தெரித்த வண்புகழ் மறையோன்
வண்டிமிர் சோலை மதுரா புரிதனி
லெண்டிசை விளங்க வந்த வாசான்
பயின்ற கேள்விப் பாரத் துவாச
னன்மறை துணிந்த நற்பொரு ளாகிய
தூய ஞான நிறைந்த சிவச்சுடர்
தானே யாகிய தன்மை யாள
னவின்ற வாய்மை நச்சினார்க் கினிய
னிருவினை கடியு மருவியம் பொதியின்

மருவிய குறுமுனி தெரிதமிழ் விளங்க
ஊழி யூழி காலம்
வாழி வாழியிம் மண்மிசை தானே.

விருத்தம்.

பச்சைமா லனைய மேகம் பௌவநீர் பருகிக் கான்ற
வெச்சினாற் றிசையு முண்ணு மமிழ்தென வெழுநா வெச்சின்
மெச்சிநா ணும் விண்ணோர் மிசைகுவர் வேத போத
னச்சினார்க் கினிய னெச்சி னறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்.



பத்துப்பாட்டில்

இரண்டாவதாகிய

# பொருநராற்றுப்படை

## மூலமும் உரையும்.



நேரிசையாசிரியப்பா.



[பரிசில்பெற்றுவந்தபொருநன்
எதிர்வந்த பொருநனைவிளித்தல்:]

அறாஅ யாண ரகன்றலைப் பேரூர்
சாறுகழி வழிநாட் சோறுநசை யுறாது
வேறுபுல முன்னிய விரகறி பொருந
[பாலையாழும் அதனுறுப்பும்:]
குளப்புவழி யன்ன கவடுபடு பத்தல்

---

இதன்பொருள். *

1. அறாஅ யாணர் அகல் தலை பெரு ஊர் - இடையறாத செல்வவருவாயுள்ள அகன்ற இடத்தையுடைய பெரிய ஊர்களிடத்து,

குறிப்பு. வருவாய் - வரும்படி.

2. சாறு கழி வழிநாள் சோறு நசை உறாது - விழாக்கழிந்த பின்னாளில் ஆண்டுப்பெறுகின்ற சோற்றை விரும்புதல்செய்யாது,

கு - பு. திருவிழாநடக்குமிடங்களிற் சென்றுபாடி உணவுமுதலியன பெறுதல் பொருநர்க்கு இயல்பு.

3. வேறு புலம் முன்னிய விரகு அறி பொருந - விழாக்கொண்டாடும் வேற்றுப்புலத்தைக் கருதிய உபாயத்தையறிந்த பொருந,

இஃது அண்மைவிளி.

கு - பு. வேற்றுப்புலம் - வேறிடம்.

4. குளம்பு வழி அன்ன கவடு படு பத்தல் - மான்குளம்பழுத்திய இடத்தையொத்த இரண்டருகும்தாழ்ந்து நடுவுயர்ந்த பத்தலினையும்,

---

* மாணாக்கர்களுடைய விருப்பத்தின்படி, இவ்வுரையாகிய நச்சினார்க்கினியம், அவ்வவ்விடத்துச் சிறிதுசிறிது முடிபுமுதலியன வேறுபடுத்தப் பெற்றதென்றுணர்க.

விளக்கழ லுருவின் விசியுறு பச்சை
யெய்யா விளஞ்சூற் செய்யோ ளவ்வயிற்
றைதுமயி ரொழுகிய தோற்றம் போலப்
பொல்லம் பொத்திய பொதியுறு போர்வை
யளைவா ழலவன் கண்கண் டன்ன
துளைவாய் தூர்ந்த துரப்பமை யாணி
யெண்ணாட் டிங்கள் வடிவிற் றாகி
யண்ணா வில்லா வமைவரு வறுவாய்ப்

---

5. விளக்கு அழல் உருவின் விசி உறு பச்சை - விளக்கினது எரிகின்ற நிறத்தையுடைய விசித்துப் போர்த்தலுற்ற தோலாகிய,

கு - பு. விசித்து - இறுகக்கட்டி. "விளக்கழ லுறுத்த போலும் விசியுறு போர்வை" என்றார் சிந்தாமணியிலும்; காந்த. கூஎ.

6. எய்யா இள சூல் செய்யோள் அவ்வயிற்று - மிக அறியப்படாத இளைய சூலையுடைய சிவந்த நிறத்தையுடையோளது அழகினையுடைய வயிற்றினிடத்து,

'செய்யோள்' என்றார், மயிரொழுங்கு விளங்கித் தோற்றுதற்கு.

கு - பு. எய்யாமை - அறியாமை. சூல் - கர்ப்பம்.

7. ஐது மயிர் ஒழுகிய தோற்றம் போல - மெல்லியதாகிய மயிர் ஒழுங்குபடக்கிடந்த தோற்றரவுபோல,

கு - பு. ஐம்மை - மென்மை.

8. பொல்லம்பொத்திய பொதி உறு போர்வை - இரண்டுதலையுங் கூட்டித்தைத்த மரத்தைப்பொதிதலுறும் போர்வையினையும்,

தோலாகிய போர்வையென்க.

கு - பு. "பழைய தோர்பொல்லம் பொத்திய பத்தர்யாழ்" என்றார்; (திருவிளை. விறகு. கரு).

9 - 10. அளை வாழ் அலவன் கண் கண்டு அன்ன துளை வாய் தூர்ந்த துரப்பு அமை ஆணி - வளையிலேவாழ்கின்ற நண்டின்கண்ணைக் கண்டாலொத்த பத்தலிரண்டுஞ்சேர்த்தற்குத் திறந்த துளைகளின் வாய் மறைதற்குக் காரணமாகிய முடுக்குதலமைந்த ஆணியினையும்,

தோல் நெகிழாமல் முடுக்கின ஆணியென்றுமுரைப்பர். அன்ன ஆணியென்க.

11 - 12. எண் நாள் திங்கள் வடிவிற்று ஆகி அண்ணா இல்லா அமை வரு வறு வாய் - உவாவிற்கு எட்டாநாளிற் றிங்களின்வடிவை உடைத்தாய் உண்ணாக்கில்லாத பொருந்துதல்வந்த வறியவாயினையும்,

கு - பு. உவா - பௌர்ணிமை. வறியவாய் - உள்ளீடில்லாதவாய். "பிறைபிறந் தன்னபின்னேந்துகவைக்கடை" என்பது, பெரும்பாணாற்றுப்படை, கக.

பாம்பணந் தன்ன வோங்கிரு மருப்பின்
மாயோண் முன்கை யாய்தொடி கடுக்குங்
கண்கூ டிருக்கைத் திண்பிணித் திவவி
னாய்தினை யரிசி யவைய லன்ன
வேய்வை போகிய விரலுளர் நரம்பிற்
கேள்வி போகிய நீள்விசித் தொடையன்
மணங்கமழ் மாதரை மண்ணணி யன்ன
வணங்குமெய்ந் நின்ற வமைவரு காட்சி
யாறலை கள்வர் படையிட வருளின்
மாறுதலை பெயர்க்கு மருவின் பாலை

---

13. பாம்பு அணந்து அன்ன ஓங்கு இரு மருப்பின் - பாம்பு தலையெடுத்தாலொத்த ஓங்கின கரிய தண்டினையும்,

14. மாயோள் முன்கை ஆய் தொடி கடுக்கும் - கரியநிறத்தையுடையோளுடைய முன்கையில் அழகினையுடைய தொடியையொக்கும்,

கு - பு. மா - கருமை.

15. கண்கூடு இருக்கை திண் பிணி திவவின் - ஒன்றோடொன்று நெருங்கின இருப்பையுடைத்தாகிய திண்ணிய பிணிப்பினையுடைய திவவினையும்,
இது நரம்புதுவக்கப்படுவது. கடிக்கும் திவவென்க.

கு - பு. "மடந்தை முன்கைக், குறுந்தொடி யேய்க்கு மெலிந்து வீங்குதிவவு" என்றார்; (பெரும்பா. கஉ - கங).

16 - 18. ஆய் தினை அரிசி அவையல் அன்ன வேய்வை போகிய விரல் உளர் நரம்பின் கேள்வி போகிய நீள் விசி தொடையல் - அழகினையுடைய தினையரிசியிற் குத்தலரிசியையொத்த குற்றம்போகிய விரலாலசைக்கும் நரம்பினையுடைய இசைமுற்றுப்பெற்ற நீண்ட விசித்தலையுடைய தொடர்ச்சியினையும்,

கு - பு. தினையின்குத்தலரிசியையொத்தகுற்றம், முறுக்கானுண்டாவது.

19. மணம் கமழ் மாதரை மண்ணணி அன்ன - கலியாணஞ்செய்தமை தோற்றுகின்ற மாதரை அலங்கரித்தாலொத்த,

கு - பு. "மைத்தடங்கண் மணமகளிர் கோலம்போல் வனப்பெய்தி" என்றார்; (சில. கானல்).

20. அணங்கு மெய் நின்ற அமை வரு காட்சி-உரியதெய்வம் தன்னிடத்தேநின்ற இலக்கணம் அமைதல்வரும் அழகினையுமுடைய, பாலையாழ் (உஉ).

கு - பு. வீணைக்குரியதெய்வம், மாதங்கி.

21. ஆறு அலை கள்வர் படைஇட - வழியில் அலைக்கின்ற கள்வர் தம் கையிலுள்ள படைக்கலங்களைக் கைவிடும்படி,

21 - 22. அருளின் மாறு தலை பெயர்க்கும் மருவு இன் பாலை - அருளினது மாறாகிய மறத்தினை அவர்களிடத்துநின்று பெயர்க்கும் மருவுதலினிய பாலையாழை,
பாலை - ஆகுபெயர்.

கு - பு. மறம் - அருளின்மை, பாலையாழைக்கேட்பின், திருடர்களுக்கும் அருளுண்டாகுமென்பதாம்.

[யாழ்த்தொழில்:]
வாரியும் வடித்து முந்தியு முறழ்ந்துஞ்
சீருடை நன்மொழி நீரொடு சிதறி
[பாடினியின் கேசாதிபாதம்:]
உரு யறல்போற் கூந்தற் பிறைபோற் றிருநுதற்
கொலைவிற் புருவத்துக் கொழுங்கடை மழைக்க
ணிலவிதழ் புரையு மின்மொழித் துவர்வாய்ப்

---

பத்தலினையும் (௮), பொல்லம்பொத்திய (௮) பச்சையாகிய (௫) போர்வையினையும் (௮), ஆணியினையும் (௧௦), வறுவாயினையும் (௧௨), மருப்பினையும் (௧௩), வார்க்கட்டினையும் (௧௫), நரம்பின்றொடர்ச்சியினையும் (௧௮), காட்சியினையும் (௨௦) உடைய பாலையாழெனமுடிக்க.

"கொன்றைகருங் காலி குமிழ்முருக் குத்தணக்கே" என்பதனால், கோட்டிற்குமரம் கொன்றையும் கருங்காலியுமாம்; பத்தற்குமரம் குமிழும், முருக்கும், தணக்குமாம்.

23. வாரியும் - நரம்புகளைக்கூடத் தழுவியும்,

கு - பு. கூட - ஒருமிக்க,

23. வடித்தும் - உருவியும்,

23. உந்தியும் - தெறித்தும்,

23. உறழ்ந்தும் - ஒன்றைவிட்டு ஒன்றைத்தெறித்தும்,

வடித்தல் - நரம்பெறிதலென்றுமுரைப்பர்.

24. சீர் உடை நல் மொழி நீரொடு சிதறி - சீரையுடைத்தாகிய தேவபாணிகளை நீர்மையுடன் பரக்கப்பாடி,

சீரெனவே பாணியுந் தூக்கும் உளவாயின.

கு - பு. தேவபாணி - தெய்வங்களைத்துதிக்கும் பாட்டு; "மாயோன் பாணியும் வருணப் பூதர், நால்வகைப் பாணியும்" என்பதனாலுணர்க; (சில. கடலாடு. ௩௫ - ௩௬). சீர்முதலியன தாளவிசேடங்கள்; சீர் - முடியுங்காலத்தைத் தன்னிடத்தேயுடையது; பாணி - எடுக்குங்காலத்தைத் தன்னிடத்தேயுடையது; தூக்கு - நிகழுங்காலத்தைத் தன்னிடத்தேயுடையது.

25. அறல் போல் கூந்தல் - ஆற்றறல்போலும் கூந்தலினையும்,

25. பிறை போல் திரு நுதல் - பிறைபோல அழகினையுடைய நெற்றியினையும்,

26. கொலை வில் புருவத்து - கொலைத்தொழிலையுடைய விற்போலும் புருவத்தினையும்,

26. கொழு கடை மழை கண் - அழகிய கடையினையுடைய குளிர்ந்த கண்ணினையும்,

27. இலவு இதழ் புரையும் இன் மொழி துவர் வாய் - இலவினது இதழையொக்கும் இனியசொல்லையுடைய செம்மையுடைத்தாகிய வாயினையும்,

கு - பு. துவர் - செம்மை.

பலவுறு முத்திற் பழிதீர் வெண்பன்
மயிர்குறை கருவி மாண்கடை யன்ன
பூங்குழை யூசற் பொறைசால் காதி
னாணடச் சாய்ந்த நலங்கிள ரெருத்தி
னாடமைப் பணைத்தோ ளரிமயிர் முன்கை
நெடுவரை மிசைஇய காந்தண் மெல்விரற்
கிளிவா யொப்பி னொளிவிடு வள்ளுகி
ரணங்கென வுருத்த சுணங்கணி யாகத்து
......... ......... ......... .........
நீர்ப்பெயர்ச் சுழியி னிறைந்த கொப்பூழ்

---

28. பல உறு முத்தின் பழி தீர் வெள் பல் - பலவுஞ்சேர்ந்த முத்துக்கள்போற் குற்றந்தீர்ந்த வெள்ளிய பல்லினையும்,

பலமுத்தென்றார், ஒருகோவையாயிருத்தலின். இனி, பலவிலையுற்ற முத்தென்றுமாம்.

29. மயிர் குறை கருவி மாண் கடை அன்ன - மயிர்வெட்டுகின்ற கத்தரிகையினுடைய மாட்சிமைப்பட்ட குழைச்சையொத்த,

கு - பு. கத்தரிகை - கத்தரிக்கோல்.

30. பூ குழை ஊசல் பொறை சால் காதின் - பொலிவுபொருந்திய மகரக்குழையினுடைய அசைவினைப் பொறுத்தலமைந்த காதினையும்,

கு - பு. ஊசல் - அசைவு.

31. நாண் அட சாய்ந்த நலம் கிளர் எருத்தின் - நாணம் வருத்தலாற் பிறரைநோக்காதுகவிழ்ந்த நன்மைவிளங்குகின்ற கழுத்தினையும்,

32. ஆடு அமை பணை தோள் - அசைகின்ற மூங்கில்போலும் பெருத்தலையுடையதோளினையும்,

32. அரி மயிர் முன்கை - மெல்லியமயிரினையுடைய முன்கையினையும்,

33. நெடு வரை மிசைஇய காந்தள் மெல் விரல் - நெடிய மலையின் உச்சியிடத்தனவாகிய காந்தள்போலும் மெல்லிதாகிய விரலினையும்,

34. கிளி வாய் ஒப்பின் ஒளி விடு வள் உகிர் - கிளியினது வாயோடொப்பினையுடைய ஒளிவிடுகின்ற பெருமையையுடைத்தாகிய நகத்தினையும்,

35. அணங்கு என உருத்த சுணங்கு அணி ஆகத்து - பிறர்க்கு வருத்தமெனத் தோற்றின சுணங்கணிந்த மார்பினையும்,

36. ..........................................................................

37. நீர் பெயர் சுழியின் நிறைந்த கொப்பூழ் - நீரிடத்துப் பெயர்தலையுடைய சுழிபோல உத்தமவிலக்கணங்கள் நிறைந்த நாபியினையும்.

றுண்டெனா வுணரா வுயவு நடுவின்
வண்டிருப் பன்ன பல்காழ் .........
௪0 லிரும்பிடித் தடக்கையிற் செறிந்துதிரள் குறங்கிற்
பொருந்துமயி ரொழுகிய திருந்துதாட் கொப்ப
வருந்துநாய் நாவிற் பெருந்தகு சீறடி
யரக்குருக் கன்ன செந்நில னொதுங்கலிற்
பரற்பகை யுழந்த நோயொடு சிவணி
௪௫ மரற்பழுத் தன்ன மறுகுநீர் மொக்கு

---

38. உண்டெனா உணரா உயவும் நடுவின் - உண்டென்று பிறருணரப்படாத வருந்துமிடையினையும்,

'உயவின்' என்று பாடமாயின், வருந்துதலையுடையவென்க.

39. வண்டு இருப்பு அன்ன பல் காழ் ........... - பல வண்டினங்களின் இருப்பையொத்த பலமணிகோத்த வடங்களையுடைய மேகலையையும், .................

காழ் - ஆகுபெயர்.

கு - பு. காழ் - மணிக்கோவை, "பாடுவண் டிருந்த வன்ன பல்கலை" என்றார்; (சீவக. ௬௨, ௨).

40. இரு பிடி தட கையின் செறிந்து திரள் குறங்கின் - பெரிய பெண்யானையினுடைய பெருமையையுடைய கைபோல ஒழுகவந்து மெல்லிதாகத் தம்மில்நெருங்கி ஒன்றித்திரண்ட துடையினையும்,

கு - பு. ஒழுக - நீள.

41. பொருந்து மயிர் ஒழுகிய திருந்து தாட்கு ஒப்ப - இலக்கணமென்றற்குப் பொருந்தின மயிர் ஒழுங்குபட்ட ஏனையிலக்கணங்கள்திருந்தின கணைக்காலுக்குப் பொருந்த,

42. வருந்து நாய் நாவின் - ஓடியிளைத்த நாயினது நாப்போல,

42. பெரு தகு சிறு அடி - பெருமை தக்கிருக்கும சிறிய அடியினையுமுடைய, பாடினி (௪எ) என்க.

பெருவென்னுமுதனிலை பெருமையையுணர்த்திநின்றது.

கு - பு. "மதந்தபுளுமலி நாவி னன்ன துளங்கியன் மெலிந்தகல் பொருசீறடி" என்பது மலைபடுகடாம், ௪௨ - ௪௩.

43. அரக்கு உருக்கு அன்ன செந்நிலன் ஒதுங்கலின் - சாதிலிங்கத்தை உருக்கின தன்மையொத்த செய்யநிலத்தே நடக்கையினாலே,

44. பரல் பகை உழந்த நோயொடு சிவணி - சுக்கான்கல்லாகிய பகையாலே வருந்தின நோயோடேபொருந்தி,

45. மரல் பழுத்தன்ன மறுகு நீர் மொக்குள் - மரல்பழுத்தாற்போன்ற துளும்புநீரையுடைய கொப்புளம்;

ணன்பக லந்தி நடையிடை விலங்கலிற்
பெடைமயி லுருவிற் பெருந்தகு பாடினி
பாடின பாணிக் கேற்ப நாடொறுங்

[கடவுள் வழிபாடு:]

களிறு வழங்கதர்க் கானத் தல்கி
யிலையின் மராத்த வெவ்வந் தாங்கி
வலைவலந் தன்ன மென்னிழன் மருங்கிற்
காடுறை கடவுட்கடன் கழிப்பிய பின்றைப்

[கேட்பாயென்று நயம்படக்கூறல்:]

பீடுகெழு திருவிற் பெரும்பெயர் நோன்றாண்
முரசுமுழங்கு தானை மூவருங் கூடி

---

46. நல் பகல் அந்தி நடை இடை விலங்கலின் - நன்றாகிய உச்சிக் காலமான சந்தியிலே நடத்தலை நடுவே தவிர்த்தலாலே,

தவிர்த்தலாலே, அல்கி (சகூ) என்க.

கு - பு. கொப்புளம் தவிர்த்தலாலேயென்க; கொப்புளம்தோன்றின மையின், நடத்தலொழிந்தாள்.

47 பெடை மயில் உருவின் - பெடைமயில் அருகுநின்ற மயில்போலும் சாயலினையுடைய,

47. பெரு தகு பாடினி - கல்விப்பெருமை தக்கிருக்கின்ற பாடினி,

கு - பு. பாடினி - பாடுபவள்; இவள்விறலியென்றும் பாணிச்சியென்றும் கூறப்படுவள்.

48. பாடின பாணிக்கு ஏற்ப - பாடின தாளத்திற்குப் பொருந்த,

48 - 49. நாடொறும் களிறு வழங்கு அதர் கானத்து அல்கி - நாடோறும் யானையுலாவரும் வழியையுடைய காட்டிடத்தே தங்கி,

50. இலை இல் மராத்த - இலையில்லாத மராமரத்திடத்துள்ள,

50. எவ்வம் தாங்கி - சூரியவெப்பத்தால்வந்த துன்பத்தைத் தாங்குத லால்,

51. வலை வலந்தன்ன மெல் நிழல் மருங்கில் - வலையை மேலேகட்டினா லொத்த மெல்லிய நிழலினிடத்தே,

52. காடு உறை கடவுள் கடன் கழிப்பிய பின்றை - காட்டின்கண்ணே தங்குகின்ற தெய்வத்திற்கு மனமகிழ்ச்சியாகச்செய்யும் முறைமைகளைச் செய்துவிட்டபின்பு,

கடன்கழித்தல் - தடாரியைவாசித்தல்.

கு - பு. தடாரி - ஒருவகைப்பறை.

53 - 54. பீடு கெழு திருவின் பெரு பெயர் நோன் தாள் முரசு முழங்கு தானை மூவரும் கூடி - பெருமைபொருந்தின செல்வத்தையும் பெரிய பெயர்களையும் வலியையுடைய முயற்சியையும் வெற்றிமுரசுமுழங்கும் படையினையுமுடைய சேரசோழபாண்டியர் தம்மிற் பகைமைநீங்கிச் சேர்ந்து,

யரசவை யிருந்த தோற்றம் போலப்
பாடல் பற்றிய பயனுடை யெழாஅற்
கோடியர் தலைவ கொண்ட தறிந
வறியா மையி னெறிதிரிந் தொராஅது
தாற்றெதிர்ப் படுதலு நோற்றதன் பயனே
போற்றிக் கேண்மதி புகழ்மேம் படுந
வாடுபசி யுழந்தநின் னிரும்பே ரொக்கலொடு
நீடுபசி யொராஅல் வேண்டி னீடின்
றெழுமதி வாழி யேழின் கிழவ

---

55. அரசவை இருந்த தோற்றம் போல - செல்வக்குறைபாடின்றி அரசிருத்தற்குரிய அவையாகவிருந்த தோற்றரவுபோல,

பாட்டு, நிருத்தகீதவாச்சியத்தை யுடைமையின், அரசரோடு உவமித்தார்.

56 - 57. பாடல் பற்றிய பயன் உடை யெழாஅல் கோடியர் தலைவ - மிடற்றுப்பாடலைத் தொடங்கி எழுந்திருந்த பயன்களைத் தன்னிடத்தேயுடைத்தாகிய யாழையுடைய கூத்தர்க்குத்தலைவனே,

இவன் போர்க்களம்பாடும் பொருநனுதலானும், கூத்தரில் இவனிற்சிறந்த கூத்தர் இன்மையானும் இங்ஙனங் கூறினர்.

57. கொண்டது அறிந - பிறர் மனத்துக்கொண்டதனைக் குறிப்பால் அறியவல்லாய்,

58. அறியாமையின் நெறி திரிந்து ஒராஅது - வழியறியாமையினாலே இவ்வழியைத்தப்பி வேறொருவழியிற் போகாதே,

59. ஆற்று எதிர்ப்படுதலும் நோற்றதன் பயனே - இவ்வழியிலே என்னைக்காண்டலும் நீமுற்பிறப்பிற்செய்த நல்வினைப்பயனே,

60. புகழ் மேம்படுந போற்றி கேண்மதி - புறத்தார்புகழை அரசவைகளிலே மேம்படுத்தவல்லாய், யான் கூறுகின்றவற்றை விரும்பிக்கேட்பாயாக;

61 - 62. ஆடு பசி உழந்த நின் இரு பேர் ஒக்கலொடு நீடு பசி ஒராஅல் வேண்டின் - அடுகின்ற பசியாலேவருந்தின நின்னுடைய கரிய பெரிய சுற்றத்தோடே தொன்றுதொட்டுவந்தபசி நின்னைக் கைவிடுதலை விரும்புவையாயின்,

62 - 63. நீடு இன்று எழுமதி - நீட்டித்தலின்றி எழுந்திருப்பாயாக;

த - பு. மதி - முன்னிலையசை.

63. வாழி - நீவாழ்வாயாக;

63. எழின் கிழவ - குரல் துத்தம் கைக்கிளை உழை இளி விளரி தாரமென்னு நரம்பு எழின்கண் உரிமையுடையாய்,

[தன்வரலாறுகூறல்:]

பழுமர முள்ளிய பறவையின் யானுமவ
னிழுமென் சும்மை யிடனுடை வரைப்பி
னசையுநர்த் தடையா நன்பெரு வாயி
லிசையேன் புக்கென் னிடும்பை தீர
வெய்த்த மெய்யே னெய்யே னாகிப்
பைத்த பாம்பின் றுத்தி யேய்ப்பக்
கைக்கச டிருந்தவென் கண்ணகன் றடாரி
யிருசீர்ப் பாணிக் கேற்ப விரிகதிர்
வெள்ளி முளைத்த நள்ளிருள் விடிய
லொன்றியான் பெட்டா வளவையி னொன்றிய
கேளிர் போலக் கேள்கொளல் வேண்டி

---

64. யானும் பழுமரம் உள்ளிய பறவையின் - செல்வமெய்தியயானும் முன்பு பழுத்தமரத்தை நினைத்துச்செல்கின்ற புட்போல,

64 - 65. அவன் இழுமென் சும்மை இடன் உடை வரைப்பின் - அவனுடைய இழுமென்றெழும் ஓசையினையுடைய அகலமுடைத்தாகிய மதிலில்,

66. நசையுநர் தடையா நல் பெரு வாயில் - நச்சிவந்தார்க்குத் தடையில்லாத நன்றாகிய பெரிய கோபுரவாயிலின்கண்ணே,

கு - பு. "பொருநர்க் காயினும் புலவர்க்காயினு, மருமறை நாவி னந்தணர்க்காயினும்......அடையா வாயில்" என்பது சிறுபாணாற்றுப்படை, ௨௦௬ - ௨௦௯.

67. இசையேன் புக்கு - வாயிலோனுக்குக் கூறாமற்புகுந்து,

67. என் இடும்பை தீர - என்னுடைய வறுமைத்துன்பம் தீர்தல் காரணமாக,

68. எய்த்த மெய்யேன் எய்யேனாகி - முன்பு இளைத்த உடம்பையுடைய யான் அவ்வாயிற்குள்ளேசென்ற உவகையாலே பின்பு இளைப்புத் தீர்ந்து,

69 - 70. பைத்த பாம்பின் துத்தி எய்ப்ப கை கசடு இருந்த என் கண் அகல் தடாரி - படம்விரித்த பாம்பினது பொறியையொப்பக் கையினது வடுப்பட்டுக்கிடந்த எனது கண்ணகன்ற உடுக்கையிற் றோற்றுவித்த,

71. இரு சீர் பாணிக்கு ஏற்ப - இரட்டைத்தாளத்திற்குப் பொருந்த,

71 - 72. விரி கதிர் வெள்ளி முளைத்த நள் இருள் விடியல் - விரிகின்ற கிரணங்களையுடைய வெள்ளியெழுந்த செறிந்த இருளையுடைய விடியற் காலத்தே,

73. ஒன்று யான்பெட்டா அளவையின் - ஒருபாட்டினை யான் பேணிப்பாடுவதற்கு முன்னே,

கு - பு. பொருந்தப் பாடுதற்கு முன்னேயென்க. விடியற்காலத்தே சென்று பாடுதல் பொருநர்க் கியல்பு.

73 - 74. ஒன்றிய கேளிர் போல கேள் கொளல் வேண்டி - முன்பே தன்னோடுபொருந்திய நட்டாரைப்போல என்னுடன் உறவுகொள்ளுதலை விரும்பி,

வேளாண் வாயில் வேட்பக் கூறிக்
கண்ணிற் காண நண்ணுவழி யிரீஇப்
பருகு வன்ன வருகா நோக்கமொ
டுருகு பவைபோ லென்பு குளிர்கொளீஇ
யீரும் பேனு மிருந்திறை கூடி
வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த
துன்னற் சிதாஅர் துவர நீக்கி
நோக்கு நுழை கல்லா நுண்மைய பூக்கனிந்
தரவுரி யன்ன வறுவை நல்கி
மழையென மருளு மகிழ்செய் மாடத்

---

75. வேளாண் வாயில் வேட்ப கூறி - தான் உபகரித்தற்கு வழியாகிய இரப்பினையே யான்எப்பொழுதும் விரும்பும்படி உபசாரங்களைக்கூறி,

கு - பு. "கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின், றிரப்புமோ ரேஎ ருடைத்து" என்பது திருக்குறள், க0௫௩.

76. கண்ணில் காண நண்ணு வழி இரீஇ - தன் கண்ணிலேகாணும்படி தனக்குஅண்ணிதானஇடத்திலே என்னை இருத்தி,

77. பருகு அன்ன அருகா நோக்கமொடு - கண்ணாற்பருகுந் தன்மையையொத்த கெடாத பார்வையாலே,

78. உருகுபவைபோல் என்பு குளிர்கொளீஇ - உருகும் மெழுகுமுதலியனபோல் நெகிழும்படி என்பைக்குளிர்வித்து,

நோக்கத்தாலே (எஎ) குளிர்கொளீஇ (78) யென்க.

79. ஈரும் பேனும் இருந்து இறைகூடி - ஈரும்பேனும் கூடியிருந்து அரசாண்டு,

80 - 81. வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த துன்னல் சிதாஅர் துவர் நீக்கி - வேர்வையாலேநனைந்து சீலைகள் உள்ளேயோடுதற்குக் காரணமாகிய தைத்தற்றொழிலையுடைய சீலையை என்னிடத்தினின்றும் முற்றப் போக்கி,

82 - 83. நோக்கு நுழைகல்லா நுண்மைய பூ கனிந்து அரவு உரி அன்ன அறுவை நல்கி - கண்ணிற்பாவை இஃது இழைபோனவழியென்று குறித்துப் பார்க்கவாராத நுண்மையையுடையவாய்ப் பூத்தொழில் முற்றுப் பெற்றதன்மையாற் பாம்பினது தோலையொத்த துகிலை நல்கி,

கு - பு. "பையர வுரியினன்ன நடைப்படாம்" என்பர்; (திருவிளை. திருமண. கசஎ).

84. மழை என - மேகத்தைப்போல,

84. மருளும் மகிழ் - உண்டார்மயங்குதற்குக் காரணமாகியகள்ளை,

மகிழ் - ஆகுபெயர்,

84. செய்மாடத்து - அலங்கரித்துச் செய்யப்பெற்ற மாடத்தின் கண்ணே.

இழையணி வனப்பி னின்னகை மகளிர்
போக்கில் பொலங்கல நிறையப் பல்கால்
வாக்குபு தரத்தர வருத்தம் வீட
வார வுண்டு பேரஞர் போக்கிச்
செருக்கொடு நின்ற காலை மற்றவன்
திருக்கிளர் கோயி லொருசிறைத் தங்கித்
தவஞ்செய் மாக்க டம்முடம் பிடாஅ
ததன்பய மெய்திய வளவை மான
வாறுசெல் வருத்த மகல நீக்கி

---

85. இழை அணி வனப்பின் இன் நகை மகளிர் - ஆபரணங்களையணிந்த அழகினையுடைய பாட்டாலும் கூத்தாலும் வார்த்தையாலும் அரசனுக்கு இனியமகிழ்ச்சியைச் செய்யுமகளிர்,

"இன்னகை யாயமோ டிருந்தோற் குறுகி" (௨௨௦) என்றார், சிறுபாணாற்றிலும்.

86. போக்கு இல் பொலம் கலம் நிறைய - ஓட்டற்ற பொன்னாற்செய்த வட்டில்நிறைய,

86 - 87. பல்கால் வாக்குபு தரத்தர - பலமுறை வார்த்துத்தரத்தர,

87 - 88. வருத்தம் வீட ஆர உண்டு பெரு அஞர் போக்கி - வழிவந்த வருத்தம் போம்படி நிறையவுண்டு கள்ளுண்ணப்பெறுகிலேமென்று நெஞ்சிற்கிடந்த பெரிய வருத்தத்தையும்போக்கி,

89. செருக்கொடு நின்ற காலை - மகிழ்ச்சியுடனே நான்நின்ற அந்திக்காலத்தே,

89 - 90. மற்று அவன் திரு கிளர் கோயில் ஒருசிறை தங்கி - இங்ஙனம் மிடிதீர்ந்தபின்பு அவனுடைய செல்வம்விளங்குகின்ற கோயிலில் ஒருபுக்கத்தே கிடந்து,

அவனைச் சேவித்துநிற்கின்ற நங்குலத்திலுள்ள மகளிர் (௮௫) பொலங்கலநிறைய (௮௬) மகிழை (௮௬) வார்த்துத் தரத்தர (௮௭) உண்டு போக்கிக் (௮௮) கோயிலில் ஒருசிறைத் தங்கியென முடிக்க.

91 - 92. தவம் செய் மாக்கள் தம் உடம்பு இடாஅது அதன் பயம் எய்திய அளவை மான - மிக்க தவத்தைச்செய்கின்ற மாக்கள் தம்முடைய தவஞ்செய்தஉடம்பைப் போகடாதேயிருந்து அத்தவத்தாற்பெறும் பயனைப் பெற்ற தன்மையையொப்ப,

மக்களென்னாது மாக்களென்றார், வீடுபேறு குறியாது செல்வத்தைக் குறித்தலின்.

93. ஆறு செல் வருத்தம் அகல நீக்கி - வழிபோனவருத்தத்தை என்னிடத்துச் சிறிதும் இல்லாமற்போக்கி,

யனந்தர் நடுக்க மல்லதி யாவது
மனங்கவல் பின்றி மாழாந் தெழுந்து
மாலை யன்னதோர் புன்மையுங் காலைக்
கண்டோர் மருளும் வண்டுசூழ் நிலையுங்
கனவென மருண்டவென் னெஞ்சே மாப்ப
வல்லஞர் பொத்திய மனமகிழ் சிறப்பக்
கல்லா விளைஞர் சொல்லிக் காட்டக்
கதுமெனக் கரைந்து வம்மெனக் கூஉ

---

94 - 95. அனந்தர் நடுக்கம் அல்லது யாவதும் மனம் கவல்பு இன்றி மாழாந்து எழுந்து - கள்ளின் செருக்காலுண்டான மெய்ந்நடுக்கமல்லது சிறிதும் வேறுமனக்கவற்சியின்றி மயங்கிப் பின் துயிலுணர்ந்து,

கவல்பு - கவற்சியெனப் பெயராய் நின்றது.

96. மாலை அன்னது ஓர் புன்மையும் - யான் அவனைக் காண்பதற்கு முன்னாளின் மாலைக்காலத்தில் என்னிடத்தில்நின்ற சொல்லிற்கு எட்டாத சிறுமையையும்,

அன்னது - சேய்மைச்சுட்டு.

96 - 97. காலை கண்டோர் மருளும் வண்டு சூழ் நிலையும் - அவனைக் கண்ட மற்றை நாட்காலத்தில் என்னைக்கண்டவர் நெருநல்வந்தவனல்லனென்று மருளுதற்குக் காரணமான வண்டுகள் இடையறாதுமொய்க்கின்ற தன்மையையும் கண்டு,

பல் நறுநாற்றங்களும் தானுடைமையின், 'வண்டுசூழ் நிலை' என்றான்.

98. கனவென மருண்ட என் நெஞ்சு ஏமாப்ப - இது கனவாயிருக்குமென்று கலங்கிய என்னுடையநெஞ்சு நனவென்று துணிய,

99. வல் அஞர் பொத்திய மனம் மகிழ் சிறப்ப - வலிய மிடியாலுண்டாகிய வருத்தம்பொதிந்த கூட்டத்தார்மனம் மகிழ்ச்சி மிக,

100. கல்லா இளைஞர் சொல்லி காட்ட - அவற்குரியபுகழ்களைத் தாங்கள் முற்றக்கற்று என்பின்னின்ற இளையவர் அவற்றைச் சொல்லிக்காட்ட,

கல்லாவென்பது, செய்யாவென்னுமெச்சம்; இனி, தத்தம் சிறுதொழிலன்றி வேறொன்றுங்கல்லாத இளைஞர், நெருநல்வந்தவன் இவனென்று அரசனுக்குச் சொல்லிக்காட்ட வென்றுமாம். என்றது, இவனது வேறுபாடு கூறிற்றும்.

101. கதுமென கரைந்து வம்மென கூஉய் - அதுகேட்டு அவர்களைக் கடுகவழைத்துவாருமென்று வாயிலோர்க்குக்கூறி யாங்கள் சென்றபின் தான் அணுகவாருமென்று அழைக்கையினாலே,

யதன்முறை கழிப்பிய பின்றைப் பதனறிந்து
துராஅய்த் துற்றிய துருவையம் புழுக்கின்
பராரை வேவை பருகெனத் தண்டிக்
காழிற் சுட்ட கோழூன் கொழுங்குறை
யூழி னூழின் வாய்வெய் தொற்றி
யவையவை முனிகுவ மெனினே சுவைய
வேறுபல் லுருவின் விரகு தந்திரீஇ
மண்ணமை முழவின் பண்ணமை சீறியா
ழொண்ணுதல் விறலியர் பாணி தூங்க

---

"ஏனோருந் தம்மென" (மதுரைக்காஞ்சி, எசள) என்புழித் தம்மென்பது தாருமெனநின்றாற்போல வம்மென்பது வாருமென்னும் பொருட்டாய் நின்றது.

102. அதன் முறை கழிப்பிய பின்றை - அக்காட்சியிடத்துச் செய்யு முறைமைகளை யாங்கள் செய்துமுடித்தபின்பு,

102. பதன் அறிந்து - காலமறிந்து,

103 - 104. துராஅய் துற்றிய துருவை அம் புழுக்கின் பராரை வேவை பருகென தண்டி - அறுகம்புல்லாற்றிரித்த பழுதைதின்ற செம்மறிக் கிடாயினது அழகினையுடைய புழுக்கினதசையிற் பரிய மேற்குறங்கு நெகிழ வெந்ததனை விழுங்கென்று பலகாலலைத்து,

105 - 106. காழில் கோழூன் சுட்ட கொழு குறை வெய்து வாய் ஊழின் ஊழின் ஒற்றி - இருப்பு நாராசத்தே கொழுத்த இறைச்சிகளைக் கோத்துச் சுட்ட கொழுவிய பெரியதசைகளின் வெம்மையை வாயிடத்தே இடத்தினும்வலத்தினுஞ்சேர்த்தி ஆற்றித்தின்று,

107. அவை அவை முனிகுவம் எனினே - புழுக்கின இறைச்சியையும் சுட்டிறைச்சியையும் யாங்கள் இனி வேண்டேமென்கையினாலே,

107 - 108. சுவைய வேறு பல் உருவின் விரகு தந்து இரீஇ - இனிமையுடையவாய் வெவ்வேறாகிய பலவடிவினையுடைய பணியாரங்கள்கொண்டுவந்து அவற்றைத் தின்னும்படி எங்களையிருத்தி,

உபாயங்களாற் பண்ணப்படுதலின், விரகென்றார்; ஆகுபெயர்.

109 - 110. பண் அமை சீறியாழ் ஒண்ணுதல் விறலியர் மண் அமை முழவின் பாணி தூங்க - பண்குறைவற்ற சிறிய யாழையும் ஒள்ளிய நுதலினையுமுடைய விறல்படப்பாடியாடுவார் மார்ச்சனையமைந்த முழவினது தாளத்திற்கு ஆடும்படி,

ரு - பு. விறலை வடநூலார் சத்துவ மென்பர்.

மகிழ்ப்பதம் பன்னாட் கழிப்பி யொருநா
ளவிழ்ப்பதங் கொள்கென் றிரப்ப முகிழ்த்தகை
முரவை போகிய முரியா வரிசி
விரலென நிமிர்ந்த நிரலமை புழுக்கல்
பால்வறைக் கருனை காடியின் மிதப்ப
வயின்ற காலைப் பயின்றினி திருந்து
கொல்லை யுழுகொழு வேய்ப்பப் பல்லே
யெல்லையு மிரவு மூன்றின்று மழுங்கி
யுயிர்ப்பிடம் பெறாஅ தூண்முனிந் தொருநாட்

---

111. மகிழ் பதம் பன்னாள் கழிப்பி - மகிழ்ச்சியையுடைய கள்ளுண்டலிலே பலநாள்போக்கி,

இனி, பதம் - காலமுமாம்.

111 - 112. ஒருநாள் அவிழ் பதம் கொள்க என்று இரப்ப - ஒருநாள் சோறாகியஉணவையும் கொள்வாயாகவென்று வேண்டிக்கொள்கையினாலே,

கு - பு. அவிழ் - பருக்கை.

112 - 114. முகிழ் தகை முரவை போகிய முரியா அரிசி விரலென நிமிர்ந்த நிரல அமை புழுக்கல் - முல்லையரும்பின் தகைமையினையுடைய வரியற்ற இடைமுரியாத அரிசி விரலென்னும்படி நெடுகின ஒன்றோடொன்றுசேராத சோற்றையும்,

பழுத்தவரிசியை ஆக்கினமைதோன்ற நிரலமை புழுக்கலென்றார்.

115 - 116. பால் வறை கருனை காடியின் மிதப்ப அயின்ற காலை - பாலைப் பொரித்ததனோடேகூடிய பொரிக்கறிகளையும் கழுத்திடத்தேவந்து நிரம்பும்படி விழுங்கினகாலத்தே,

இனி காடியைப் புளிங்கறியாக்கிப் புளிங்கறியோடே நிரம்ப விழுங்கின காலையென்றுமுரைப்பர்.

கு - பு. "முரவை போகிய முரிவில்வான் மூரல் பால் வறையல், கருனை" (திருவிளை. குண்டோதரனுக்கு. கச) என்பது இந்தப் பகுதியைத் தழுவி வந்தமை காண்க.

116. பயின்று இனிது இருந்து - அவனைவிடாதே இனிதாகவிருந்து,

117 - 118. பல்லே கொல்லை உழு கொழு ஏய்ப்ப எல்லையும் இரவும் ஊன் தின்று மழுங்கி - எம்முடையபற்கள் கொல்லைநிலத்தேயுழுத கொழுவையொப்பப் பகலும்இரவும் இறைச்சியைத்தின்று முனைமழுங்கி,

119. உயிர்ப்ப இடம் பெறாஅது ஊண் முனிந்து - இளைப்பாற இடம் பெறாதே இவ்வுணவுகளை வெறுத்து,

முற்கூறியனவெல்லாம் உண்டற்றொழிற்கு உரிமையுடைமையின், 'ஊண்முனிந்து' என்றார்.

119. ஒருநாள் - ஒருநாளில்,

செயிர்த்தெழு தெவ்வர் திறைதுறை போகிய
செல்வ சேறுமெந் தொல்பதிப் பெயர்ந்தென
மெல்லெனக் கிளந்தன மாக வல்லே
யகறி ரோவெம் மாயம் விட்டெனச்
சிரறிய வன்போற் செயிர்த்த நோக்கமொடு
துடியடி யன்ன தூங்குநடைக் குழவியொடு
பிடிபுணர் வேழம் பெட்டவை கொள்கெனத்
தன்னறி யளவையிற் றரத்தர யானு
மென்னறி யளவையின் வேண்டுவ முகந்துகொண்

---

120 - 121. செயிர்த்து எழு தெவ்வர் திறை துறை போகிய செல்வ - குற்றத்தைச்செய்தெழுந்த பகைவரைத் திறைகொள்ளும் கூறுபாடுகளெல்லாம் முடியப்போன செல்வா,

121 - 122. பெயர்ந்து எம் தொல் பதி சேறுமென மெல்லென கிளந்தனமாக - இனி மீண்டு எம்முடைய பழைய ஊரிடத்தே செல்வேமென்று மெத்தெனச் சொன்னேமாக,

'தொல்பதி' என்றார், இதுவும் தமக்குப்பதியென்பது தோன்ற.

122. வல்லே - விரைவில்,

123 - 124. சிரறியவன் போல் செயிர்த்த நோக்கமொடு எம் ஆயம் விட்டு அகறிரோ என - அதுகேட்டுக் கோபித்தான்போல எமக்குவருத்தத்தைச்செய்த பார்வையுடனே எம்கிளைக் கைவிட்டுப் போகின்றீரோவெனச் சொல்லி,

125. துடி அன்ன அடி தூங்குநடை குழவியொடு - உடுக்கையின் கண்ணையொத்த அடிகளையும் அசைந்த நடையினையுமுடைய கன்றுகளுடனே,

கு - பு. கன்று - யானைக்கன்று.

126. பிடி புணர் வேழம் கொள்க என - பிடியொடுபுணர்ந்த களிறுகளைக் கைக்கொள்வாயாகவென்று சொல்லி,

126 - 127. பெட்டவை தன் அறி அளவையில் தரத்தர - பின்னும் தான்விரும்பியிருந்த ஊர்திகள் ஆடைகள் அணிகலங்கள் முதலியவற்றைத் தான் அறிந்தஅளவாலே மேன்மேலேதர,

127 - 128. யானும் என் அறி அளவையின் வேண்டுவ முகந்துகொண்டு - யானும் என்னுடையகுறைகளை யானறிந்த அளவாலே வேண்டுவனவற்றை வாரிக்கொண்டு,

டின்மை தீர வந்தனென் வென்வே
[தலைவனுடையதந்தை:]
உருவப் பஃறே ரிளையோன் சிறுவன்
[தலைவன்:]
முருகற் சீற்றத் துருகெழு குரிசி
றாய்வயிற் றிருந்து தாய மெய்தி
யெய்யாத் தெவ்வ ரேவல் கேட்பச்

---

129. இன்மை தீர வந்தனென் - மிடி எக்காலமும் இல்லையாம்படி வந்தேன்;

யானும் அவன் (௬௪) வரைப்பின் (௬௫) வாயிற்கண்ணே (௬௬) புக்கு என் இடும்பைதீர்தல் காரணமாக (௬௭) எய்யேனாகி (௬௮) விடியற்காலத்தே (௭௨) ஒன்று யான்பெட்டாவளவையிற் (௭௩) கொளல்வேண்டிக் (௭௪) கூறி (௭௫) இருத்தி (௭௬) நோக்கத்தாலே (௭௭) குளிர்கொளுத்திச் (௭௮) சிதார் நீக்கி (௮௧) நல்கி (௮௩) மகளிர் (௮௫) மகிழை (௮௪) வார்த்துத்தரத்தர (௮௭) உண்டு போக்கி (௮௮) நின்றகாலைத் (௮௯) தங்கி (௯0) நீக்கி (௯௩) எழுந்து (௯௫) ஏமாப்பச் (௯௮) சொல்லிக்காட்டக் (௧00) கூவுகையினாலே (௧0௧) கழிப்பியபின்றைத் (௧0௨) தண்டி (௧0௪) ஒற்றி (௧0௬) வேண்டேமென்கையினாலே (௧0௭) இரீஇத் (௧0௮) தூங்கக் (௧௧0) கழிப்பி (௧௧௧) இரப்ப (௧௧௨) அயின்றகாலத்திலே இருந்து (௧௧௬) மழுங்கி (௧௧௮) முனிந்து (௧௧௯) சேறுமென (௧௨௧) ஒருநாட் (௧௧௯) கிளந்தனமாக (௧௨௨), அகறிரோவெனச் சொல்லித் (௧௨௩) தரத்தர யானும் (௧௨௭) தவஞ்செய்மாக்கள் (௯௧) அதன் பயமெய்திய அளவைமான (௯௨) வேண்டுவ முகந்துகொண்டு (௧௨௮) இன்மைதீர வந்தனென் (௧௨௯) என வினைமுடிக்க.

129 - 130. வென் வேல் உருவ பல் தேர் இளையோன் சிறுவன் - வென்றிவேலினையும் அழகினையுடைய பலதேரினையுமுடைய இளஞ்சேட்சென்னியுடைய புதல்வன்,

131. முருகன் சீற்றத்து உரு கெழு குரிசில் - முருகனது சீற்றம்போலும் சீற்றத்தையுடைய உட்குதல்பொருந்திய தலைவன்,

கு - பு. உட்குதல் - பிறர் அஞ்சுதல்.

132. தாய் வயிற்று இருந்து தாயம் எய்தி, பிறந்து (௧௩௭) - தாயுடைய வயிற்றிலேயிருந்து அரசவுரிமையைப்பெற்றுப் பிறந்து,

தான் பிறக்கின்றகாலத்துப் பிறவாதே நல்லமுகூர்த்தம் வருமளவும் தாயுடையவயிற்றிலேயிருந்து பிறக்கையினாலே அரசவுரிமையைப்பெற்றென்றார்.

கு - பு. "உருகெழு தாய மூழி னெய்தி" என்பது, **பட்டினப்பாலை**, ௨௨௭.

133. எய்யா தெவ்வர் ஏவல் கேட்ப - முன்பு தன்வலியறியாத பகைவர் பின்பு தன்வலியினையறிந்து ஏவினதொழிலைச் செய்ய,

செய்யார் தேஎந் தெருமரல் கலிப்பப்
பௌவ மீமிசைப் பகற்கதிர் பரப்பி
வெவ்வெஞ் செல்வன் விசும்புபடர்ந் தாங்குப்
பிறந்துதவழ் கற்றதற் றொட்டுச் சிறந்தநன்
னாடுசெகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப
வாளி நன்மா னணங்குடைக் குருளை
மீளி மொய்ம்பின் மிகுவலி செருக்கி
முலைக்கோள் விடாஅ மாத்திரை ஞெரேரெனத்
தலைக்கோள் வேட்டங் களிறட் டாஅங்
கிரும்பனம் போந்தைத் தோடுங் கருஞ்சினை
யரவாய் வேம்பி னங்குழைத் தெரியலு

---

134. செய்யார் தேஎம் தெருமரல் கலிப்ப - ஏவல்செய்யாத பகைவர் தேசம் மனக்கவற்சிபெருக,

135 - 136. வெம் வெம் செல்வன் பௌவம் மீமிசை பகல் கதிர் பரப்பி விசும்பு படர்ந்தாங்கு - வெம்மையையுடைய எல்லாராலும்விரும்பப் படும் இளஞாயிறு கடலின்மீதே பகற்பொழுதைச்செய்யுங் கிரணங்களைப் பரப்பிப் பின்னர் விசும்பிலே மெத்தெனச்சென்றாற்போல,

137. பிறந்து—,

137. தவழ் கற்றதன் தொட்டு - தவழ்தலைக் கற்றநாள் தொடங்கி,

137 - 138. சிறந்த நல் நாடு செகில் கொண்டு நாடொறும் வளர்ப்ப - ஏனையோர்நாட்டிற்சிறந்தநாட்டைத் தோளிலேவைத்துக்கொண்டு நாடோறும் வளர்த்தல்காரணமாக,

139. ஆளி நல் மான் அணங்கு உடை குருளை - ஆளியாகிய நல்லமாவினது வருத்துதலையுடையகுட்டி,

140. மீளி மொய்ம்பின் மிகு வலி செருக்கி - கூற்றுவனுடைய வலியிற்காட்டின் மிகுகின்றவலியாலே கலித்து,

141. முலை கோள் விடாஅ மாத்திரை - முலையையுண்டலைக் கைவிடாத இளையபருவத்தே,

யாளியை ஆளியென்றார். "கடிசொலில்லை" (தொல். எச்ச. ருசு) என்பதனான். "நாயே பன்றி" (தொல். மர. அ) என்னுஞ் சூத்திரத்து, 'ஆயுங் காலை' என்பதனாற் குருளையென்பது முடித்தாம்.

141. ஞெரேரென - கடுக,

142. தலை கோள் வேட்டம் களிறு அட்டாங்கு - முற்பட இரையைக் கோடற்குக்காரணமான வேட்டையிலே களிற்றைக் கொன்றாற்போல,

143. இரு பனம் போந்தை தோடும் - கரிய பனங்குருத்தில் அலர்ந்த வலப்பக்கத்து ஓலையும்,

"தோடேமடலே" (தொல். மர. அசு) என்னுஞ் சூத்திரத்து, 'பிறவும்' என்றதனாற் போந்தைமுடித்தாம்; அதனிடத்தினின்றும் போந்ததனாற் போந்தையென்றார்.

143 - 144. கரு சினை வேம்பின் அரம் வாய் அம் குழை தெரியலும் -

மோங்கிருஞ் சென்னி மேம்பட மிலைந்த
விருபெரு வேந்தரு மொருகளத் தவிய
வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாட்
கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்
றாணிழன் மருங்கி லணுகுபு குறுகித்
தொழுதுமுன் னிற்குவி ராயிற் பழுதின்

[தலைவனதுகொடை:]

றீற்றா விருப்பிற் போற்றுபு நோக்கிநுங்
கையது கேளா வளவை யொய்யெனப்

---

கரிய கொம்பினையுடைய வேம்பினுடைய வாளரத்தின் வாய்போலும் விளிம்பினையுடைய அழகிய தளிராற்செய்த மாலையும்,

145 - 146. ஓங்கு இரு சென்னி மேம்பட மிலைந்த இரு பெரு வேந்தரும் ஒருகளத்து அவிய - நறிய மாலைகளில் மேலாதற்குக் காரணமான பெரிய தலையிலே ஏனையோர்சூடும் அடையாளப்பூக்களிற் சிறப்ப அவற்றைச்சூடிய சேரனும் பாண்டியனும் ஒருகளத்தே படும்படி,

147 - 148. வெண்ணி தாக்கிய வெரு வரு நோன் தாள் கண் ஆர் கண்ணி கரிகால் வளவன் - வெண்ணியென்கின்ற ஊரிடத்தேபொருத அச்சந்தோன்றுகின்ற வலியையுடைய முயற்சியையும் கண்ணுக்கு அழகுநிறைந்த ஆத்திமாலையினையுமுடைய கரிகாற்சோழன்,

"முச்சக் கரமும்" என்னுங் கலியானே கரிகாலாதலுணர்க.

கு - பு. வெண்ணியென்னுமிடம், கரிகாலன் பகைவர்களைவென்ற போர்க்களமென்பதை, புறநானூறு, ௬௬ - ம் செய்யுளாலுமுணர்க; இது சோழநாட்டில் நீடாமங்கலத்திற்கு மேற்கேயுள்ளது; பாடல்பெற்ற சிவஸ்தலம்; 'கோவிலுண்ணி' என வழங்குகின்றது. "முச்சக்கரம்" என்னும் செய்யுளை, இப்புத்தகத்தின் இறுதிப்பக்கத்திற்காண்க.

தாயமெய்திப் (௧௩௨) பிறந்து (௧௩௭) தெவ்வர் எஃகேட்பச் (௧௩௩) செய்யார்தேஎம் தெருமரல்கலிப்ப (௧௩௪) நாடுசெகிற்கொண்டு நாடோறும் வளர்த்தல்காரணமாகக் (௧௩௮) குருளை (௧௩௯) களிறட்டாங்கு (௧௪௨) இருபெருவேந்தரும் அவியத் (௧௪௫) தாக்கிய (௧௪௭) கரிகால் வளவனெனமுடிக்க.

149 - 150. நிழல் மருங்கின் தாள் அணுகுபு குறுகி தொழுது - அருளைத் தன்னிடத்திலேயுடைய திருவடிகளை அண்ணிதாக நின்று சேர்ந்து வணங்கி,

150. முன் நிற்குவிராயின் - நும்முடைய வறுமைதோன்ற முன்னே நிற்பீராயின்,

150 - 151. ஈற்று ஆ விருப்பின் பழுதின்று போற்றுபு நோக்கி - ஈற்றுத்தொழிலையுடைய பசுத் தனதுகன்றுக்குப் பால்சுரந்துகொடுக்கவேண்டுமென்னும் விருப்பம்போல நும்மிடத்துநிற்கின்ற மிடி இன்றாம்படி பேணிப் பார்த்து,

151 - 152. நும் கையது கேளா அளவை - நும்மிடத்துள்ள கலையைத் தான்கேட்பதற்குமுன்னே,

152. ஒய்யென - கடுக,

பாசி வேரின் மாசொடு குறைந்த
துன்னற் சிதாஅர் நீக்கித் தூய
கொட்டைக் கரைய பட்டுடை நல்கிப்
பெறலருங் கலத்திற் பெட்டாங் குண்கெனப்
பூக்கமழ் தேறல் வாக்குபு தரத்தர
வைகல் வைகல் கைக்கவி பருகி
யெரியகைந் தன்ன வேடி றாமரை
சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி
நூலின் வலவா நுணங்கரின் மாலை
வாலொளி முத்தமொடு பாடினி யணியக்
கோட்டிற் செய்த கொடிஞ்சி நெடுந்தே

---

153 - 154. பாசி வேரின் மாசொடு குறைந்த துன்னல் சிதாஅர் நீக்கி - கொட்டைப்பாசியினது வேர்போலே அழுக்கோடேகுறைந்த தையலையுடைய துணிகளைப்போக்கி,

154 - 155. தூய கொட்டை கரைய பட்டுடை நல்கி - தூயவாகிய திரளமுடிந்தமுடிகளைக் கரையிலேயுடைய பட்டாகிய உடைகளைத் தந்து,

கொட்டை - தும்புமாம்.

கு - பு. திரளமுடிந்தமுடிக்குக் கொட்டையென்றுபெயருண்டு.

156. பெறல் அரு கலத்தின் பெட்டாங்கு உண்க என - பெறுதற்கரிய பொற்கலத்தே விரும்பினபடியே உண்பாயாகவென்றுசொல்லி,

157 - 158. பூ கமழ் கை கவி தேறல் வாக்குபு தர தர வைகல் வைகல் பருகி - தீம்பூ நாறுகின்ற தன்கடுமையாற் சிறிதமையுமென்று கைகவித்தற்குக்காரணமான கட்டெளிவை மேன்மேலே வார்த்துத் தரத்தர நாடோறும் நாடோறும் பருகுவித்து,

"தேட்கடுப் பன்ன நாட்படு தேறல்" (புறநானூறு, ருகூஉ) என்றார் பிறரும்.

கு - பு. தீம்பூ - மலர்விசேடம்.

159. எரி அகைந்தன்ன ஏடு இல் தாமரை - நெருப்புத் தழைத்தாலொத்த ஒருவன்செய்ததன்றித் தனக்கென இதழில்லாத தாமரையை,

என்றது பொற்றாமரைக்கு வெளிப்படை. "தோடே மடலே" (தொல். மர. அகூ) என்னுஞ் சூத்திரத்தே ஏடு கூறினார்.

160. சுரி இரு பித்தை பொலிய சூட்டி - கடைகுழன்ற கரியமயிரிலே பொலிவுபெறச்சூட்டி,

161 - 162. நூலின் வலவா நுணங்கு அரில் மாலை வால் ஒளி முத்தமொடு பாடினி அணிய - நூலாற்கட்டாத நுண்மையையும் பிணக்கத்தையுமுடைய பொன்னரிமாலையை வெள்ளிதாகிய ஒளியையுடைய முத்தத்தோடே பாடினிசூட,

163. கோட்டின் செய்த கொடிஞ்சி நெடு தேர் - யானைக்கொம்பாற் செய்த தாமரைமுகையினையுடைய நெடிய தேரிலே,

ரூட்டுளை துயல்வர வோரி நுடங்கப்
பால்புரை புரவி நால்குடன் பூட்டிக்
காலி னேழடிப் பின்சென்று கோலின்
றாறுகளைந் தேறென் றேற்றி வீறுபெறு
பேர்யாழ் முறையுளிக் கழிப்பி நீர்வாய்த்
தண்பணை தழீஇய தளரா விருக்கை
நன்பல் லூர நாட்டொடு நன்பல்
வெரூஉப்பறை நுவலும் பரூஉப்பெருந் தடக்கை
வெருவருஞ் செலவின் வெகுளி வேழந்

---

164. ஊட்டு உளை துயல்வர ஓரி நுடங்க - சாதிலிங்கமூட்டின தலையாட்டம்பொங்கக் கழுத்தின்மயிரசைய,

165. பால் புரை புரவி நால்கு உடன் பூட்டி - பாலையொத்த நிறத்தினையுடைய குதிரைகள் நான்கினைச் சேரப்பூட்டி,

நான்கு - நால்கெனப் பெயர்த்திரிசொல்.

து - பு. "நால்கு பண்ணினர் நால்வரு மேறினார்" என்பது சிந்தாமணி; (கஎக. உகஅ).

166. காலின் ஏழடி பின் சென்று - தன் காலாலே ஏழடிப் பின்னே வந்து,

ஏழடி வருதல் ஓர்மரபு; எழிசைக்கும் வழிபாடுசெய்தானாகக் கருதாதவின். "செலவினும்வரவினும்" (தொல். கிளவி. உஅ.) என்னுஞ் சூத்திரத்துப் பொதுவிதியால், சென்றென்பது வந்தென்னும்பொருட்டாய் நின்றது.

166 - 167. இன் தாறு கோல் களைந்து - செலுத்துதற்கினிதாகிய செலவுமுடுக்குங்கோலைப் போக்கி,

என்றதனாற் கடுவிசைக்கு இவர் இருத்தலாற்றாரென்றுகருதி இயற்கையிற்சேறல் அமையுமென்றார்.

167. ஏறு என்று ஏற்றி - இங்ஙனம் ஏறென்று ஏறவிட்டு,

167 - 168. வீறு பெறு பெரு யாழ் முறையுளி கழிப்பி - ஏனையாழ்களின் வீறுபெற்ற யாழ்ப்பாணர்க்குக் கொடுக்குமுறைமைகளை நினக்குத் தந்துவிட்டு,

168 - 170. நீர் வாய் தண் பணை தழீஇய தளரா இருக்கை நன் பல் ஊர நாட்டொடு - நீரை எப்பொழுதும் தன்னிடத்தேயுடைத்தாகிய தண்ணிய மருதநிலஞ்சூழ்ந்த அசையாத குடியிருப்பினையுடைய நன்றான பல ஊர்களையுடைய நாடுகளுடனே,

171. பறை வெரூஉ நுவலும் - பறை எல்லார்க்கும் அச்சத்தைச்சாற்றுதற்குக் காரணமாகிய,

170 - 172. பரூஉ பெரு தட கை வெரு வரும் செலவின் வெகுளி நன்பல் வேழம் - பருத்த பெரிய வளைவினையுடைய கையினையும் அச்சந்தோன்றும் ஓட்டத்தினையும் கோபத்தினையுமுடைய நன்றாகிய பலயானைகளை,

தரவிடைத் தங்கலோ விலனே வரவிடைப்
பெற்றவை பிறர்பிறர்க் கார்த்தித் தெற்றெனச்
செலவுகடைக் கூட்டுதி ராயிற் பலபுலந்து
நில்லா வுலகத்து நிலைமை தூக்கிச்
செல்கென விடுக்குவ னல்ல னொல்லெனத்

[சோழநாட்டுவளமும் திணைமயக்கமும்:]

திரைபிறழிய விரும்பௌவத்துக்
கரைசூழ்ந்த வகன்கிடக்கை
மாமாவின் வயின்வயினிற்

173. தரவு இடை தங்கல் ஓவிலன் - தருதற்றொழிலிடத்தே நிலைபெறுதலை ஒழிதலிலன்;

இனி, தரவிடத்துத் தாழ்த்தலிலனென்றுமாம்.

173 - 174. வரவிடை பெற்றவை பிறர் பிறர்க்கு ஆர்த்தி - வருதலிடத்துப் பெற்றபொருள்களைப் பிறர்க்குப்பிறர்க்குக் கொடுத்து,

174 - 175. தெற்றென செலவு கடைக்கூட்டுதிர் ஆயின் - கடுக அவ்விடத்துநின்றும் போகின்றபோக்கை முடிவுபோக்குவீராயின்,

175. பல புலந்து - அதுபொறாமற் பலகாலும்வெறுத்து,

176. நில்லா உலகத்து நிலைமை தூக்கி - செல்வமும் யாக்கையுமுதலியன நிலைநில்லாத உலகத்துப் புகழைச் சீர்தூக்கிப் பார்த்து,

நிலைபெறுந் தகைமையுடைத்தாகலின், புகழை நிலைமையென்றார்; ஆகுபெயர்.

177. செல்க என - இங்ஙனம்போகெனக்கூறி,

177. விடுக்குவன் அல்லன் - நும்மைக் கடுக விடுவானல்லன்;

தொழுது முன்னிற்குவிராயின் (௧௨௦) நோக்கி (௧௨௧) நீக்கி (௧௨௪) நல்கி (௧௨௫) வாக்குபு தரத்தரப் (௧௨௭) பருகுவித்துச் (௧௨௮) குட்டி (௧௩௦) அணியத் (௧௩௨) தேரிலே (௧௬௩) குதிரையைப்பூட்டி (௧௬௫) எற்றி (௧௬௬) முறையுளிக்கழிப்பி (௧௬௮) நாட்டோடு (௧௭௦) வேழம் (௧௭௨) தரவிடைத் தங்கல் ஓவிலன் (௧௭௩) வரவிடைப் (௧௭௩) பெற்றவைபிறர்பிறர்க்கார்த்தித் தெற்றெனச் (௧௭௪) செலவுகடைக்கூட்டுதிராயின் அதற்குப்பலபுலந்து (௧௭௫) நில்லாவுலகத்து நிலைமையைச்சீர்தூக்கிச் (௧௭௬) செல்வாயாகவெனக் கூறி விடுக்குவனல்லனெனமுடிக்க.

நில்லாவுலகத்து நிலைமைதூக்கிப் பலபுலந்து செல்கென விடுக்குவனல்லனென்பாருமுளர்.

177 - 179. ஒல்லென திரை பிறழிய இரு பௌவத்து கரை சூழ்ந்த அகல் கிடக்கை - ஒல்லென்னும் ஓசைபடத் திரைமுரிந்த கரியகடலினது கரைசூழ்ந்த அகன்ற பரப்பினையுடைய இவ்வுலகத்து,

180. மா மாவின் வயின் வயினின் - ஒருமாநிலத்தில் ஒருமாநிலத்தில் திடர்தோறும் திடர்தோறும்.

றாழ்தாழைத் தண்டண்டலைக்
கூடுகெழீஇய குடிவயினாற்
செஞ்சோற்ற பலிமாந்திய
கருங்காக்கை கவவுமுனையின்
மனைநொச்சி நிழலாங்க
ணீற்றி யாமை தன்பார்ப் போம்பவு
மிளையோர் வண்ட லயரவு முதியோ
ரவைபுகு பொழுதிற்றம் பகைமுரண் செலவு

---

181. தாழ் தாழை தண் தண்டலை - தாழ்ந்த தெங்கிளையுடைய குளிர்ந்த மரச்சோலைகளிலிருக்கின்ற,

182. கூடு கெழீஇய குடிவயினான் - நெற்கூடுகளையுடைய குடிமக்களிடத்தில்,

183 - 184. செம் சோற்ற பலி மாந்திய கரு காக்கை - உதிரத்தாற் சிவந்த சோற்றையுடையவாகியபலியை விழுங்கின கரியகாக்கை,

184 - 186. மனை நொச்சி நிழல் ஆங்கண் ஈற்று யாமைதன் பார்ப்பு கவவு முனையின் ஓம்பவும் - மனையைச்சூழ்ந்த நொச்சியினது நிழலிடத்துக் கிடந்த ஈற்றுத்தொழிலையுடைத்தாகிய யாமையினுடையபார்ப்பைத் தான் தின்றலை வெறுத்ததாயின், அதனைப் பின்பு பசித்தகாலத்துத்தின்பதாகப் பாதுகாத்துவைப்பவும்,

எனவே மருதநிலத்திலிருக்குங்காக்கை நெய்தனிலத்துப்பார்ப்பைத் தின்னுமென்றார். "தவழ்பவை தாமு மவற்றோ ரன்ன" (தொல். மர. ந) என்பதனாற் பார்ப்பென்றார்.

187. இளையோர் வண்டல் அயரவும் - அவ்வுழவர்மகளிர் நெய்தனிலத்தின் மணற்குன்றிலே விளையாடவும்,

187 - 188. பகை முதியோர் அவை புகு பொழுதில் தம் முரண் செலவும் - பகைமைமுதிர்ந்தோர் தனது அரசவையிற்சென்று புகுங்காலத்துத் தம்மாறுபாட்டைப் போக்கும்படியாகவும்,

என்றது வழக்குமாறுபட்டு வந்தோர்க்கு அவ்வழக்கு வீடறுப்பனென்றவாறு; "உரைமுடிவு காணன்" (பழமொழி,உக)என்னும் பழமொழிகூறினார்.

அ - பு. இங்கே கூறிய பழமொழிச் செய்யுளும் அதனுரையும் வருமாறு:—"உரைமுடிவு காணா னிளமையோ னென்ற, நரைமுது மக்க ளுவப்ப - நரைமுடித்துச், சொல்லான் முறைசெய்தான் சோழன் குலவிச்சை, கல்லாமற் பாகம் படும்" என்பது தம்முள் மறுதலையாயினா ரிருவர் தமக்கு முறைமை செயவேண்டிவந்து சில சொன்னால் அச்சொல் முடிவுகண்டே ஆராய்ந்து முறைசெய்ய அறிவு நிரம்பாத இளமைப்பருவத்தானென்று இகழ்ந்த நரைமுதுமக்களுவக்கும் வகைநரை முடித்து வந்து முறை வேண்டிவந்த இருதிறத்தாருஞ் சொல்லிய சொற்கொண்டே ஆராய்ந்தறிந்து முறைசெய்தான் கரிகாற் பெருவளத்தா னென்னுஞ் சோழன்; ஆதலால், தத்தம் குலத்துக்குத் தக்க விச்சைகள் கற்பதற்குமுன்னே செம்பாக முளவா மென்றவாறு.

முடக்காஞ்சிச் செம்மருதின்
மடக்கண்ண மயிலாலப்
பைம்பாகற் பழந்துணரிய
செஞ்சுளைய கனிமாந்தி
யறைக்கரும்பி னரிநெல்லி
னினக்களம ரிசைபெருக
வறளடும்பி னிவர்பகன்றைத்
தளிர்ப்புன்கின் றாழ்காவி
னனைஞாழலொடு மரங்குழீஇய
வவண்முனையி னகன்றுமாறி
யவிழ்தளவி னகன்றோன்றி
நகுமுல்லை யுகுதேறுவீப்
பொற்கொன்றை மணிக்காயா

---

189 - 192. பை பாகல் பழம் செம் சுளைய துணரிய கனி மாந்தி முடம்காஞ்சி செம்மருதின் மட கண்ண மயில் ஆல - பசிய பாகற்பழத்தையும் சிவந்த சுளையையுடையவாகிய குலைகொண்ட பலாப்பழத்தையுந் தின்று வளைவையுடைய காஞ்சிமரத்திலும் செவ்விய மருதிலுமிருந்த மடப்பத்தைத் தம்மிடத்தேயுடையவாகிய பெடைமயில்கள் ஆரவாரித்தழைக்கவும்,

193 - 194. அறை கரும்பின் அரி நெல்லின் இனம் களமர் இசை பெருக - அறுத்தலைச்செய்யும் கரும்பினிடத்தும் அரிகின்ற நெல்லினிடத்துமுள்ள கூட்டமான களமர்களின் ஓசைபெருகவும்,

195. வறள் அடும்பின் - நீரற்ற இடத்தே எழுந்த அடும்புகளும்,

கு - பு. அடும்பு, அடம்பெனவும் வழங்கும்.

195. இவர் பகன்றை - படருகின்ற சிவதைக்கொடிகளும்,

196. தளிர் புன்கின் தாழ் காவின் - தளிரையுடைய புன்கினையுடைய தாழ்ந்த சோலைகளுடன்,

197. நனை ஞாழலொடு - அரும்பின புலிநகக்கொன்றைகளுடன்,

197. மரம் குழீஇய - மற்ற மரங்களும் திரண்ட,

198. அவண் முனையின் - அவ்விடத்தை வெறுத்தால்,

கு - பு. வெறுத்தல், நாரையின்தொழில்.

198. அகன்று மாறி - அவ்விடத்தைவிட்டுநீங்கி,

கு - பு. அகன்று மாறி, ஒருபொருட்பன்மொழி.

199. அவிழ் தளவின் அகல் தோன்றி - மலர்ந்த செம்முல்லையினையும் விரிந்த காந்தளினையும்,

200. நகு முல்லை வீ உகு தேறு - மலர்ந்தமுல்லையினையும் பூ உகுகின்ற தேற்றாமரத்தினையும்,

201. பொன் கொன்றை மணி காயா - பொன்போலும் பூவினையுடைய கொன்றையினையும் நீலமணிபோலும் பூவினையுடைய காயாமரத்தினையுமுடைய,

நற்புறவி னடைமுனையிற்
சுறவழங்கு மிரும்பௌவத்
திறவருந்திய வினநாரை
பூம்புன்னைச் சினைச்சேப்பி
னோங்குதிரை யொலிவெரீஇத்
தீம்பெண்ணை மடற்சேப்பவுங்
கோட்டெங்கின் குலைவாழைக்
கொழுங்காந்தண் மலர்நாகத்துத்
துடிக்குடிஞைக் குடிப்பாக்கத்
தியாழ்வண்டின் கொளைக்கேற்பக்
கலவம்விரித்த மடமஞ்ஞை
நிலவெக்கர்ப் பலபெயரத்
தேனெய்யொடு கிழங்குமாறியோர்
மீனெய்யொடு நறவுமறுகவுங்

---

202. நல் புறவின் நடை முனையின் - நல்ல அந்தக்காட்டிலுறைகின்ற ஒழுக்கத்தை வெறுப்பின் அவ்விடத்தைவிட்டுநீங்கி,

கு - பு. 'அகன்றுமாறி' என்பதை இங்கும் கூட்டுக.

203. சுற வழங்கும் இரு பௌவத்து - சுறாமீன்கள் திரியும் கரியகடலின்கணுள்ள,

204. இறவு அருந்திய இனம் நாரை - இறவைத்தின்ற கூட்டமாகிய நாரைகள்,

205. பூ புன்னை சினை சேப்பின் - பூக்களையுடைய புன்னைமரத்தின் கிளையிலே தங்கின், (ஆண்டுள்ள)

206. ஓங்கு திரை ஒலி வெரீஇ - உயர்ந்துதோன்றுகின்ற அலைகளின் ஒலிக்கு அஞ்சி,

207. தீ பெண்ணை மடல் சேப்பவும் - இனிய பனையினதுமடலிலே தங்கவும்,

208. கோள் தெங்கின் குலை வாழை - குலைகளையுடைய தென்னைகளையும் குலைவாழைகளையும்,

209. கொழு காந்தள் மலர் நாகத்து - கொழுவிய செங்காந்தள்களையும் பூக்களையுடைய சுரபுன்னையினையும்,

210. துடி குடிஞை குடி பாக்கத்து - உடுக்கைபோலும் ஓசையினையுடைய பேராந்தையினையும் குடியிருப்பையுமுடையபாக்கத்தில்,

கு - பு. பாக்கம் - கடற்கரையிலுள்ள ஊர்.

211 - 213. யாழ் வண்டின் கொளைக்கு ஏற்ப கலவம் விரித்த மட மஞ்ஞை நிலவு எக்கர் பல பெயர - யாழோசைபோலும் வண்டினது பாட்டினைக்கேட்டு அதற்குப்பொருந்தத் தோகையைவிரித்த அறியாமையையுடைய மயில் நிலவுபோலும் இடுமணலிலே பலபகுதிப்படஆடவும்,

214 - 215. தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர் மீன் நெய்யொடு நறவு மறுகவும் - தேனாகியநெய்யோடே கிழங்கையும் விற்றவர்கள் மீனினது நெய்யோடே நறவையும் கொண்டுபோகவும்,

குறடு - அச்சுக்கோக்குமிடம். அயில்வாய் - கூரியவாய்; என்றது சூட்டிற்கு ஆகுபெயர்.

(கு - பு.) குறடு, குடமெனவும், சூட்டு, வட்டையெனவும்வழங்கும்.

254 - 5. [சிதர்நனை முருக்கின் சேணோங்கு நெடுஞ்சினைத், ததர்பிணி யவிழ்ந்த தோற்றம் போல:] முருக்கின் சேண் ஓங்கு நெடுஞ்சினை ததர் நனை சிதர் பிணி அவிழ்ந்த தோற்றம் போல—முருக்கினுடைய விசும்பிலே செல்ல வளர்ந்த நெடிய கொம்பிற் செறிந்த அரும்புகள் வண்டிற்குப் பிணியவிழ்ந்த தோற்றரவுபோல,

ததர் - கொத்துமாம். சிதர் - சிந்துதலுமாம்; சிச்சிலியுமாம்.

(கு - பு.) முருக்கு - முள்ளு முருங்கை.

256-8. [உள்ளரக் கெறிந்த வுருக்குறு போர்வைக், கருந்தொழில் வினைஞர் கைவினைமுற்றி, யூர்ந்துபெயர் பெற்ற வெழினடைப் பாகரொடு.]

கருந்தொழில் வினைஞர் கை வினை முற்றி உருக்குறு அரக்கு உள் எறிந்த போர்வை பாகர்—வலிய தொழிலைச்செய்யுந் தச்சருடைய கையாற்செய்யும் உருக்களெல்லாம் முற்றுப்பெற்று உருக்கப்படுஞ் சாதிலிங்கம் உள்ளேநிரம்ப வழித்த பலகையையுடைய பாகர்,

தேர்த்தட்டு வெளிமறையப் பாவின பலகையைப் போர்வையென்றார். அதன் மேலே சுற்றுச்சுவராகப் பலகையாற்செய்த சுவரைப் பாகரென்றார். பாகரையுடைய தேரைப்பாகரென்றார்; ஆகுபெயரால்.

ஊர்ந்து பெயர் பெற்ற எழில் நடைப் பாகரொடு— ஏறிப்பார்த்து உண்மையாக ஓட்டமுண்டென்று பெயர்பெற்ற அழகினையுடைத்தாகிய நடையினையுடைய தேரோடே,

நேமியோடே (உருரு) போர்வையையுடைய (உருசு) பாகரெனமுடிக்க.

259 - 260. மா செலவு ஒழிக்கும் மதன் உடை நோன் தாள் வாள் முகம் பாண்டில்— தன் கடுமையாற் குதிரையின்செலவைப் பின்னேநிறுத்தும் வனப்புடைத்தாகிய வலியினையுடைய தாளினையும், ஒளியினையுடைத்தாகிய முகத்தினையுமுடைய நாரையெருத்தையும்,

வலவனொடு— அதனைச் செலுத்தும் பாகனொடு,

260 - 261. [தரீஇ, யன்றே விடுக்குமவன் பரிசில்:] பரிசில் தரீஇ அவன் அன்றே விடுக்கும் —யானை குதிரை அணிகலமுதலியபரிசில்களையுந் தந்து அவன் அன்றேவிடுக்கும்;

நிதியத்தோடே (உசஅ) பாகரோடே (உருஅ) வலவனோடே பாண்டிலையும்(உசு0) பரிசிலையுந் (உசுக) தரீஇ (உசு0) அவன் அன்றேவிடுக்குமென முடிக்க.

261 - 3. மென் தோள் துகில் அணி ...... துளங்கு இயல் மகளிர் அகில் உண விரித்த அம் மெல் கூந்தலின் — மெல்லிய தோளினையும், துகில் சூழ்ந்த ...... அசைந்த இயல்பினையுமுடைய மகளிர் அகிற்புகையை உண்ணும்படியாக விரித்த அழகையுடைய மெல்லிய கூந்தல்போலே,

264 - 5 [மணிமயிற் கலாப மஞ்சிடைப் பரப்பித், துணிமழை தவழுந் துயல்கழை நெடுங்கோட்டு:]

துணி மழை மணி மயில் கலாபம் இடை மஞ்சு பரப்பி தவழும் கோடு —தெளிந்தமேகம் நீலமணிபோலும் மயிலினுடைய விரிந்த தோகைக்கு நடுவே தனது மஞ்சைப்பரப்பித் தவழுமலை,

சிறிதுநீர் உட்கொண்டு பக்கம் வெள்ளியமாசாயிருத்தலின், மேகம் மஞ்சைப்பரப்பியென்றார்.

இனி 'மணிமயில் கலாபம்' என்று பாடமாயின், மயில் தன்கலாபத்தை மஞ்சிடையிலே பரப்புதலைச்செய்து துயல்கோடென்க. துயலல் - ஆடுதல்.

துயல் கழை நெடு கோடு— அசைகின்ற மூங்கிலையுடைய நெடிய மலையிடத்தையுடைய குறிஞ்சி (உகஎ)

266. [எறிந்துரு மிறந்த வேற்றருஞ் சென்னி:] ஏற்றரும் உரும் எறிந்து இறந்த சென்னி கோடு (உகசு)—ஏறுதற்கு அரிதாகிய உருமேறு தான்ஏறுதற்காக இடித்து வழியாக்கிப்போன சிகரத்தையுடையமலை,

இக்குதிரை ஏற்றரிதென்ப.

267. குறிஞ்சி கோமான்— குறிஞ்சியாகிய ஒழுக்கத்தையுடைய நிலத்திற்கரசன்,

267 - 9. கொய் தளிர் கண்ணி செல் இசை நிலைஇய பண்பின் நல்லியக்கோடனை— கொய்யப்பட்ட தளிர்விரவின மாலையினையும், பிறரிடத்து நில்லாமற்போகின்றபுகழ் தன்னிடத்தே நிற்றற்குக் காரணமான குணத்தினையுமுடைய நல்லியக்கோடனை,

நயந்தனிர் செலின்— விரும்பிச்செல்லின்,

முதுவாயிரவல (சO) பெருமகன் (கஉஉ) புரவலனாகிய (கஉரு) நல்லியக்கோடனை நயந்த கொள்கையோடே (கஉசு) முன்னாட்சென்றனமாக, இந்நாள் (கஉசு), அழிபசிவருத்தம்வீட (கசO) யானையோடே தேரெய்தி (கசஉ) யாம் அவணின்றும் வருகின்றேம் இனி நீயிரும் (கசங) மூவேந்தரிடத்துச் செல்குவிராயின் (கசரு), வஞ்சியும் வறிது; அதுவன்றி (ருO) மதுரையும்வறிது; அதுவன்றி (சுஎ) உறந்தையும் வறிது; அதுவன்றி (அங) எழுவர்பூண்ட ஈகைச் செந்நுகம் (ககங) ஒருதான்றாங்கிய (ககரு) குறிஞ்சிக் கோமானாகிய (உசுஎ) நல்லியக்கோடனை நயந்தனிர்செலின் (உசுசு), வழியிற் பெறுமவற்றை யாவ

கூறக்கேண்மின்; பட்டினம்படரின் (௧௫௩), வயின் வயிற்பெறுகுவிர் (௧௬௩) அதன்பின்னர் வேலூரெய்தின் (௧௭௩) அமைவரப் பெறுகுவிர் (௧௭௭); அதன்பின்னர் அவன் ஆமூரெய்திற் (௧௮௮) கலவையொடுபெறுகுவிர் (௧௯௫) அவற்றைப்பெற்றபின், அவன் மூதூர் (௨௦௧) சேய்த்துமன்று; சிறிது நணியது வேயாயிருக்கும் (௨௦௨); ஆண்டுச்சென்று முன்னர் அவன் கடைவாயிலைக்குறு கிப் (௨௦௬)பின் அறிந்தோரேத்த (௨௦௯) வயவரேத்த (௨௧௨) அரிவையரேத் தப் (௨௧௫) பரிசிலரேத்த (௨௧௮) இருந்தோனையணுகிப் (௨௨௦) பாடுதுறை முற்றுதற்கு (௨௨௮) இன்னியத்தைப் (௨௨௯) பண்ணிக் (௨௩௦) கையினை யென்றும் (௨௩௧), மார்பினையென்றும் (௨௩௨), கோலினையென்றும் (௨௩௩), வேலினையென்றும் (௨௩௪) நீசிலமொழியா அளவை (௨௩௫) அவன் நீவிரும்புவனபேணி (௨௪௪) உடீஇ (௨௩௬) நல்கி (௨௩௭) அடிசிலைக் (௨௪௧) கலத்தேயிட்டுத் (௨௪௪) தான்நின்று ஊட்டி (௨௪௫) நிதியத்தோடே (௨௪௬) பாகரோடே (௨௫௮) வலவனோடே பாண்டிலையும் (௨௬௦) பரிசிலையும் (௨௬௧) தரீஇ (௨௬௦) அவன் அன்றேவிடுக்கும் (௨௬௧) என வினைமுடிவுசெய்க.

ஏறுமாநாட்டு நல்லியக்கோடனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத் தனார்பாடிய சிறுபாணாற்றுப்படைக்கு மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று.

# முகவுரை.

சென்னை யூனிவர்ஸிடியாரால் 1903-ம் வருஷத்து பி. ஏ. பட்டப்பரீக்ஷைக்குப் பாடமாக நியமிக்கப்பட்ட முல்லைப்பாட்டையும் அதை அறிந்துகொள்ளுதற்கு இன்றியமையாத மதுரை ஆசிரியர் நச்சினார்க்கினியருரையையும் வெளிப்படுத்தத் தொடங்கி, மாணாக்கர்களுக்கு அவை விளங்கும்வண்ணம் நூதனமாக எளிய நடையில் எழுதிய குறிப்புக்களையும் உரியவிடங்களிற் சேர்த்துப் பதிப்பிக்கலானேன்.

முல்லைப்பாட்டென்பது கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவரான நப்பூதனார் பாடியது; இஃது ஆசிரியப்பா; க0௩-அடிகளையுடையது; பகைமேற்சென்ற தலைவன் வருமளவும் தலைவி பொறுத்துக்கொண்டிருந்தவிடத்து அவன் வந்ததனைக்கண்டு தோழிமுதலியோர்கள் தம்முட் கூறியதாக இயற்றப்பெற்றது.

இந்நூலில், தனித்திருக்கும் தலைவியின் இயல்பும் கார்காலத்தின் இயற்கையும் படைவீட்டிற் பகைவர் அடைந்த வருத்தமிகுதியும் தலைவனது வீரமுதலியவைகளும் பிறவும் மிகச்செவ்வையாகக் கூறப்பட்டுள்ளன.

இந்நூல், உரையாசிரியர் பலருரைகளில் மேற்கோளாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளது; பலநூலாசிரியர்கள் இதிலுள்ளவாக்கியங்களைத் தாமியற்றும் நூல்களுள் ஆங்காங்கு அமைத்து அழகுபடுத்தியிருக்கின்றனர்; "முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவம்" என்பது விதியன்றோ.

இதிற் பண்டைக்காலச்செய்திகள் பல காணப்படும்.

இதிலுள்ள விஷயம் ஒவ்வொன்றும் யாவரும் எப்பொழுதும் அனுபவித்துக்கொண்டிருக்கும் அனுபவமாக உள்ளதாதலின், இந்நூல் படிப்பவர்களுக்கு மிக்க இன்பத்தை விளைவிக்குமென்பது கூறாமலே விளங்கும்; செயற்கையழகிலும் இயற்கையழகு சிறந்ததென்பது எல்லோருக்குந் தெரிந்த விஷயமே.

விளங்க எழுதவேண்டியவைகளைப் பல்காரணங்களால்நான் எழுதாதிருத்தல் கூடும்; கல்வியறிவு ஒழுக்கங்களிற்சிறந்து கலாசாலைகளில் தமிழ்ப்பண்டிதர்களாக வீற்றிருக்கும் விவேகிகள் அக்குற்றத்தைப் பொறுத்து மாணாக்கர்களுக்கு உரிய விஷயங்களைத் தெரிவிப்பார்களென்று நம்புகிறேன்.

இங்ஙனம்,

**வே. சாமிநாதையன்.**

# நூல்.

---

இது, நக்கீரனார் முதலிய சங்கப்புலவர்களியற்றிய பத்துப் பாட்டினுள் ஐந்தாவது. பத்துப்பாட்டுக்கள் இன்னவையென்ப தைப் பின்னுள்ள வெண்பாவாலுணர்க:—

> "முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
> பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
> கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
> பாலை கடாத்தொடும் பத்து."

அவற்றுள்,—

முதலாவது திருமுருகாற்றுப்படை ௩௧௭-அடிகளையுடையது; முருக க்கடவுண்மீது, மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியது; இதில் முருகக்கடவுளுடையஸ்தலங்களுட்சிறந்த திருப்பரங்குன்றம், திருச் சீரலைவாய் (திருச்செந்தூர்), திருவாவினன்குடி (பழனி), திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலையென்னும் ஆறுபடைவீடுகளும், அவற் றில் அவர் எழுந்தருளியிருக்கும் விதமும் முறையே விரம்பப் பாராட்டிக் கூறப்படும்.

இரண்டாவது பொருநராற்றுப்படை ௨௪௮-அடிகளையுடையது; இள ஞ்சேட்சென்னி, புதல்வனாகிய சோழன்கரிகாற்பெருவளவனை முடத்தா மக்கண்ணியார் பாடியது; இதில் கரிகாற்பெருவளவன் கொடையும் அவ ன்வீரமும் அவனாண்ட சோழநாட்டின் வளமும் காவிரிநதியின் சிறப்பும் நன்றாகக் கூறப்படும்.

மூன்றாவது சிறுபாணாற்றுப்படை ௨௬௯ - அடிகளையுடையது; ஏறுமா நாட்டு நல்லியக்கோட னென்பவனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்த னார் பாடியது; இதில் நல்லியக்கோடனது வண்மையும் அவனுடைய நகரங்களாகிய எயிற்பட்டினம் வேலூர் ஆமூர் முதலியவற்றி னியல்பும், அவற்றிலிருந்த மாந்தர்களது நற்குண நற்செய்கைகளும் தமிழ்நாட்டு மூ வேந்தர்களுடைய இராஜதானிகளாகிய மதுரை வஞ்சி உறையூ ரென்னு மூன்றுநகரங்களி னிலை [illegible] பேகன் பாரி காரி ஆய் அதிகன் நள்ளி ஓரி யென்னும் வள்ளல்க[illegible] வரும் இன்னஇன்ன கொடையாற் பெயர் பெற்றார்க ளென்பதும் கூறப்பட்டுள்ளன.

நான்காவது பெரும்பாணாற்றுப்படை ௫00 - அடிகளையுடையது; காஞ்சி நகரத்திருந்த தொண்டைமான் இளந்திரையனைக் கடியலூர் உரு த்திரங்கண்ணனார் பாடியது; இதில் அவனது வண்மையும், தொண்டை நாட்டிலேயுள்ள குறிஞ்சிமுதலிய ஐந்திணைவளங்களும், அவற்றில்வாழும் மாந்தருடைய தொழில் ஊண் ஒப்புரவு முதலியனவும், காஞ்சிநகரத்தின் சிறப்பும், திருமாலின் நூற்றெட்டுத்திருப்பதிகளுள் ஒன்றாகிய திருவெஃகா வென்பதும் கூறப்பட்டுள்ளன.

ஐந்தாவது முல்லைப்பாட்டு. இதன் வரலாற்றை முகவுரையிற் காண்க.

ஆறாவது மதுரைக்காஞ்சி எஅ௨ - அடிகளையுடையது; தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு வீடுபேறு நிமித்தம் நிலையாமையைச் செவியறிவுறுத்தி மாங்குடிமருதனார் பாடியது; இதில் பாண்டி நாட்டின் ஐந்திணைவளங்களும், மதுரையம்பதியி னழகும், அப்பாண்டியனது வீரமுதலியனவும், சேரராஜனது நாளோலக்கச் சிறப்பும், அக்காலத்திருந்த பலசிற்றரசர்களுடைய பெருமையும், அருச்சுனனுக்குக் கண்ணன் உபதேசித்த பகவத்கீதையின் மேம்பாடும் இன்னும் பலவுங் கூறப்பட்டுள்ளன.

ஏழாவது நெடுநல்வாடை கஅஅ - அடிகளையுடையது. பாண்டியன் நெடுஞ்செழியனை நக்கீரனார் பாடியது; இதில் ஐப்பசிகார்த்திகை மாதங்களாகிய கூதிர்க்காலத்தினியல்பும் தனித்திருந்த தலைவியது வருத்தமிகுதியும் படைவீட்டில் தலைவனிருக்கும் வண்ணமும் விளங்கக் கூறப்பட்டுள்ளன.

எட்டாவது குறிஞ்சிப்பாட்டு உ௬௧ - அடிகளையுடையது; ஆரியவரசன் பிரகத்தனைத் தமிழறிவுறுத்தற்குக் கபிலர் பாடியது; இதில் மலைவளங்களும், இல்லறமுறைமையும், தலைவனும் தலைவியும் தம்முள்வைக்கத்தகு மன்புடைமையும், கற்பின் இன்றியமையாமையும், பலமலர்விசேடங்களும் அழகாகக் கூறப்பட்டுள்ளன; இது பெருங்குறிஞ்சி யென்றும் பெயர் பெறும்.

ஒன்பதாவது பட்டினப்பாலை ௩௦௧ - அடிகளையுடையது; சோழன் கரிகாற்பெருவளத்தானைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியது; இதிற் காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பும், சோழநாட்டின்வளமும் காவிரிநதி பயன்படுதலும், அச்சோழனுடையபராக்கிரமமும், அவனுடைய செங்கோலின் மேன்மையும் நிரம்ப விரித்துக் கூறப்பட்டுள்ளன. இந்நூலைக் கேட்டு அச்சோழன் கடியலூருருத்திரங்கண்ணனார்க்குப் பதினாறுலக்ஷம் பொன் பரிசளித்தா னென்று கலிங்கத்துப்பரணியாற் றெரிகின்றது.

பத்தாவது மலைபடுகடாம் ருஅ௩ - அடிகளையுடையது; பல்குன்றக் கோட்டத்துச் செங்கண்மாத்துவேள் நன் அங்கீசய் நன்னனை இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பாடியது; இதில் அவனூர்க்குச்செல்லும் வழியினியல்பும், ட்டவே, ீடத்துக்கிடைக்கும் உணவின் வகைகளும் அவனது மலை சோகொண்டார்க ளொங்களும், அவனது வள்ளன்மையும், ஆற்றலும், அவனது ..., அவனது நாளோலக்கச் சிறப்பும், அவனது னுளார் நுங்காதலர்'' எ காரியுண்டிக் கடவு ளென்னும் திருநாமத்தோடு மையயுணர்த்துதல் ''...பெருமானது மகிமையும், அவனுடைய முன்னோ றிளும்' என்றும், ..., அவனூரினியல்பும், அவனது சேயாறென்னும் னுஞ்செய்யுளுரைய் வளங்களும் விளங்கக் கூறப்பட்டுள்ளன. இது கூத்தர்ாற்றுப்படை ... எனவும் பெயர்பெறும்.

## நூலாசிரியர்.

முல்லைப்பாட்டை இயற்றிய நப்பூதனாரென்பவர் கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவர்; இவருடைய ஊர் காவிரிப்பூம்பட்டினம்; இவருடைய தந்தையார் பொன்வாணிகனார்; இதனால் இவரை வணிகரென்று நினைத்தற்கிடமுண்டு. 'ந' என்பது சிறப்புப்பொருளை யுணர்த்துவதோர் இடைச்சொல்; முதலில் இவர் 'பூதனார்' என்னும் பெயரையுடையவராகவிருந்து இந்நூலை இயற்றியகாரணம்பற்றிப் பின்பு நப்பூதனாரென்று வழங்கப்பட்டாரென்று தெரிகிறது. நப்பாலத்தனார், நக்கீரனார், நச்செள்ளையார் என்னும் பெயர்களினும் 'ந' என்பது இப்படி விரவியிருத்தல் காண்க. சிந்தாமணி, கோவிந்தையாரிலம்பகம், ௭௪-ம் செய்யுளுரையில் ஆசிரியர் நச்சினார்க்கினியர், 'நப்பின்னை' என்பதைக்குறித்து எழுதியிருத்தலும் இதனை வலியுறுத்தும்; எட்டுத்தொகை முதலியவற்றில் இவரியற்றியதாக இதுவரையில் ஒன்றும் காணப்படவில்லை. ஆனால், பூதனாரென்னும் பெயரினரொருவர், நற்றிணை, ௨௯-வது செய்யுளியற்றியதாகத் தெரிகின்றது; அப்பெயரினரும் இவரும் ஒருவரோ வேறோ யாதும் தெரியவில்லை.

## இந்நூல் உரையாசிரியராகிய
# நச்சினார்க்கினியர்வரலாறு.

விருத்தம்.

எவனால வாயிடைவந் தமிழ்க்கூ யுடையனென வியம்பப் பெற்றோன்
எவன்பண்டைப் பனுவல் ... றவாது நிலவவுரை யெழுதி யீந்தோன்
எவன்பரம வுபகாரி யெவனு ... னார்க்கினிய னெனும்பே ராளன்
அவன்பாத விருபோ ... மலர்கவென தகத்து மன்னே.

ழவ ... தும் கூறப்பட்டு

இம் ... காவது பெரும்பாணாற்று ... ரியராகியநச்சினார்க்கினியர் பாண்டி
வளநாட்டுள் ... த்திருந்த தொண்டை ... குலத்திற் பாரத்துவாசகோத்திரத்
தில் ... னார் பாடியது; இதில் ... லுள்ள பலவகையான எல்லாநூல்
காட்டிலேயுள்ள குறிஞ்சிமுதலிய ஐந் ... இவரது சமயம் சைவமே. இவர்
மாந்தருடைய தொழில் ஊண் ஒப்புரவு ... புரிதனி, வெண்டிசை விளங்க
சிறப்பும், திருமாலின் நூற்றெட்டுத்திரு ... த்துவாச, ... ஞன்மறை துணிந்தநற்
வென்பதும் கூறப்பட்டுள்ளன.

பொருளாகிய, தூயஞான நிறைந்த சிவச்சுடர், தானே யாகிய தன்மை யாளன்" என்னும் உரைச்சிறப்புப்பாயிரத்தால் விளங்கும். சிவதலங்களுட்சிறந்த சிதம்பரத்தினது திருநாமங்களாகிய 'திருச்சிற்றம்பலம்,' 'பெரும்பற்றப்புலியூர்' என்பவற்றை முறையே ஆறெழுத்தொருமொழிக்கும் ஏழெழுத்தொருமொழிக்கும் உதாரணமாக இவர் தொல்காப்பியம் எழுத்ததிகாரத்து மொழிமரபில் "ஓரெழுத்தொருமொழி" என்னுஞ் சூத்திரத்து விசேடவுரையிற் காட்டியிருத்தலாலும், சைவசமயத்துச் சிறந்தநூல்களாகிய திருவாசகம் திருச்சிற்றம்பலக்கோவையார் என்பவற்றினின்றும் தமது உரைகளிற் பலவிடங்களில் இலக்கிய விலக்கணப் பொருள்களுக்கேயன்றித் தத்துவப்பொருளுக்கும் மேற்கோள்கள் எடுத்து ஆண்டுள்ளதனுலும், அங்ஙனம் மேற்கோள்கொண்ட சிலவிடங்களில் எழுதியுள்ள விசேடவுரைகளாலும், நாமகளிலம்பகத்து 'மேகம் மீன்ற' என்னும் ௩௩௩-ம் செய்யுளில் 'போகம்மீன்ற புண்ணியன்' என்பதற்கு எழுதிய விசேடவுரையாலும், திருமுருகாற்றுப்படை யுரையிற்காட்டிய சில நயங்களாலும், மற்றுஞ் சிலவற்றுலும், நச்சினார்க்கினியரது சைவ சமயாபிமானம் நன்குவெளியாம்.

நச்சினார்க்கினியர், இந்நூலுக்கன்றிப் பத்துப்பாட்டினுள் மற்றநூல்களுக்கும் தொல்காப்பியத்திற்கும் கலித்தொகைக்கும் குறுந்தொகையில் பேராசிரியர் பொருளெழுதாதொழிந்த இருபது செய்யுட்களுக்கும் உரை செய்தருளினர். இன்னுஞ் சிலநூல்களுக்கு இவர் உரையியற்றினரென்பர்; அவை இவையென்று புலப்படவில்லை. இக்காலத்து வழங்கும் திருக்கோவையாருரை பேராசிரியராற் செய்யப்பட்டதென்று தெரிகின்றமையாலும், இவர் அந்நூற்குச்செய்த வேறுரை கிடையாமையாலும் அதற்கும் திருக்குறள் முதலிய மற்றுஞ்சிலவற்றிற்கும் இவர் உரைசெய்திருப்பதாக இவருடைய உரைச் சிறப்புப்பாயிரத்திலேனும் வேறொன்றிலேனும் கூறப்படாமையாலும், அவைகள் இங்கே எழுதப்பட்டில

சீவகசிந்தாமணிக்கு நச்சினார்க்கினியர் முதன்முறை ஓருரையெழுதி, அக்காலத்துப் பிரசித்திபெற்றிருந்த சைனவித்துவான்கள் சிலருக்குக்காட்ட, அவர்கள் அவ்வுரையை அங்கீகரியாமை கண்டு, பின்பு ஆருகதநூல்கள் பலவற்றையும் நலமுற ஆராய்ந்து இரண்டாமுறை இவ்வுரையை யெழுதி அவர்களுக்குக் காட்டவே, அவர்கள் உற்றுநோக்கி வியந்து இவ்வுரையை அங்கீகரித்துக்கொண்டார்களென்று சைனர் கூறுகின்றனர்.

நாமகளிலம்பகத்தில் "கண்ணுளார் நுங்காதலர்" என்னும் ௪௩-ம் செய்யுளுரையில் 'ஈங்குத் தன்மையையுணர்த்துதல் "செலவினும் வரவினும்" என்னுஞ் சூத்திரத்திற் கூறினும்' என்றும், குணமாலையாரிலம்பகத்தில் "மங்கை நல்லவர்" என்னுஞ்செய்யுளுரையில் 'ஆசிரியர் "நண்டுந் தும்பியும்" என்று தும்பியைப்பின்வைத் [illegible] சூத்திரத்தில்

"மாவு மாக்களு மையறி வென்ப" என்ற ஐயறிவு இதற்கும் ஏறுதற் கென்றுணர்க ; இதனை வாராததனால் வந்தது முடித்த லென்னுந் தந்திரவுத்தியாற் கொள்க வென்று ஆண்டு உரை கூறிப்போந்தாம்' என்றும் நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலால், இவர் தொல்காப்பியத்திற்கு உரையெழுதினபின்பு சீவகசிந்தாமணிக்கு உரையெழுதின ரென்று விளங்குகின்றது.

தொல்காப்பியவுரைமுதலியவற்றில் இவ்ரால் எடுத்துக்காட்டப்பட்டுள்ள மேற்கோள்களமைந்த நூல்களுள் இதுகாறும் விளங்கியவை வருமாறு:—

க. அகத்தியம்
உ. அகநானூறு
ங. அணியியல்
ச. அவிநயம்
ரு. ஆசாரக்கோவை
சு. இறையனாரகப்பொருள்
எ. எழீஇக்கோவை
அ. ஏலாதி
கூ. ஐங்குறுநூறு
க0. ஐந்திணையெழுபது
கக. ஐந்திணையைம்பது
கஉ. கடகண்டு
கங. கலித்தொகை
கச. களவழிநாற்பது
கரு. காக்கைபாடினியம்
கசு. குணநாற்பது
கஎ. குறிஞ்சிப்பாட்டு
கஅ. குறுந்தொகை
ககூ. கூத்தநூல்
உ0. கைந்நிலை
உக. கொன்றைவேந்தன்
உஉ. சிலப்பதிகாரம்
உங. சிறுகாக்கைபாடினியம்
உச. சிறுபஞ்சமூலம்
உரு. சிறுபாணாற்றுப்படை
உசு. சினேந்திரமாலை
உஎ. சீவகசிந்தாமணி
உஅ. தகடூர்யாத்திரை
உகூ. திணைமாலைநூற்றைம்பது
ங0. திணைமொழியைம்பது
ஙக. திரிகடுகம்
ஙஉ. திருக்குறள்
ஙங. திருக்கோவையார்
ஙச. திருமுருகாற்றுப்படை
ஙரு. திருவாசகம்
ஙசு. தொல்காப்பியம்
ஙஎ. நற்றிணைநானூறு
ஙஅ. நாடகநூல்
ஙகூ நாலடியார்
ச0. நெடுநல்வாடை
சக. பட்டினப்பாலை
சஉ. பதிற்றுப்பத்து
சங. பரிபாடல்
சச. பல்காப்பியம்
சரு. பல்காயம்
சசு. பழமொழி
சஎ. பன்னிருபடலம்
சஅ. பாரதவெண்பா
சகூ. புறநானூறு
ரு0. புறப்பொருள்வெண்பாமாலை
ருக. பூதபுராணம்
ருஉ. பெருங்கதை
ருங. பெரும்பாணாற்றுப்படை
ருச. பெரும்பொருள்விளக்கம்
ருரு. பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதி
ருசு. பொருநராற்றுப்படை
ருஎ. மணிமேகலை
ருஅ. மதுரைக்காஞ்சி
ருகூ. மலைபடுகடாம்

| | |
|---|---|
| சுO. மாபுராணம் | சுரு. யாழ்நூல் |
| சுக. முத்தொள்ளாயிரம் | சுசு. வசைக்கடம் |
| சுஉ. முதுமொழிக்காஞ்சி | சுஎ. வஞ்சிப்பா |
| சுங. முல்லைப்பாட்டு | சுஅ. வளையாபதி |
| சுச. மோதிரப்பாட்டு | சுகூ. விளக்கத்தார்கூத்து. |

இன்னும் விளங்காத நூல்கள் பல.

தொல்காப்பியவுரைமுதலியவற்றில் வேதம், வேதாங்கம் முதலிய பலநூல்களிலிருந்தும் பல உரைகளிலிருந்தும் பற்பல அரியவிஷயங்களை ஆங்காங்கு எடுத்துக்காட்டி நன்குவிளக்கிப்போகின்றமையின், இவரை வடமொழியிலும் மிக்க பயிற்சியுள்ளவராகச் சொல்லுதற் கிடமுண்டு.

உரையாசிரியர், சேனாவரையர், பேராசிரியர், ஆளவந்தபிள்ளையாசிரியர் முதலிய உரையாசிரியர்கள் இவருடைய உரையில் எடுத்துக்கூறப்பட்டிருத்தலின், அவர்களுக்கு இவர் காலத்தினாற்பிற்பட்டவரென்று தெரிகின்றது.

அமிழ்தினுமினிய தமிழ்மடவரல் செய் அருந்தவத்தின் பெரும்பயனாக அவதரித்தருளிய இம்மகோபகாரியின் அருமைபெருமைகள் விரிவஞ்சி விடுக்கப்பட்டன.

இவருடைய மேம்பாட்டைப் பாராட்டி அக்காலத்து ஆன்றோராற் செய்யப்பட்ட உரைச் சிறப்புப்பாயிரச் செய்யுட்கள் வருமாறு:—

வெண்பா.

பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியு
மாரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்குஞ்— சாரத்
திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
விருத்திநச்சி னார்க்கினிய மே.

தொல்காப் பியத்திற் றொகுத்த பொருளனைத்து
மெல்லார்க்கு மொப்ப வினிதுரைத்தான்—சொல்லார்
மதுரைநச்சி னார்க்கினியன் மாமறையோன் கல்விக்
கதிரின் சுடரெறிப்பக்கண்டு.

ஆசிரியப்பா.

பாற்கடல் போலப் பரந்த நன்னெறி
நூற்படு வான்பொரு ளுண்ணிறி னுணர்ந்த
போக்கறு கேள்விப் புலவோர் புலத்தி
னாற்பொருள் பொதிந்த தூக்கமை யாப்பினைத்
தேக்கிய சிந்தைய னாகிப் பாற்பட
வெழுத்துஞ் சொல்லும் பொருளுமிம் மூன்று
மிழுக்கற வாய்ந்த வழுக்கிறெல் சேர்த்தித்

தொல்காப் பியமெனுந் தொடுகடற் பரப்பை
மறுவுங் குறைவு மின்றி யென்றுங்
கலையி னிறைந்த கதிர்மதி யென்ன
நிலையுடை கலத்தி னெடுங்கரை காணுக்
கல்லா மாந்தர் கற்பது வேண்டியு
நல்லறி வுடையோர் நயப்பது வேண்டியு
முரையிடை யிட்ட காண்டிகை யுரைத்து
மான்றோர் புகழ்ந்த வறிவினிற் றெரிந்து
சான்றோ ருரைத்த தண்டமிழ்த் தெரிய
லொருபது பாட்டு முணர்பவர்க் கெல்லா
முரையற முழுதும் புரைபட வுரைத்து
மொலித்திரைத் தலத்தி னுணர்ந்தோ ருரைக்குங்
கலித்தொகைக் கருத்தினைக் காட்சியிற் கண்டதற்
குள்ளுறை யுவமமு மேனை யுவமமுந்
தெள்ளிதிற் றெரிந்து திணைப்பொருட் கேற்ப
வுள்ளுறை யுவமத் தொளித்த பொருளைக்
கொள்பவர் கொள்ளக் குறிப்பறிந் துணர்த்தி
யிறைச்சிப் பொருளுக் கெய்தும் வகையைத்
திறப்படத் தெரிந்து சீர்பெறக் கொளீஇத்
துறைப்படு பொருளொடு சொற்பொருள் விளக்கி
முறைப்பட வினையை முடித்துக் காட்டிப்
பாட்டிடை மெய்ப்பாடு பாங்குறத் தெரித்துப்
பாற்பட நூலின் யாப்புற வுரைத்த
நாற்பெயர் பெயரா நடப்பக் கிடத்திப்
போற்ற வின்னுரை பொருள்பெற விளம்பியும்
வையம் புகழ்ந்து மணிமுடி சூட்டிய
பொய்யில் வான்கதை போதிந்த செந்தமிழ்ச்
சிந்தா மணியைத் தெண்கடன் மாநிலம்
வந்தா தரிப்ப வண்பெரு விஞ்சிப்
பொய்யா மொழிபுகழ் மையறு காட்சித்
திருந்தத முனிவன் கருத்திது வென்னப்
பருப்பொருள் கடிந்து பொருட்டொடர்ப் படுத்து
வினைபொடு முடியப் புனையுரை யுரைத்து
நல்லறி வுடைய தொல்பே ராசான்
கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்
பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்
கிதுபொரு ளென்றவ னெழுதா தொழிய
விதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்துங்

தண்டமிழ் தெரித்த வண்புகழ் மறையோன்
வண்டியிர் சோலை மதுரா புரிதனி
லெண்டிசை விளங்க வந்த வாசான்
பயின்ற கேள்விப் பாரத் துவாச
ஞன்மறை துணிந்த நற்பொரு ளாகிய
தூய ஞான நிறைந்த சிவச்சுடர்
தானே யாகிய தன்மை யாள
னவின்ற வாய்மை **நச்சினார்க் கினிய**
னிருவினை கடியு மருவியம் பொதியின்
மருவிய குறுமுனி தெரிதமிழ் விளங்க
வூழி யூழி காலம்
வாழி வாழியிம் மண்மிசை தானே.

## விருத்தம்.

பச்சைமா லனைய மேகம் பௌவநீர் பருகிக் கான்ற
வெச்சினூற் றிசையு முண்ணு மமிழ்தென வெழுநா வெச்சின்
மெச்சிநா ளூம் விண்ணோர் மிசைகுவர் வேத போத
**னச்சினார்க் கினிய** னெச்சி னறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்.

---

# முல்லைப்பாட்டு.

நனந்தலை யுலகம் வளைஇ நேமியொடு
வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை
நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்
பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு
கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி
பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை
யருங்கடி மூதூர் மருங்கிற் போகி
யாழிசை யினவண் டார்ப்ப நெல்லொடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
யரும்பவி ழலரி தூஉய்க்கை தொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்பச்
சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றி
னுறுதுய ரலமர னோக்கி யாய்மக
ணடுங்குசுவ லசைத்த கையள் கைய
கொடுங்கோற் கோவலர் பின்னின் றுய்த்தர
வின்னே வருகுவர் தாய ரென்போ
ணன்னர் நன்மொழி கேட்டன மதனா
னல்ல நல்லோர் வாய்ப்புட் டெவ்வர்
முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து
வருத றலைவர் வாய்வது நீநின்
பருவர லெவ்வங் களைமா யோயெனக்
காட்டவுங் காட்டவுங் காணாள் கலுழ்சிறந்து
பூப்போ லுண்கண் புலம்புமுத் துறைப்பக்
கான்யாறு தழீஇய வகனெடும் புறவிற்
சேணாறு பிடவமொடு பைம்புத லெருக்கி
வேட்டுப்புழை யருப்ப மாட்டிக் காட்ட
விடுமுட் புரிசை யேமுற வளைஇப்
படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி
யுவலைக் கூரை யொழுகிய தெருவிற்
கவலை முற்றங் காவ னின்ற

தேம்படு கவுள சிறுகண் யானை
யோங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைந் தியாத்த
வயல்விளை யின்குள குண்ணாது நுதறுடைத்
தயினுனை மருப்பிற்றங் கையிடைக் கொண்டெனக்
கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக்
கல்லா விளைஞர் கவளங் கைப்பக்
கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான்
முக்கோ லசைநிலை கடுப்ப நற்போ
ரோடா வல்விற் றூணி நாற்றிக்
கூடங் குத்திக் கயிறுவாங் கிருக்கைப்
பூந்தலைக் குந்தங் குத்திக் கிடுகுநிரைத்து
வாங்குவில் லரண மரண மாக
வேறுபல் பெரும்படை நாப்பண் வேறோர்
நெடுங்காழ்க் கண்டங் கோலி யகனேர்பு
குறுந்தொடி முன்கைக் கூந்தலஞ் சிறுபுறத்
திரவுபகற் செய்யுந் திண்பிடி யொள்வாள்
விரவுவரிக் கச்சிற் பூண்ட மங்கையர்
நெய்யுமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக்
கையமை விளக்க நந்துதொறு மாட்ட
நெடுநா வொண்மணி * நிழற்றிய நடுநா
ளதிரல் பூத்த வாடுகொடிப் படாஅர்
சிதர்வர லசைவளிக் கசைவந் தாங்குத்
துகின்முடித்துப் போர்த்த தூங்க லோங்குநடைப்
பெருமூ தாள ரேமஞ் சூழப்
பொழுதளந் தறியும் பொய்யா மாக்க
டொழுதுகாண் கையர் தோன்ற வாழ்த்தி
யெறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்நின்
குறுநீர்க் கன்ன லினைத்தென் றிசைப்ப
மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை
மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து
வலிபுணர் யாக்கை வன்கண் யவனர்
புலித்தொடர் விட்ட புனைமா ணல்லிற்
றிருமணி விளக்கங் காட்டித் திண்ஞா

* மிழற்றிய வென்றும் பாடம்.

ணெழினி வாங்கிய வீரறைப் பள்ளியு
ளுடம்பி னுரைக்கு முரையா நாவிற்
படம்புகு * மிலேச்ச ருழைய ராக
மண்டமர் நசையொடு கண்படை பெறாஅ
தெடுத்தெறி யெஃகம் பாய்தலிற் புண்கூர்ந்து
பிடிக்கண மறந்த வேழம் வேழத்துப்
பாம்புபதைப் பன்ன பருஉக்கை துமியத்
தேம்பாய் கண்ணி நல்வலந் திருத்திச்
சோறுவாய்த் தொழிந்தோ ருள்ளியுந் தோறுமிபு
வைந்நுனைப் பகழி மூழ்கலிற் செவிசாய்த்
துண்ணா துயங்கு மாசிந் தித்து
மொருகை பள்ளி யொற்றி யொருகை
முடியொடு கடகஞ் சேர்த்தி நெடிது நினைந்து
பகைவர்ச் சுட்டிய படைகொ ணோன்விர
னகைதாழ் கண்ணி நல்வலந் திருத்தி
யரசிருந்து பனிக்கு முரசுமுழங்கு பாசறை
யின்றுயில் வதியுநற் காணா துயருழந்து
நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு
நீடுநினைந்து தேற்றியு மோடுவளை திருத்தியு
மையல் கொண்டு மொய்யென வுயிர்த்து
மேவுறு மஞ்ஞையி னடுங்கி யிழைநெகிழ்ந்து
பாவை விளக்கிற் பருஉச்சுட ரழல
விடஞ்சிறந் துயரிய வெழுநிலை மாடத்து
முடங்கிறைச் சொரிதரு மாத்திர ளருவி
யின்ப லிமிழிசை யோர்ப்பனள் கிடந்தோ
ளஞ்செவி நிறைய வாலின வென்றுபிறர்
வேண்டுபுலங் கவர்ந்த வீண்டுபெருந் தானையொடு
விசய வெல்கொடி யுயரி வலனேர்பு
வயிரும் வளையு மார்ப்ப வயிர
செறியிலைக் காயா வஞ்சன மலர
முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்
கோடற் குவிமுகை யங்கை யவிழத்

* மிலேச்சரென்றும் பாடம்.

தோடார் தோன்றி குருதி பூப்பக்
கான நந்திய செந்நிலப் பெருவழி
வானம் வாய்த்த வாங்குகதிர் வரகிற்
றிரிமருப் பிரலையொடு மடமா னுகள
வெதிர்செல் வெண்மழை பொழியுந் திங்களின்
முதிர்காய் வள்ளியங் காடுபிறக் கொழியத்
துனைபரி துரக்குஞ் செலவினர்
வினைவிளங்கு நெடுந்தேர் பூண்ட மாவே.

## இதன்பொருள்.

இப்பாட்டிற்கு முல்லையென்று பெயர்கூறினார்; முல்லைசான்ற கற்புப் பொருந்தியதனால். இல்லறநிகழ்த்துதற்குப் பிரிந்து வருந்துணையும் ஆற்றியிருவென்று கணவன் கூறிய சொல்லைப் பிழையாமல் ஆற்றியிருந்து இல்லறநிகழ்த்திய இயற்கை முல்லை யாமென்றுகருதி இருத்தலென்னும்பொருடர முல்லையென்று இச்செய்புட்கு நப்பூதனார் பெயர்கூறினமையிற் கணவன் வருந்துணையும் ஆற்றியிருந்தாளாகப் பொருள்கூறலே அவர்கருத்தாயிற்று. * "தானேசேறல்" என்னும்விதியால், அரசன் தானே சென்றது இப்பாட்டு

(குறிப்பு) முல்லைசான்றகற்பு - இருத்தல் அமைந்தகற்பு ; முல்லை-இருத்தல். இனி முல்லைமலரைச் சூடுதற்கமைந்த கற்பெனினும் பொருந்தும் ; கற்புடைய மங்கையர் முல்லைமலரைச் சூடிக்கொள்ளுதல் மரபு. இதுகாரணம்பற்றியே முல்லைக்கொடி கற்பென்று பெயர்பெறும். வருந்துணையும் - வருமளவும். ஆற்றியிரு - பொறுத்திரு. "தானே சேறலுந் தன்னொடு சிவணிய, வேனோர் சேறலும் வேந்தன் மேற்றே" என்பதன்பொருள்: தன்பகையை வெல்லுதற்குத் தானே செல்லுதலும் அவனோடு நட்புக்கொண்ட மற்றையோர் அவனுக்குத் துணையாகிச் செல்லுதலும ஆகியஇருபகுதியும் அரசன் கண்ணவாம் எ-று என்றது, பகைவரை அடக்குதற்கு அரசன் றானே செல்லுதலும் அவனோடு நட்புக்கொண்ட பிறர் செல்லுதலும் விதியாமென்றவாறு.

இது, தலைவன் வினைவயிற்பிரியக்கருதியதனை அவன்குறிப்பானுணர்ந்து ஆற்றாளாய தலைவியதுநிலைமைகண்டு அவன் வற்புறுப்பவும் உடம்படாதவளைப் பெருமுதுபெண்டிர் அவன் வினைமுடித்துவருதல் வாய்வது, நீவருத்தநீங்குவதெனக்கூற, அதுகேட்டு அவள் நீடுநினைந்து ஆற்றியிருந்தவழித் தலைவன் அக்காலத்தே வந்ததனைக்கண்டு வாயில்கள் தம்முட்கூறி

* தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், உஎ

யது. இது, * "வாயி லுசாவே தம்முளு முரிய" † "எல்லா வாயிலு மிருவர் தேஎத்தும்-புல்லிய மகிழ்ச்சிப் பொருள வென்ப" என்பனவற்றாற்கூறினார்

(கு - பு) வினைவயின் - போர்க்கண். ஆற்றாள் ஆய - பொறாதவளாகிய. பெருமுது பெண்டிர் - மிகமுதிர்ந்த மகளிர். வாய்வது - உண்மை. நீங்குவது - நீங்கவேண்டுவது. பெண்டிர் கூறவென்க. நீடுநினைந்து - இவ்வாறு தலைவர் பிரிந்தாலல்லாமல் அரசியல் நடவாதென்று நினைத்து. வாயில்கள் - தூதிற்குரியவர்கள். 'வாயிலுசாவே' என்பதற்குப்பொருள்: ஒருவர் மற்றொருவர்க்கு உரைப்பதுபோலத் தங்களுட் சொல்லுதலும் அமையுமென்பது. 'எல்லாவாயிலும்' என்பதன்பொருள்: தூதிற்குரிய எல்லோரும் தலைவனிடத்தும் தலைவியிடத்தும் பொருந்திய மனமகிழ்ச்சிப் பொருளை நிகழ்த்துதலைத் தமக்குப் பொருளாகவுடையர். எ - று.

1. நனந் தலை உலகம் வளைஇ—அகலத்தை இடத்தேயுடைய உலகத்தை வளைத்து,

(கு - பு) 'நன' என்பது அகரவீற்று உரிச்சொல்; அகலம் என்னுங் குறிப்புப் பொருளையுணர்த்தும்.

1, 2. [நேமியொடு, வலம்புரி பொறித்த மாதாங்கு தடக்கை:]

1. நேமியொடு வலம்புரி தாங்கு தடக் கை மால் (௩.)—சக்கரத்தோடே வலம்புரியைத்தாங்கும் பெரியகைகளையுடையமால்,

(கு - பு) வலம்புரி - ஒருவகைச்சங்கு; வலமாகவளைந்துள்ளதென்பது பொருள்.

2. மா பொறித்த மால் (௩.)—திருமார்பிடத்தே திருமகளை வைத்த மால்.

(கு - பு) பொறித்த - வைத்த; இதனை "வடபுலவிமயத்து வாங்குவிற் பொறித்த" என்னும் சிறுபாணாற்றுப்படையுரையானுமுணர்க.

3. நீர் செல நிமிர்ந்த மாஅல் போல—மாவலிவார்த்த நீர் தன்கையிலே சென்றதாக உயர்ந்த திருமாலைப்போல,

இனி, நேமியோடே வலம்புரியையுமுடைய உத்தம விலக்கணங்களைப் பெற்றிருக்கின்ற திருமகளையணைத்தகையிலே நீர் செல்லவென்றுமாம்

இதனாலே முல்லைக்குரிய தெய்வங்கூறினார்.

(கு - பு) மாவலி - ஓரசுரன்; இவனிடம் திருமால் குறுகியவடிவத்துடன்சென்று மூன்றடிமண்கேட்டு உடன்பட்ட அவன் தாரைநீர்வார்த்தவுடனே பெரியவடிவங்கொண்டு பூமியையும் ஆகாயத்தையும் அளந்தாரென்பது புராணகதை. நேமி - சக்கரம்; ஈண்டுச் சக்கரரேகை; வலம்புரி - சங்கரேகை; இவை சிறந்த ஆடவர் மகளிர்களுடைய கையிலுள்ள உத்தம இலக்கணங்கள்; பெற்றிருக்கின்ற கையென இயைத்தலும் பொருந்

* தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல், உ0௬.
† " " கற்பியல், ௩௭.

தும்; "வலம்புரி பொறித்த வண்கை மதவலி" என்றார்; (சிந்தா. நாம. கள் ) திருமால் முல்லைத்திணைக்குரியதெய்வம்; 'மாயோன்மேய காடுறையுலகம்' என்பர்; (தொல். பொரு. ).

4, 5. [பாடிமிழ் பனிக்கடல் பருகிவல னேர்பு, கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி:]
பாடு இமிழ் பனிக் கடல் பருகி வலன் ஏர்பு கோடு கொண்டு—ஒலிமுழங்குகின்ற குளிர்ச்சியையுடைய கடலைக்குடித்து வலமாகவெழுந்து மலைகளை இருப்பிடமாகக்கொண்டு,

5. உலகம் வளைஇ (க) எழுந்த கொடுஞ்செலவு எழிலி—பெய்யுங் காலத்தே உலகத்தைவளைத்தெழுந்த கடியசெலவினையுடைய மேகம்,

மால் நீர் செல நிமிர்ந்தாற்போல மேகமும் நீர்செலநிமிர்ந்ததென்றார். இனி உலகத்தைத் திருவடிகளிலே அணைத்துக்கொண்டுநிமிர்ந்த மாலென்று முரைப்பர்.

6. பெரும்பெயல் பொழிந்த சிறு புன் மாலை—பெரிய மழையைப் பெய்த சிறுபொழுதாகிய வருத்தஞ்செய்கின்ற மாலைக்காலத்துப் பாவைவிளக்கு (அ) எனக்கூட்டுக.

இதனானே முல்லைக்குரிய * காரும் மாலையுங் கூறினார்.
மால்போலெழுந்த எழிலிபொழிந்த மாலையென்க.

(கு - பு) 'பெரும்பெயல் பொழிந்த' என்றதனாற் கார்காலம் கூறப்பட்டது. கார்காலமும் மாலைக்காலமும் முறையே முல்லைத்திணைக்குரிய பெரும்பொழுதும் சிறுபொழுதுமாம்.

7. [அருங்கடி மூதூர் மருங்கிற் போகி:] அருங்கடி மூதூர் மருங்கில் நல்லோர் (கஅ) போகி—அரியகாவலையுடையபழைய ஊர்ப்பக்கத்துப் பாக்கத்தே படைத்தலைவரேவலால் நற்சொற்கோடற்குரியோர்போய்,

(கு - பு) பாக்கம் - பக்கத்துள்ள ஊர். நற்சொற்கோடல் - நல்லநிமித்தமான வார்த்தையைக்கேட்டல்.

8, 11. [யாழிசை யினவண் டார்ப்ப நெல்லொடு, நாழி கொண்ட நறுவீ முல்லை, யரும்பவி ழலரி தூஉய்க்கை தொழுது, † பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப.]

8. 10. நறு வீ முல்லை அரும்பு யாழ் இசை இனவண்டு ஆர்ப்ப அவிழ் அலரி நாழி கொண்ட நெல்லொடு தூஉய்—நறியபூக்களையுடைய முல்லையினது அரும்புகள் யாழினது ஓசையினையுடைய இன

* "காரு மாலையு முல்லை குறிஞ்சி - கூதிர் யாம மென்மனார் புலவர்." என்பது தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், ௬.

† பெருமுதுபெண்டிரென்பதற்கு ஒருபிரதியிலும் உரையிலது; பெரிய முதிர்ந்த பெண்டிரென்க.

மானவண்டுகள் ஆரவாரிக்கும்படி அவிழ்ந்தபூவை நாழியிடத்தே கொண்டுபோன நெல்லுடனேதூவி,

10, 11. கை தொழுது விரிச்சி நிற்ப—தெய்வத்தை வணங்கி நற்சொற் கேட்டு நிற்க,

நல்லோர் (கஅ) போகித் (எ) தூஉய்த் தொழுது நிற்பவென்க.

என்றது:—ஒருவேந்தன் ஒருவேந்தனோடு இகல்கருதினாற் போர்செய்யவேண்டுதலின், அவனூட்டந்தணர்முதலியோரைத்தன்னூட்டின்கண்ணே அழைத்தற்கும், அதனையறியாத ஆவைக் கொண்டுபோந்து தான் காத்தற்குமாகத் தன்படைத்தலைவரைநோக்கி அரசன் நிரையடித்தற்குஏவியவழி, அவர் அவனூரினின்றும்போய் ஒருபாக்கத்துவிட்டிருந்து அரசனுக்கு மேல்வரும் ஆக்கத்தையறிதற்கு விரிச்சிபோக்கல் வேண்டுமென்று புறத்திணையியலுட் கூறினமையான், ஈண்டும் அவ்வாறேகூறினார். அது, * "வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புலக் களவி - னாதந் தோம்பன் மேவற் றாகும்." † "படையியங் கரவம் பாக்கத்து விரிச்சி" என்னுஞ் சூத்திரங்களானும், "திரைகவுள் வெள்வாய்த் திரிந்துவீழ் தாடி - நரைமுதியோ னின்றுரைத்த நற்சொ-னிரையன்றி - யெல்லைநீர் வைய மிறையோற் களிக்குமால் - வல்லையே சென்மின் வழி." என்னும் உதாரணத்தானுமுணர்க. இவர் இதுகேட்டு நிரைகொண்டால் அரசன் வஞ்சிசூடி மண்ணசையால் மேற்செல்வனென்பது. ஆண்டு ‡ "எஞ்சா மண்ணசைஇ" என்னுஞ்சூத்திரத்திற் கூறியவாறே ஈண்டுக்கூறினார். அது மேல் "முனைகவர்ந்து" (கக) என்பதனானுணர்க.

(கு - பு) நாழி - அளத்தற்கருவிகளுள் ஒன்று. இகல் - பகை. அவனூடு - பகைவன்றேயம். அதனை - அப்போரை. நிரையடித்தற்கு - பசுக்கூட்டங்களை ஓட்டிக்கொண்டுவருதற்கு. ஆக்கம் - விருத்தி. "வேந்துவிடு முனைஞர்" என்பதன்பொருள்:—அரசனால் விடப்பட்டு முனைப்புலங்காத்திருந்த சேனைத்தலைவர், பகைநிலத்தேசென்று களவினாலே பசுக்கூட்டத்தைக்கொண்டுபோந்து பாதுகாத்தலைப் பொருந்துதலுடையதாகும் வெட்சித்திணையென்பது. "படையியங்கரவம்" என்பதன்பொருள். நிரைகொள்ளுதற்கு எழுந்த சேனை படைவீட்டின் புறத்தேசெல்லுதலாலுண்டாகும் ஓசையும், அங்ஙனம் எழுந்த சேனைவீரர்போய் இரவில் நற்சொற்கேட்டலும். 'திரைகவுள்' என்னும் செய்யுட்குப்பொருள்: திரை கவுள் - சுருண்ட கன்னத்தையும்,வெள் வாய்-வெள்ளியவாயினையும், திரிந்துவீழ்தாடி-முறுக்குண்டு வீழ்ந்த தாடியினையும்,நரை-நரையையுமுடைய,முதியோன், நின்று உரைத்த நற்சொல்-நின்றுசொல்லிய நன்னிமித்தச்சொல்லான.

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல், உ.
† " " " ங.
‡ " " " எ.

விரை அன்றி-பசுக்கூட்டத்தை அளித்துவிடுவதல்லாமல், நீர் எல்லை வையம்- காலை எல்லையாகவுடைய பூமியையும், இறையோற்கு அளிக்கும்-அரசனுக்குக் கொடாநிற்கும், ஆதலால், வல்லை நீர் வழி சென்மின் - விரைவாக நீர் வழியிற் செல்லுவீராக. எ - று. வஞ்சிமாலையைச் சூடுதல் பகைமேற் செல்வோர் தொழில். "எஞ்சா மண்ணசை-இ" என்னும் சூத்திரம்: "எஞ்சா மண்ணசைஇ வேந்தனை வேந்தன், அஞ்சுதகச் சென் றடல்குறித் தன்றே." இ - ள். எஞ்சா மண் நசை இ - குறையாத பூமியைவிரும்பி, அதனால், அஞ்சுதகத் தலைச்சென்று - அங்கே வாழ்வோர்களுக்கு அஞ்சுதலுண்டாகும்படி அந்நாட்டிடத்தேசென்று, வேந்தனை வேந்தன் - ஒருவேந்தனை மற்றொருவேந்தன், அடல் குறித்தன்று - அடுதலைக்கருதியது வஞ்சித்திணை. எ - று.

12, 18. [சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின், உறுதுய ரலமர னோக்கி யாய்மக, ணடுங்குசுவ லசைத்த கையள் கைய, கொடுங்கோற் கோவலர்பின்னின் றுய்த்தர, வின்னே வருகுவர் தாயரென்போ, ணன்னர் நன்மொழி கேட்டன மதனா, னல்ல நல்லோர் வாய்ப் புள்:]

17, 18. நன்னர் வாய்ப்புள்—அவர்கேட்ட நன்றாகிய நற்சொல்,

13, 14. ஆய்மகள் நடுங்கு சுவல் அசைத்த கையள்—இடைச்சாதியின் மகள் குளிரால் நடுங்குகின்ற தோளின்மேலே கட்டின கையளாய்நின்று,

12, 13. சிறு தாம்பு தொடுத்த பசலைக் கன்றின் உறு துயர் அலமரல் நோக்கி—சிறியதாம்பாலே காலிலே கட்டப்பட்ட வருத்தத்தையுடைத்தாகிய கன்றினுடைய முலைபுண்ணுமலுறுகின்ற துயரலே தாய்வருமென்று சுழலுகின்ற தன்மையைப் பார்த்து,

14, 15. கைய கொடுங்கோற் கோவலர் பின்னின்று உய்த்தர—கையிடத்தனவாகிய கொடிய கோலையுடைய இடையர் பின்னேநின்று செலுத்துதலைச் செய்கையினாலே,

16, 17. தாயர் இன்னே வருகுவர் என்போள் நன்மொழி கேட்டனம்—நிரம்பமேய்ந்து, நும்முடைய தாய்மார் இப்பொழுதேவருவரென்று கூறுகின்றோளுடைய நன்றாகிய வார்த்தையாக யாங்கள் கேட்டோம்;

(கு-பு) தாயரென அஃறிணை உவமையின்கண் உயர்திணையாகவந்தது.

17. அதனால்—அவள் கூறிய நற்சொல்லின் கருத்தால்,

18, 20. [தெவ்வர், முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து, வருதல் றலைவர் வாய்வது:] தலைவர் தெவ்வர் முனை கவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து வருதல் வாய்வது—நந்தலைவர் வஞ்சிசூடிச் சென்று பகைவர் மண்ணைக்கொண்டு பின் அவரிடத்தேவாங்கிக்கொண்ட திறையினையுமுடையராய் இங்ஙனம்

தாம் எடுத்துக்கொண்ட வினையை முடித்துவருவாரென்று நாங் கருதிய தன்மையிலே அவர் நிற்றலுண்மை,

18. நல்ல—அவர் அங்ஙனம் வினைமுடித்துவருதல், நமக்கு இல்லறம் நிகழ்தற்குக் காரணமாகலின் நல்லகாரியம்;

20, 21. [நீ நின், பருவர லெவ்வங் களைமா யோயென:] மாயோய் நீ நின் பருவரல் எவ்வம் களை என—மாமைநிறத்தையுடையோளே, நீ நின் மனத்தடுமாற்றத்தான் உளதான வருத்தத்தைப் போக்கென்றுகூற, அதுகேட்டு,

(கு - பு) மாமைநிறம் - நாருரித்த ஆம்பற்றண்டுபோன்றநிறம்; "நீர் வள ராம்பற் றூம்புடைத்திரள்கா, லூருரித் தன்ன மதனின்மாமை" என்பது நற்றிணை, கூ.

செலவுக்குறிப்பறிந்து வேறுபட்டதுணர்ந்தமையின், மனத்தடுமாற்றமென்றார்.

பெருமுதுபெண்டிர் (கக), நல்லோர் (கஅ) போகித் (எ) தூஉய்த் தொழுது (க0) விரிச்சி நிற்ப (கக) அவர்கேட்ட நன்னர் (கஎ) வாய்ப்புள் (கஅ) ஆய்மகள் (கங) கையளாகிக் (கச) கன்றின் (கஉ) அலமரனோக்கித் (கரு) தாயர் இன்னே வருகுவரென்போளுடைய (கசு) நன்மொழியாக யாங்கள் கேட்டனம்; அதன்கருத்தால் (கஎ). தலைவர் வருதல் வாய்வது (உ0); நல்லகாரியம் (கஅ); மாயோய் உக), நீ நின் (உ0) பருவரலெவ்வங் களையென்று கூற (உக) அதுகேட்டு நீடுநினைந்து (அஉ) என்க

இங்ஙனம் பொருள்கூறாமல் தலைவியது இரக்கமிகுதிகண்டு பெருமுதுபெண்டிர் விரிச்சிகேட்டுவந்து தலைவர்வருவாராதல் வாய்வது; நின் எவ்வங்களையென்று பல்காலும் ஆற்றுவிக்கவும் ஆற்றாளாய்த் துயருழந்து (அ0) புலம்பொடு (அக) தேற்றியும் திருத்தியும் (அஉ) மையல்கொண்டும் உயிர்த்தும் (அங) நடுங்கிநெகிழ்ந்து (அச) கிடந்தோள் (அஅ) எனப் பொருள் கூறியக்கால் நெய்தற்குரிய இரங்கற்பொருட்டன்றி முல்லைக்குரிய இருத்தற்பொருட்டாகாமையுணர்க. அன்றியும் தலைவன் காலங்குறித்தல்லது பிரியானென்பதூஉம், அவன் குறித்தகாலங்கண்டால் தலைவிக்கு வருத்தமிகுமென்பதூஉம், அது பாலையாமென்பதூஉம், அவ்வாற்றாமைக்கு இரங்கல் நிகழ்ந்தால் நெய்தலாமென்பதூஉம் நூற்கருத்தாதலுணர்க.

22. [காட்டவுங் காட்டவுங் காணாள் கலுழ்சிறந்து:] காட்டவுங் காட்டவுங் கலுழ்சிறந்து காணாள—தலைவன் புகழும் மானமும் எடுத்துக்காட்டி வற்புறுத்தவும், தோன்றல்சான்ற மாற்றார் பெருமை கூறிக்காட்டி வற்புறுத்தவும் அன்புமிகுதியாற் கலக்கமிக்கு இவை அரசற்குவேண்டுமென்று மனத்திற் கருதாதவள்,

(கு - பு) இவை - பகைமேற்செலவும் போர்முதலியனவும்.

23. பூப்போல் உண் கண் புலம்பு முத்து உறைப்ப—பூப்போலும் மையுண்கண்கள் தாரையாகச்சொரியாது தனித்து வீழ்கின்ற முத்துப்போலுந் துளியைத் துளிப்ப, அதுகண்டு,

24. கான் யாறு தழீஇய அகல் நெடும் புறவின்—காட்டாறுசூழ்ந்த அகன்ற நெடிய காட்டிடத்தே,

25. சேண் நாறு பிடவமொடு பைம்புதல் எருக்கி—தூரியநிலத்தே நாறுகின்ற பிடவமோடே ஏனைப் பசியதூறுகளையும் வெட்டி,

(கு - பு) பிடவம் - ஒருவகைச்செடி.

26. வேட்டுப் புழை அருப்பம் மாட்டி — பகைப்புலத்துக்குக் காவலாகவிருக்கும் வேட்டுவச்சாதியினுடைய அரண்களையழித்து,

(கு - பு) வேடு - வேடச்சாதி. புழை - சிறியவாயில்கள்.

26, 27. [காட்ட, விடுமுட் புரிசை யேமுற வளைஇ:] காட்ட முள் இடு புரிசை ஏமுற வளைஇ — காட்டின்கண்ணவாகிய முள்ளாலிடு மதிலைக் காவலுறும்படி வளைத்து,

28. [படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி:] புணரி படும் நீரிற் பரந்த பாடி— திரையொலிக்கின்ற கடல்போறபரந்த பாசறைக்கண்ணே கண்படைபெறாது (கஎ) என்க.

(கு - பு) 'பரந்த பாசறை' எனவும் பாடம். (உச - உஅ) 'கான்யாறு ......பாடி'-என்பது, தொல். பொரு. சுக-ம் சூத்திரம் நச்சினார்க்கினியருரையில் மேற்கோளாகக் காட்டப்பட்டுள்ளது.

புறவிடத்தே (உச) எருக்கி (உரு) மாட்டி (உசு) வளைஇப் (உஎ) பரந்த பாடியென்க.

29. உவலைக் கூரை ஒழுகிய தெருவில்—தழையாலேவேய்ந்த கூரை ஒழுங்கப்பட்ட தெருவிடத்து,

30, 31. கவலை முற்றம் காவல் நின்ற தேம்படு கவுள சிறுகண்யானை—நாற்சந்தியானமுற்றத்தே காவலாகநின்ற மதம்பாய்கின்ற கதுப்பினையுடையவாகிய சிறியகண்ணையுடைய யானை,

(கு - பு) கதுப்பு - கன்னம்

32, 33, [ஓங்குநிலைக் கரும்பொடு கதிர்மிடைந்தியாத்த, வயல்விளையின் குளை குண்ணாது:] ஓங்குநிலைக் கரும்பொடு வயல் விளை கதிர் மிடைந்து யாத்த இன்குளகு உண்ணாது—வளர்கின்ற தன்மையையுடைய கரும்புகளோடே வயலிலே விளைந்த நெற்கதிரிடையே நெருங்கப்பட்டுக் கட்டிப்போகட்ட சாவியையும் இனிய * அதிமதுரத்தழையையுந் தின்னாமல்,

(கு - பு) யாத்தவற்றையும் குளகையுமென்க.

33, 34. நுதல் துடைத்து அயில்நுனை மருப்பில் தம் கையிடைக் கொண்டென — அவற்றாலே தம்நெற்றியைத்துடைத்துக் கூர்மையையுடைய முனைகளையுடைய கொம்பினிடத்தே ஏறட்ட தம் கையிடத்தே கொண்டுநின்றனவாக,

(கு - பு) ஏறட்ட—ஏற்றிக்கொண்ட.

* அட்டிமதுரத்தழையென்றும் பிரதிவேறுபாடுண்டு.

35, 36. [கவைமுட் கருவியின் வடமொழி பயிற்றிக், கல்லா விளைஞர் கவளங் கைப்ப:] கல்லா இளைஞர் வடமொழி பயிற்றிக் கவை முட் கருவியிற் கவளங் கைப்ப—வடமொழி அடியிலேகல்லாத இளைஞர் யானைப் பேச்சான வடமொழிகளைக் கற்றுப்பலகாற் சொல்லிக் கவைத்த முன்னையுடைய பரிக்கோலாலே கவளத் தைத் தின்னும்படி குத்த,

யானைக்குச்செய்யுந் தொழில்களொழிய வேறொரு தொழிலைக்கல் லாத இளைஞரென்றுமாம்.

(கு - பு) பரிக்கோல் - குத்துக்கோல்

37, 40. [கற்றோய்த் துடுத்த படிவப் பார்ப்பான், முக்கோ லசைநிலை கடுப்ப நற்போ, ரோடா வல்விற் றூணி நாற்றிக், கூடங் குத்திக் கயிறுவாங் கிருக்கை:]

40. கூடம் குத்திக் கயிறு வாங்கு இருக்கை—கூடமாகக் கால்களை நட்டுக் கயிற்றை வலித்துக்கட்டின இருப்பின்கண்ணே,

என்றது படங்குகளை.

(கு - பு) படங்குகள் - கூடாரங்கள்.

37, 38. கல் தோய்த்து உடுத்த படிவப் பார்ப்பான் முக்கோல் அசைநிலை கடுப்ப—துகிலைக் காவிக்கல்லைத் தோய்த்துடுத்த விரதங்களை யுடைய முக்கோலந்தணன் அம்முக்கோலிலே அந்த உடை யினை இட்டுவைத்த தன்மையையொக்க,

38, 39. நற்போர் ஓடா வல்வில் தூணி நாற்றி—அறத்தாற்பொருகின்ற போரிற்கு ஓடாமைக்குக் காரணமான வலியவில்லைச் சேர ஊன்றி அதிலே தூணிகளைத் தூக்கி,

41. பூந்தலைக் குந்தம் குத்தி—பூத்தொழிலைத் தலையிலேயுடைய எறி கோல்களையுமூன்றி,

பூந்தலை - விகாரம்

41. கிடுகு நிரைத்து—கிடுகுகளையும் நிரையக் குத்தி,

(கு - பு) கிடுகு - சட்டம்.

42. வாங்கு வில் அரணம் அரணமாக—இங்ஙனஞ்சூழும் விற்படை யாகிய அரணே தங்களுக்கு அரணாக, இதற்குள்ளேவிட்ட,

கயிறுவாங்கிருக்கைக்கண்ணே (௪0) நாற்றிக (௩௯) குத்தி நிரைத்து (௪௧) வாங்குவில்லரணமென்க (௪௨).

43. வேறு பல் பெரும்படை நாப்பண்—மொழி வேறுபட்ட பலவா கிய பெரிய படைக்குநடுவே,

(கு - பு) வேறு வேறுபாஷைகள் பேசப்படும் நாடுகள் பலவற்றி லிருந்து வந்தசேனை.

43, 44. [வேறோர், நெடுங்காழ்க் கண்டங் கோலிய கோர்பு:]

43, 44. வேறோர் அகம் நேர்பு—வேறோரிடத்தை அரசனுக்குக் கோயி லாக எல்லாருமுடம்பட்டு,

44. நெடுங்காழ்க் கண்டம் கோலி—நெடிய குத்துக்கோலுடனே பண்ணின பலநிறத்தாற் கூறுபட்ட மதிட்டிரையைவளைத்து,
கண்டம் - ஆகுபெயர்.

45. குறுந்தொடி முன்கைக் கூந்தல் அம் சிறுபுறத்து மங்கையர் (சஎ)—குறியதொடியையுடைய முன்கையினையும் கூந்தலசைந்து கிடக்கின்ற அழகினையுடைய சிறிய முதுகினையுமுடைய மங்கையர்,

46, 47. இரவு பகற்செய்யும் திண்பிடி ஒள் வாள் விரவு வரிக் கச்சிற் பூண்ட மங்கையர் — இராப்பொழுதைப் பகற்பொழுதாக்குந் திண்ணிய ஆசினையுடைய ஒள்ளியவாளை விரவினநிறத்தினையுடைய கச்சினாலேபூண்ட மங்கையர்,

(கு - பு) ஆசு - வாளின் உறை.

48, 49. நெய் உமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக் கை அமை விளக்கம் நந்துதொறும் மாட்ட—நெய்யைக்காலுகின்ற திரிக்குழாயையுடைய சிற்றுட்கள் நெடிய திரியை எங்குங்கொளுத்தி ஒழுங்காயமைந்த விளக்குக்கள் அவியுந்தோறும் தங்கையிற்பந்தத்தைக்கொளுத்த,

50. நெடுநா வொண்மணி கழற்றிய நடுநாள் — நெடிய நாக்கினையுடைய ஒள்ளியமணி எறிந்துவிட்ட நடுயாமத்தும்,
கோயில் பணிமடங்கினால் மணியெறிந்துவிடுதல் இயல்பு.
இனி யானை குதிரைமுதலியன துயில்கோடலின், அவற்றின் மணியோசை அடங்கிய நடுநாளென்றுமாம்.

(கு - பு) வீடுகளில் வேலைகளோய்ந்தபின்பு மணியை அடித்துவிடும் வழக்கமுண்டென்பது "நெடுநா வொண்மணி கடிமனை யிரட்ட", "யாமங் கொள்பவர் நெடுநா வொண்மணி, யொன்றெறி பாணியி னிரட்டும்" என்னும் நற்றிணைச்செய்யுட்களாலும் வலியுறுத்தப்படுகின்றது.

51, 52. அதிரல்பூத்த ஆடு கொடிப் படாஅர் சிதர் வரல் அசை வளிக்கு அசைவந்தாங்கு—புனலிபூத்த அசைகின்ற கொடியினையுடைய சிறுதூறுகள் துவலையோடே வருதலையுடைய அசைந்த காற்றிற்கு அசைந்தாற்போல,
சிதர் - மெத்தெனவுமாம்.

(கு - பு) புனலி - ஒருவகைப்பூஞ்செடி; பழைய நூல்களிற் காணப்படுகின்றது.

53, 54. துகில் முடித்துப் போர்த்த தூங்கல் ஓங்கு நடைப் பெரு மூதாளர் ஏமம் சூழ—மயிர்க்கட்டுக்கட்டிச் சட்டையிட்ட அனந்தரினையும்,பெரிய ஒழுக்கத்தினையுமுடைய மெய்காப்பாளர் காவலாகச் சூழ்ந்துதிரிய,

(கு - பு) மயிர்க்கட்டு - தலைக்கட்டு (தலைக்குட்டை). அனந்தர் - கள்ளின் செருக்கு. மெய்காப்பாளர் - அரசன் சரீரத்தைப் பாதுகாப்பவர்கள்.

55, 56. [பொழுதளந் தறியும் பொய்யா மாக்க, டொழுதுகாண் கையர் தோன்ற வாழ்த்தி:]

55, 56. மாக்கள் பொழுது அளந்தறியும் பொய்யாக் காண்கையர்—அறிவில்லாதோருடைய வாழ்நாளை இத்துணையென்று அளந்தறியும் பொய்யாத காட்சியையுடையார்,

(கு-பு) மாக்கள் - விதி விலக்கு அறியாதவர்கள்; "கையறியா மாக்கள்" என்பது நாலடியார்.

56. தொழுது தோன்ற வாழ்த்தி—அரசனை வணங்கி விளங்க வாழ்த்தி,

57. எறி நீர் வையகம் வெலீஇய செல்வோய்— திரையெறிகின்ற கடல்சூழ்ந்த உலகத்தே பகைவரை வெல்லுதற்குச் செல்கின்றவனே,

57, 58. நின் குறுநீர்க் கன்னல் இனைத்து என்று இசைப்ப—கிடாரத்து நீரிலேகாண்கின்ற நினது நாழிகைவட்டிலிற் சென்றநாழிகை இத்துணையென்று சொல்லுகையினாலே,

(கு-பு) குறுநீரென்றது நாழிகைவட்டிலை ; கன்னல் - நாழிகை.

59. [மத்திகை வளைஇய மறிந்துவீங்கு செறிவுடை:]

59. மத்திகை வளைஇய உடை—புரவியை அடிக்கின்ற சம்மட்டி வளைந்து கிடக்கின்ற உடை,

59. மறிந்து வீங்கு செறிவு உடை—அச்சம்மட்டி மறையும்படி வடிம்பு தாழ்ந்து பெருக்குஞ் செறிதலையுடைய புடைவையுடையினையும்,

(கு-பு) ஆண் உடையையும் புடைவையென்பது பண்டைக்கால வழக்கு.

60. மெய்ப்பை புக்க வெருவருந் தோற்றத்து—சட்டையிட்ட அச்சம்வருந் தோற்றரவினையும்,

(கு-பு) தோற்றரவு - தோன்றுதல்.

61. வலி புணர் யாக்கை — இயல்பான வலிகூடின மெய்யினையுமுடைய,

61. வன்கண் யவனர்—தறுகண்மையினையுடைய சோனகர்,

62. புலித்தொடர் விட்ட புனை மாண் நல்லில்—புலிச்சங்கிலிவிடப்பட்ட கைசெய்தமாட்சிமைப்பட்ட நன்றாகிய இல்லிலே,

63, 64. திரு மணி விளக்கம் காட்டித் திண் ஞாண் எழினி வாங்கிய ஈரறைப் பள்ளியுள்—அழகினையுடைய மாணிக்கமாகிய விளக்கை எரியவைத்துத் திண்ணிய கயிற்றிற்றிரையைவளைத்த புறவறைக்குள்ளறையிற் படுக்கைக்கண்ணேசென்று,

65, 66. [உடம்பி னுரைக்கு முரையா நாவிற், படம்புகு மிலேச்சருழைய ராக:] உரையா நாவின் உடம்பின் உரைக்கும் படம்

புகும் மிலேச்சர் உழையராக—வார்த்தை சொல்லாத நாவினை யுடைய கையாலும் முகத்தாலும் வார்த்தைசொல்லுஞ் சட்டை யிடுஞ் சரவாசிகள் பள்ளிகொள்ளுமிடத்தைச் சூழ்ந்து திரிய, உழையாநாவென்றார், ஊமைகளென்றற்கு,

(கு - பு) சரவாசிகள் - சரித்துக்கொண்டே வசிப்பவர்கள் ; இப்பெயரை அசாரவாசிகளென்றுங் கூறுவர் ; ஊமைகளைப் படுக்கையறையின் வாயிலிற்காவலாகவைத்தல் மரபு.

67. மண்டு அமர் நசையொடு கண்படை பெறாஅது—பகைவர் மனமறியாமல் மிக்குச்செல்கின்ற போரை நச்சுதலாலே கண்ணுறக்கம்பெறாமல்,

(கு - பு) நச்சுதல் - விரும்புதல்.

68, 69. எடுத்து எறி எஃகம் பாய்தலிற் புண்கூர்ந்து பிடிக்கணம் மறந்த வேழம் உள்ளியும் (எஉ —ஓச்சிவெட்டுகின்ற வாளழுந்துகையி னாலே புண்மிக்குப் பிடித்திரளைமறந்த வேழத்தையுள்ளியும்,

(கு - பு) ஓச்சி - உயர்த்தி. பிடி - பெண்யானை. வேழம் - இங்கே ஆண்யானை.

69, 70. [வேழத்துப், பாம்புபதைப் பன்ன பரூஉக்கை துமிய:] வேழத்துப் பரூஉக்கை பாம்பு பதைப்பன்ன துமிய—யானையினுடைய பரிய கைகள் பாம்பினது பதைக்கின்ற தன்மையையொத்த பதைப்பினையுடையவாக அற்றுவிழும்படி,

71, 72. தேம் பாய் கண்ணி நல்வலந் திருத்திச் சோறு வாய்த்து ஒழிந்தோர் உள்ளியும்—தேன்பரக்குமவஞ்சிமாலைக்கு நன்றாகிய வெற்றியை யுண்டாக்கிச் செஞ்சோற்றுக் கடனிறுததுப் பட்டவீரரை நினைத்தும்,

(கு - பு) செஞ்சோற்றுக்கடன் - செவ்விய சோற்றை அளித்தவர்களுக்குச் செய்யவேண்டிய உரிமை ; அஃதாவது உண்டவர்கள் தம்மைப் பாதுகாத்தோர் பொருட்டு உயிர்விடுதல் ; "செஞ்சோற்றுக் கடனின்றே கழியேனாகில்" என்பதனாலுமுணர்க (பாரதம்).

72, 74. தோல் துமிபு வைந்நுனைப் பகழி மூழ்கலிற் செவி சாய்த்து உண்ணாது உயங்கும் மா சிந்தித்தும்—பக்கரைகளை யறுத்துக் கூரிய முனையினையுடைய அம்புகள் வந்து அழுந்துகையினாலே செவிசாய்த்துப் புல்லுண்ணாதே வருந்துங் குதிரைகளை நினைத்தும்,

(கு - பு) பக்கரை - தோலாற்செய்த கலனைமுதலியவை.

75, 76. [ஒருகை பள்ளி யெற்றி யொருகை, முடியொடு கடகஞ் சேர்த்தி:] ஒருகை பள்ளி ஒற்றி ஒருகைக் கடகம் முடியொடு சேர்த்தி—ஒரு கையைப் படுக்கையின்மேலேவைத்து ஒருகையிற் கடகத்தை முடியோடேசேரவைத்து,

என்றது - கையிலே தலையைவைத்தென்றுயிற்று.

76. நெடிது நினைந்து—இப்படைநொந்தவளவுக்கு நாளை எவ்வாறு பொருமென்று நெடிதாகநினைந்து,

77. பகைவர்ச் சுட்டிய படை கொள் நோன் விரல்—பகைவரைக் கருதிவைத்த வாளைப்பிடித்த வலியினையுடைய கையாலே வெட்டிவென்று (அ,க) என்க.

78. நகை தாழ் கண்ணி நல்வலம் திருத்தி—தனக்கு எக்காலமும் விளக்கந்தங்கும்வஞ்சியைநன்றாகிய வெற்றிநிலைபெறத்திருத்தி,

79. அரசு இருந்து பனிக்கும் பாசறை—பகையரசிருந்து நடுங்குதற்குக்காரணமான பாசறை,

79. பனிக்கும் பாசறை—* நோய் தீருமருந்துபோனின்றது.

(கு - பு) நோய்தீருமருந்து - நோய்தீர்தற்குக்காரணமான மருந்து.

79 முரசு முழங்கு பாசறை—வெற்றிக்களிப்புத்தோன்ற முரசுமுழங்கும் பாசறை,

80, 84. [இன்றுயில் வதியுநற் காணா துயருழந்து, நெஞ்சாற்றுப் படுத்த நிறைதபு புலம்பொடு, நீடுநினைந்து தேற்றியு மோடுவளை திருத்தியு, மையல் கொண்டு மொய்யெனவுயிர்த்து, மேவுறு மஞ்ஞையி னடுங்கி யிழைநெகிழ்ந்து:]

80 வதியுநன் இன்றுயில் காணாள்—தன்னிடத்தேதங்குகின்றவனை இனியதுயில் கொள்ளுதலைக் காணாளாய்,

81. நெஞ்சு ஆற்றுப்படுத்த புலம்பொடு—அவன் தன்னெஞ்சந் தான் போகின்றவழியிற் செலுத்துதலால் தனக்குண்டான தனிமையாலே,

இது † "நிகழ்ந்தது நினைத்தற் கேதுவு மாகும்" என்பதாம்.

81. நிறைதபு புலம்பு—தனதுநிறைகெடுத்ததனிமை,

82 நீடு நினைந்து—இங்ஙனம் பிரிந்தாலன்றி இவ்வரசியல் நிகழாதென்று நினைத்து,

82. ஓடுவளை திருத்தியும்— கழலுகின்றவளையைக் கழலாமற் செறித்தும்,

83. மையல்கொண்டும்—மயக்கங்கொண்டும்,

83. ஒய்யென உயிர்த்தும்—விரைய நெட்டுயிர்ப்புக்கொண்டும்,

84. ஏவுறு மஞ்ஞையின் நடுங்கி இழை நெகிழ்ந்து — அம்பு தைத்த

---

* கலித்தொகை, இரண்டாவதுகுறிஞ்சிக்கலி, உ௩. "அலர்முலையாயிழை நல்லாய் கதுமெனப் - பேரம ருண்கணெனன் றோழி யுநீஇய - வாரஞ ரெவ்வ முயிர் வாங்கு - மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடீஇ."

† தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், ௪௩.

மயில்போல நடுக்கி; அணிகலங்கள் நெகிழ்ந்து கண் புலம்புமுத் துறைப்ப (உ௩.) எனக் கூட்டுக.

80, 82. துயருழந்து தேற்றியும்—அதனைக்கண்டு தானும் வருத்தமுற்று இவள் ஆற்றியிராளென்று துணிந்தும்,

85. பாவை விளக்கிற் பரூஉச்சுடர் அழல—பொற்பாவை ஏந்தி நின்ற தகளியிலே பரியவிளக்கு நின்றெரிய,
விளக்கு - ஆகுபெயர்.

(கு - பு) பாவை விளக்கு - பிரதிமைத்தீபம். தகளி - அகல்.

86. இடம் சிறந்து உயரிய எழுநிலை மாடத்து — தனக்குள்ள இட மெல்லாம் பொன்னாலும் மணியாலும் சிறப்புப்பெற்று உயர்ந்த எழுநிலையினை யுடைய மாடத்திடத்து,

87. முடங்கிறைச் சொரிதரும் மாத்திரள் அருவி—* மூட்டுவாய் களினின்றுஞ் சொரிதலைச்செய்யும் பெருமையையுடைய திரண்ட அருவிகளினுடைய,

(கு - பு) மூட்டுவாயென்றது கூடுவாய் மூலையை.

88 இன் பல் இமிழ் இசை ஓர்ப்பனள் கிடந்தோள்—இனிய பலவாகிய முழங்குகின்ற ஓசைக்கண்ணே தலைவன் தான்கூறிய பருவம் பொய்யாமல் வருவனென்னுங் கருத்தினளாகலின் அவன் வரவினையே கருதிக்கிடந்தோளுடைய,

89. அஞ்செவி நிறைய ஆலின—அகஞ்செவி நிரம்பும்படி ஆரவாரித்தன;

89, 91. [வென்றுபிறர், வேண்டுபுலங், கவர்ந்த ஈண்டுபெருந் தானையொடு, விசயம்:]

89. வென்று—வெட்டிவென்று,

89, 91. பிறர் வேண்டு புலம் கவர்ந்த விசயம்—பகையரசர் எக்காலமும் விரும்பும் நிலங்களைக் கைக்கொண்ட வெற்றியாலே,

90. ஈண்டு பெருந்தானையொடு—திரளுகின்ற பெரியபடையோடே, அரசன் வினைமுடிந்தகாலத்தே விரைந்துபோந்தானாகலின், அதுகேட்டுவருகின்ற படையென்பதுதோன்ற ஈண்டுபெருந்தானை யென்றார்.

91. வெல்கொடி உயரி—எக்காலமும் வென்றெடுக்கின்ற கொடியை எடுத்து,

91, 92. வலனேர்பு வயிரும் வளையும் ஆர்ப்ப—வெற்றிதோன்றிக் கொம்புஞ்சங்குமுழங்க,

(கு—பு) ஏர்பு—எழுந்து, வலன் நேர்பு எனப் பிரித்தலுமாம்.

92, 93. அயிர செறி இலைக் காயா அஞ்சனம் மலர—நுண்மணலிடத்த

* கூடுவாயென்றும் பிரதிபேதபாடுண்டு.

னவாகிய நெருங்கின இலையினையுடைய காயா அஞ்சனம்போல அவிழ,

(கு—பு) காயா—ஒருவகை மரம். அஞ்சனம்—மை.

94. முறி இணர்க் கொன்றை நன்பொன் கால—தளிரினையுங் கொத்தினையுமுடைய கொன்றை நன்றாகிய பொன்னைச்சொரிய,

95. கோடற்குவிமுகை அங்கை அவிழ—கோடலினது குவிந்தமுகைகள் அகங்கைபோல விரிய,

(கு—பு) கோடல்—வெண்காந்தள். முகை—அரும்பு.

96. தோடு ஆர் தோன்றி குருதி பூப்ப—திரட்சிநிறைந்த தோன்றி உதிரம்போலப் பூப்ப,

(கு - பு) தோன்றி - செங்காந்தள்.

97. கானம் நந்திய செந்நிலப் பெருவழி—காடுதழைத்த சிவந்தநிலத்திற் பெருவழியிலே,

98, 100. [வானம் வாய்த்த வாங்குகதிர் வரகிற், றிரிமருப் பிரலையொடு மடமா னுகள, வெதிர்செல் வெண்மழை பொழியுந் திங்களின்:]

98. வானம் வாய்த்த வரகு—மழைவேண்டப் பெய்தவரகு,

100, 98. எதிர் செல் வெண்மழை பொழியும திங்களில் வாங்கு கதிர் வரகின்—எதிர்காலத்துக்குப் பெய்யச்செல்கின்ற வெள்ளியமழை சிறுதுவலையைப்பொழியும் முன்பனிதொடங்குந் திங்களிலே வளைகின்ற கதிரையுடைய வரகிடத்தே,

99. திரி மருப்பு இரலையொடு மடமான் உகள—முறுக்குண்டகொம்பினையுடைய புல்வாய்க்கலையோடே மடப்பத்தையுடைய மான் துள்ள,

(கு - பு) மடப்பம் - அறியாமை, இளமை. மான் பெண்மான்.

மழையால் தண்ணீரும புல்லும் நிறையப்பெற்றுப் புணர்ந்துதிரியுமென்ற கருப்பொருளால், அவற்றைக்கண்ட அரசனுக்கு வேட்கைமிகுதி கூறிற்று.

மலரக் (௯௩) கால (௯௪) அவிழப் (௯௫) பூப்ப (௯௬) உகளக் (௯௯) கானநந்தியபெருவழி (௯௭) என்க.

இவை எல்லாம் வேட்கைவிளைதற்குக் காரணமாயின.

101. முதிர் காய் வள்ளியங்காடு பிறக்கு ஒழிய—தன்பருவம் வந்தால் முதிருங்காயையுடைய வள்ளியங்காடு பின்னாக,

(கு - பு) வள்ளி - வள்ளிக்கிழங்கு.

102. துனை பரி துரக்குஞ் செலவினர்—விரைந்துசெல்லும் பரியை அதனுனமையாமற் கடிதாகச்செலுத்துஞ் செலவினையுடையராய் வந்தவருடைய,

என்றது:—* "வினைவயிற் பிரிந்தோன் மீண்டுவரு காலை, யிடைச் சுர மருங்கிற்றவிர்த லிலலை, யுள்ளம் போல வுற்றுழி யுதவும், புள்ளியற் கலிமா வுடைமை யான." என்பது தோன்றக் கூறிற்று.

(கு - பு) 'வினைவயிற் பிரிந்தோன்' என்பதன்பொருள்: யாதானும் ஓர்செய்வினையிடத்துப் பிரிந்த தலைவன் அதனைமுடித்து மீண்டுவருங்காலத்து, எவ்வளவுகாததூரம் இடையிட்டதாக இருந்தாலும் அவ்விடையின் கணுண்டாகிய அருவழியிடத்துத் தங்கி வருதலில்லை; உள்ளம் நெடுந்தூரமான இடத்தை ஒருக்ஷணத்திற் செல்லுமாறுபோலத் தலைவனுள்ளம் சென்றுற்றவிடத்தே ஒருக்ஷணத்திற்சென்று உதவிசெய்யும் பறவைகளைப்போல நிலத்தைத்தீண்டாத செல்லுதலையுடைய செருக்குற்ற குதிரையையுடையானாதலால். எ - று. உடைமையால் தவிர்தலில்லையென்க.

103. வினைவிளங்கு நெடுந்தேர்பூண்டமாவே—தான் எடுத்துக்கொண்ட வினை எக்காலமும் விளங்கும் நெடிதாகிய தேரைப்பூண்ட குதிரை.

தலைவி தன்னிடத்தே வருகின்றவனை இன்றியிலைக்காணாளாய் (அ0) நெஞ்சாற்றுப்படுத்த புலம்பாலே (அக) ஒடுவளை திருத்தியும் (அஉ) மையல் கொண்டும் உயிர்த்தும் (அங) நடுங்கிநெகிழ்ந்து (அச) பூப்போலுண்கண் புலம்புமுத்துறைப்ப (உங) அதுகண்டுதுயருழந்து (அ0) தேற்றியும் (அஉ) வற்புறுத்திப் பிரிதல்வேண்டுமெனக் கருதிக் காட்டவுங் காட்டவுங்காணாதவள் (உஉ) பெருமுதுபெண்டிர (கஎ) எவ்வங்களையெனக்கூற (உக) அதுகேட்டு நீடுநினைந்து (அஉ) பெரும்பெயல்பொழிந்த சிறுபுன்மாலையில் (சு) இட்டசுடர் அழலாநிற்க (அரு) இமிழிசை ஓர்ப்பனள் கிடந்தோளுடைய (அஅ) அஞ்செவிநிறையப (அக), பரந்தபாடியிலே (உஅ) அரசிருந்து (எக) ஒருகைபள்ளியொற்றி ஒருகை (எரு) முடியொடுசேர்த்தி (எசு) வேழத்தை (சுக) யுள்ளியும் (எஉ) மாவைசசிந்தித்தும் (எச) ஒழிந்தோரை உள்ளியும் (எஉ) வினைந்து (எசு) நடுங்குதற்குக்காரணமான பாசறையிற் (எக) பெரும்படைநாப்பண் வேற்றூர் (சுக) அகம நேர்பு கண்டங்கோலி (சுச) யவனர் (சுரு) புலி தொடாபி. — நிலவில்லிலே (சுஉ) பொழுதளந்தறியுங் (ருரு) கன்னர்... (ருசு) கனைனல் இனைதெதன்றிசைக்கையினுலே (ருஅ) மங்கையா (...) திருமணிவிளக்கங்காட்டி (சுங) எழினிவாங்கிய பள்ளியிலே செனறு (...) இளையர் கவளங்கைப்பச் (ஙசு) சுரையர் (சுஅ) மாட்டப் (சுரு) பெருமூதாளர் ஏமஞ்சூழ (ருச) மிலேச்சருழையராக (சுசு) வெண்மணிவீழ்த்திய நடுநாளினும் (ரு0) மண்டமர் நசையாற் கண்படைபெறாதிருந்து (சுஎ) மற்றைநாட் படைகொணர்ந்விரலாலே (எஎ) வென்று (அக) கண்ணிவலந்திருத்திப் (எஅ) பிறர்வேண்டு புலங்கவர்ந்த (க0) விச

* தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், ருங.

123. செம்பொறிக்கு ஏற்ற - மூன்றுவரியாகிய உத்தமவிலக்கணத்திற்குப் பொருந்தின மார்பு (௧௨௧) என்க.

(கு - பு.) ஆடவர்களுக்கு மார்பில் மூன்றுவரியிருத்தல் உத்தம இலக்கணமென்பதை, "மார்பிற் செம்பொறி வாங்கிய மொய்ம்பு" (திருமு. ௱௪௫), "மார்பிடை வரியு மூன்றுள", "பொறிகுலாய்க் கிடந்த மார்பிற் புண்ணியன்" (சீவக. 1462, 1706) என்பவற்றாலுணர்க.

123 - 4. வீங்கு இறை தட கையின் வண்ணம் வரி வில் ஏந்தி அம்பு தெரிந்து - பூணிறுகின முன்கையையுடைய பெரியகையிலே வண்ணத்தையுடைய வரிந்த வில்லையெடுத்து அம்புகளைத்தெரிந்துபிடித்து,

125. நுண் வினை கச்சை தயக்கு அற கட்டி - நுண்ணிய தொழில்களையுடைய கச்சைக் கட்டினசேலை துளக்கமறக்கட்டி,

(கு - பு.) கச்சு - அரைக்கச்சு. துளக்கம் - அசைதல்.

126 - 7. [இயலணிப் பொலிந்த வீகை வான்கழ, றுயல்வருந் தோறுந் திருந்தடிக் கலாவ :] ஈகை இயல் அணி பொலிந்த வான்கழல் துயல்வரும் தோறும் திருந்து அடி கலாவ - பொன்னாற்செய்யப்பட்ட பூண்களிற்பொலிவுபெற்ற நன்றாகிய வீரக்கழல் பெயரும்பொழுதெல்லாம் பிறக்கிடாத அடியிலே ஏற்றிழிவுசெய்ய,

128 - 9. முனை பாழ் படுக்கும் துன்னரு துப்பின் பகை புறம் கண்ட பல் வேல் இளைஞரின் - பகைப்புலத்தைப் பாழாக்கும் கிட்டுதற்கரிய வலியையுடைய பகைகளை முதுகுகண்ட பலவேலினையுடைய வீரரைப்போலே,

130 - 131. உரவு சினம் செருக்கி துன்னுதொறும் வெகுளும் முளை வாள் எயிற்ற வள் உகிர் ஞமலி - பரக்கின்ற சினத்தாலே செருக்கித் தம்மேலொன்று நெருங்குந்தோறும் கோபிக்கும் மூங்கில்முளைபோலும் ஒளியையுடைத்தாகிய பல்லினையுடையவாகிய பெரிய உகிரையுடைய நாய்,

132. கிளையா கண்ண வளைகுபு நெரிதர - இமையாக்கண்களையுடையவாய் எம்மை வளைத்துக்கொண்டு மேலேமேலேவருகையினாலே,

(கு - பு.) கிளைத்தல் - உறவுகொள்ளுதல்.

133 - 4. [நடுங்குவன மெழுந்து நல்லடி தளர்ந்தியா, மிடும்பைகூர் மனத்தே மருண்டு புலம் படர :] யாம் நடுங்குவனம் எழுந்து நல் அடி தளர்ந்து இடும்பை கூர் மனத்தேம் மருண்டு புலம் படர - யாங்கள் அஞ்சி அவ்விருப்பைக்குலைந்து கடிதிற்செல்லுதலாற்றாது வருத்தமிக்க மனத்தையுடையேமாய் மயங்கி வேற்றுப் புலத்தேறச்செல்லாநிற்க,

(கு - பு.) 'அவ்விருப்பு' என்றது, அசோகின் கீழிருந்ததனை.

135 - 6. மாறு பொருது ஓட்டிய புகல்வின் வேறு புலத்து ஆ காண் விடையின் அணிபெற வந்து - தனக்குமாறாகியவிடைகளையெல்லாம் பொருதுகெடுத்த மனச்செருக்கினையுடைய தானறியாதநிலத்திற் புதிய ஆவைக் காணும் ஏறுபோலே அழகுபெற வந்து,

வேட்கைமிகுதிகூறுதற்கு வேறுபுலத்து ஆவென்றார்.

இத்துணையும் ஒக்கக்கூறினார்.

(கு - பு.) இங்கேயுள்ள, 'ஒக்கக்கூறினர்' என்பது, 'ஏத்தல்கூறினர் அல்லது 'ஒக்கங்கூறினர்' என்றிருக்கவேண்டுமென்று தோற்றுகிறது.

136 - 8. [எம், மலமர லாயிடை வெரூஉத லஞ்சி, மெல்லிய வினிய மேவரக் கிளந்து :] ஆயிடை எம் அலமரல் வெரூஉதல் அஞ்சி மெல்லிய இனிய மேவர கிளந்து - யாங்கள்போகின்றபொழுது எம்மனத்திற் சுழற்சியாலே வெருவுதற்குத் தானஞ்சி மெல்லியவாய் இனியவாயிருக்கின்ற சொற்களை எமக்குப்பொருந்துதல்வரச் சொல்லி,

இதனால் ஏதீடுகூறினான்.

138 - 9. எம் ஐம்பால் ஆய் கவின் ஏத்தி - எம் ஐவகைப்பட்ட மயிரினையுடைய பலருமாராய்ந்த அழகைப்புகழ்ந்து அசைகின்ற (௧௪௦) இளையீ (௧௪௧) ரென்க.

ஒள் தொடி - ஒள்ளிய தொடியினையும்,

140. அசை, வேறுகூறிற்று.

மெல் சாயல் - மெல்லிய மென்மையினையும்,

அம் வாங்கு உந்தி - அழகிய வளைந்த கொப்பூழினையும்,

141. மடம் மதர் மழை கண் இளையீர் - மடப்பத்தையுடைய மதர்த்த குளிர்ந்த கண்ணினையுமுடைய இளையீரே,

141 - 2. இறந்த கெடுதியும் உடையேன் என்றனன் - இவ்விடத்தே போந்த கெடுதிகள் பலவுமுடையேனென்றுகூறினான் ;

என்றது - அவை யானை, கலை, பன்றிமுதலியன கெடுத்தனனாக வினாயினான்.

(கு - பு.) யானை முதலியவற்றை வினவுதல், வேழம்வினாதல், கலைவினாதல், பன்றிவினாதலென வழங்கும்.

குஞ்சியின்கண்ணே (௧௧௨) மிலைச்சிச் (௧௧௩) செரீஇப் (௧௧௧) பொலியக் (௧௨௨) கலாவக் (௧௨௭) கட்டி (௧௨௫) ஏந்தித் தெரிந்து (௧௨௪) விடையின் அணிபெறவந்து (௧௩௩) தான்கொண்டுவந்த ஞமலி (௧௩௧) நெரிதருகையினாலே (௧௩௨) எழுந்து தளர்ந்து (௧௩௩) மருண்டு வேறுபுலம்படராநிற்க (௧௩௪) ஆயிடை (௧௩௭) எம் (௧௩௬) அலமரல் வெரூஉதலஞ்சிக் (௧௩௭) கிளந்து (௧௩௮) ஏத்தி (௧௩௯) இளையீர், இறந்த (௧௪௧) கெடுதியுமுடையே னென்றன (௧௪௨) னெனக் கூட்டுக.

142 - 3. [அதனெதிர், சொல்லே மாதலி னல்லாந்து கலங்கி:] அல்லாந்து அதன் எதிர் சொல்லேமாதலின் கலங்கி - அவன்கூற்றிற்கு யாங்கள் மகிழ்ந்து அதற்கு மறுமொழி கொடேமாகையினாலே நெஞ்சழிந்து,

144 - 5. [கெடுதியும் விடஇ ராயி னெம்மொடு, சொல்லலும் பழியோ மெல்லிய லீரென:] மெல்லியலீர் கெடுதியும் விடஈராயின் எம்மொடு சொல்லலும் பழியோ என - மெல்லிய இயல்பினையுடையீர், கெட்டனவும் காட்டித் தாரீராயின் எம்முடன் ஒருவார்த்தை சொல்லுதலும் நமக்குப் பழியாமோ வெனச் சொல்லி,

146 - 8. [நைவளம் பழுநிய பாலை வல்லோன், கைகவர் நரம்பி னிம் மென விமிரு, மாதர் வண்டொடு சுரும்புநயந் திறுத்த:] நைவளம் பழுநிய பாலை வல்லோன் கைகவர் நரம்பின் இம்மென இமிரும் மாதர் வண்டொடு நயந்து இறுத்த சுரும்பு - நட்டராகம் முற்றுப்பெற்ற பாலையாழை வாசிக்க வல்லவன் தன்கையாலே வாசித்தநரம்புபோலே இம்மென்னும் ஓசைபட வொலிக்கும் காதலையுடைய வண்டினத்தோடே தன்னிடத்து மணத்தை விரும்பித்தங்கின சுரும்பினங்களை,

(கு - பு.) நட்டராகம் - ஒருவகைப் பண்.

149. தாது அவிழ் அலரி தா சினை பிளந்து - தாதுவிரிந்த பூக்களை யுடைய தழைபரந்ததோர்கொம்பை முறித்து,

150. தாறு அடு களிற்றின் வீறு பெற ஓச்சி - தன்னைச் செலுத்து கின்ற பரிக்கோலைக்கைகடந்த மதக்களிறுபோலே வெற்றியுண்டாக ஓட்டி,

தனக்குக்காவலாகிய பெருமையினையும் உரனையும் கைகடந்து வேட்கை மீதூர்ந்து நிற்றலால் தாறடுகளிற்றை உவமங்கூறினார். மதக்களிற்றிற்கு அங்ஙனமோச்சிநிற்றல் இயல்பு.

(கு - பு.) பரிக்கோல் - குத்துக்கோல். தனக்கு - தலைவனுக்கு.

151. கல்லென் சுற்றம் கடு குரல் அவித்து - கல்லென்னும் ஓசைபடக் கத்தும் வேட்டைநாய்களுடைய கடிய குரல்களை அடித்துமாற்றி,

151 - 1. எம் சொல்லல் பாணி நின்றனனாக - யாங்கள் வார்த்தைசொல் லுதலையுடையதோர் காலத்தைப் பார்த்துநின்றானாக,

கெடுதியுமுடையேனென்றனன்; அதனெதிர் (கசஉ) யாங்கள் சொல் லேமாதலிற் கலங்கி (கசரு) மெல்லியலீர், சொல்லலும்பழியோவெனச் சொல்லி (கசகூ) ஓச்சி (கருO) அவித்துச் (கருக) சொல்லற்பாணி நின்றன னாக (கருஉ) வெனக் கூட்டுக.

இத்துணையும் வேட்கைகூறினாள்.

(கு - பு.) இஃது எளித்தலிலுமடங்கும்.

153 - 4. இருவி வேய்ந்த குறுங்கால் குரம்பை பிணை ஏர் நோக்கின் மனையோள் மடுப்ப - தினையரிந்த தாளாலே வேய்ந்த குறியகால்களையுடைய குடிலிலிருக்கும் மான்பிணையையொத்த பார்வையினையுடைய மனைவி எடுத் துக்கொடுப்ப,

155 - 6. தேம் பிழி தேறல் மாந்தி மகிழ்சிறந்து சேமம் மடிந்த பொழு தின் - தேனாற்சமைத்த கட்டெளிவையுண்டு மகிழ்ச்சிமிக்குக் காவற்றொழிலை மறந்தகாலத்தே,

156 - 8. [வாய்மடுத், திரும்புன நிழத்தலிற் சிறுமை நோனது, தாவுற ழுஞ்சிலை கொளீஇ நோய்மிக்கு :]

இரு புனம் வாய்மடுத்து நிழத்தலின் சிறுமை நோனாது நோய் மிக்கு - பெரியபுனத்தை வேழந்தின்று அழித்துவிடுகையினாலே தப்பி நின்றது விளை யும் சிறுமையைப்பொறாதே வருத்தமிக்கு,

159. [உரவுச் சினம்]

உரவு சினம் அரவு உறழ் அம் சிலை கொளீஇ - பரக்கின்றசினத்தை யுடைய பாம்பையொத்த அழகினையுடைய வில்லை நாணேற்றி,

உரவுச்சின அரவுற ழஞ்சிலை கொளீஇ (கருஅ) எனப் பின்னேகூட்டுக. பாம்பு வடிவிற்கும் கொலைத்தொழிலுக்கு முவமை.

159 - 160. முன்பால் உடல் சினம் செருக்கி கணைவிடுபு - மெய்வலியோடே கோபித்தலாற்பிறந்த சினத்தாலே மயங்கி அம்பையெய்து,

விடுபு, விகாரம்.

புடையூ - தட்டையைப் புடைத்து,

160 - 161. கானம் கல்லென மடி விடு வீளையர் வெடிபடுத்து எதிர - காடெல்லாம் கல்லென்னுமோசை பிறக்கும்படி வாயைமடித்து விடுகின்ற சீழ்க்கையராய் மிக்கவோசையையுண்டாக்கி அக்களிற்றைப் புனத்தினின்றும் ஓட்டுகையினாலே,

ஆர்த்தெனவும் பாடம்.

(கு - பு.) சீழ்க்கை - நாவினது நுனியை மடித்துச்செய்யும் ஒலி; "நாத்தலைமடிவிளி" (சீவக - 120.)

162 - 5. [கார்ப்பெய லுருமிற் பிளிறிச் சீர்த்தக, விரும்பிணர்த் தடக்கை யிருநிலஞ் சேர்த்திச், சினந்திகழ் கடாஅஞ் செருக்கி மரங்கொல்பு, மையல் வேழ மடங்கலி னெதிர்தர:]

சினம் திகழ் கடாம் செருக்கி மையல் வேழம் - சினம் விளங்குதற்குக் காரணமாகிய மதத்தாலே மனஞ்செருக்கி மயக்கத்தையுடைத்தாகிய யானை,

மரம் கொல்பு - மரங்களை முறித்து,

கார் பெயல் உருமின் பிளிறி - கார்காலத்துமழையின் உருமேறுபோல முழக்கத்தையுண்டாக்கி,

சீர்த்தக இரு பிணர் தட கை இரு நிலம் சேர்த்தி ஒய்யென (கசுசு) மடங்கலின் எதிர்தர - தன்தலைமைக்குத் தக்கதாகக் கரிய சருச்சரையையுடைத்தாகிய பெரிய கையைச் சுருட்டி நிலத்தேயெறிந்து கடுகக் கூற்றுவனைப்போலே எங்கள்மேலே வருகையிலே,

166 - 8, [உய்விட மறியே மாகி யொய்யெனத், திருந்துகோ லெல்வளை தெழிப்ப நாணுமறந்து, விதுப்புறு மனத்தேம் விரைந்தவற் பொருந்தி:]

ஒய்யென, முன்னேகூட்டிற்று.

உய்விடம் அறியேமாகி விதுப்புறு மனத்தேம் - உயிர்கொண்டு பிழைப்பதோரிடத்தை ஆண்டு வேறுணரோமாகி நடுக்கமுற்ற மனத்தையுடைய யாங்கள்,

நாணு மறந்து திருந்து கோல் எல் வளை தெழிப்ப விரைந்து அவன் பொருந்தி - உயிரினுஞ் சிறந்த நாணைக்காத்தலை மறந்து திருந்திய திரட்சியை யுடைத்தாகிய ஒளியினையுடைய வளையொலிப்ப விரைந்துசென்று அவனைச் சேர்ந்து,

(கு - பு.) "உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ், செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந்தன்று" (தொல். களவியல், உஉ.)

169. சூர் உறு மஞ்ஞையின் நடுங்க - தெய்வமேறின மயில்போலே நடுங்காநிற்க,

169 - 171. [வார்கோ, லுடுவுறு பகழி வாங்கிக் கடுவிசை, யண்ணல் யானை யணிமுகத் தழுத்தலின்:] வார் கோல் உடு உறு கடுவிசை பகழி வாங்கி அண்ணல் யானை அணி முகத்து அழுத்தலின் - நெடிய கோலையுடைய உடு ச்சேர்ந்த கடியவிசையினையுடைய அம்பை நிரம்பவலித்துத் தலைமையினை யுடைய யானையினது அழகியமுகத்தே எய்கையினாலே,

உடு - நாணைக்கொள்ளுமிடம்.

172 - 5. [புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந் திழிதரப், புள்ளி வரிநுதல் சிதைய நில்லா, தயர்ந்துபுறங் கொடுத்த பின்னர் நெடுவே, ளணங்குறு மகளி ராடுகளங் கடுப்ப:]

புள்ளி வரி நுதல் சிதைய புண் உமிழ் குருதி முகம் பாய்ந்து நெடு வேள் அணங்கு உறு மகளிர் ஆடுகளம் கடுப்ப இழிதர - புள்ளியினையும் புகரினையுமுடைய மத்தகம் அழகழியும்படி அம்புபட்டு உருவின புண்களால் உமிழப்படுங்குருதி முகத்தேபரந்து முருகனால் வருத்தமுற்ற மகளிர்க்கு மறி யறுத்தாடுங் களத்திற் குருதி குதிக்குமாறுபோலக் குதிக்கையினாலே,

(கு - பு.) மறி - ஆடு

அயர்ந்து நில்லாது புறங்கொடுத்த பின்னர் - தன்னைமறந்து ஆண்டு நிற்றலாற்றாது முதுகிட்டுபோன பின்பு,

இதனாலும் ஏதீடுகூறினாள்.

(கு - பு.) முன்பு 136 - 8 - ம் அடிகளின் உரையின்பின், 'ஏதீடுகூறி னாள்' என்பது எழுதப்பட்டிருத்தல் காண்க.

'மகளிராடுங்களம் கடப்பமாலைவளைத்தாற்போல மிகவும் கடப்பமாலை வளைத்த' என்பாருமுளர்.

(கு - பு.) கடப்பமாலை, பின்னடிகளில் வந்துள்ளது.

176 - 7. திண் நிலை கடம்பின் திரள் அரை வளைஇய துணை அறை மாலையின் கை பிணி விடேம் - திண்ணிய நிலையினையுடைய கடம்பினது திரண்டமுதலைநெருங்கச்சூழ்ந்த மகளிரொழுங்கிற்குஒப்புச்சாற்றுதலையுடைய மாலைபோலே கைகோத்தலை விடேமாய்,

(கு - பு.) "கடம்பு சூடிய கன்னி மாலைபோற், றொடர்ந்து கைவிடாத் தோழிமார்" (சீவக - 990.)

178. நுரை உடை கலுழி பாய்தலின் - யாற்றின் நுரையையுடைய பெருக்கிலே குதிக்கையினாலே,

178 - 9. உரவு திரை அடு கரை வாழையின் நடுங்க - அதனிடத்துப் பரக்கின்ற திரைமோதி இடிகரையினின்ற வாழைபோலே கால்தளர்ந்து பின்னர் ஒழுகினேமாக, அதுகண்டு,

179-181. [பெருந்தகை, யஞ்சி லோதி யசையல் யாவது, மஞ்ச லோம்புநி னணிநல னுகர்கெனா:] பெருந்தகை அம் சில் ஓதி அசையல் நின் அணி நலன் நுகர்கு யாவதும் அஞ்சல் ஓம்பு என - பெரிய தகுதிப்பாடுடைய

அழகிய சிலவான மயிரினையுடையாய், இங்ஙனம் காறளர்க்தொழுகாதேயென் றெடுத்து யான் நின் அழகியநலத்தை நுகர்வேன்; நின்னைநீங்குவேனென்று சிறிதும் அஞ்சுதலைப்பரிகரியெனச் சொல்லி,

182. மாசு அறு சுடர் நுதல் நீவி - குற்றமற்ற ஒளியினையுடைய நுதலைத்துடைத்து,

182 - 3. நீடு நினைந்து என் முகம் நோக்கி நக்கனன் - நெடுநாள் இக்களவொழுக்கம் நிகழவேண்டுமென்று நினைந்து என் முகத்தைப்பார்த்துச் சிரித்தான்;

(கு - பு.) "உரவுச்சினஞ் செருக்கி.........இறந்த கெடுதியு முடையேயென்றனன்" (130 - 42.) என்பவற்றை நாய்காத்தவாற்றிற்கும், "கணைவிடுபுடையு.........என்முகநோக்கிநக்கனன்" (160 - 183) என்பவற்றைக் களிறுகாத்தவாற்றிற்கும் புனலுள் எடுத்தவாற்றிற்கும் மேற்கோள்களாகக் காட்டினர் நச்சினார்க்கினியர்; (தொல் - பொருளியல். கஅ - சூ. உரை.)

183 - 5. [அந்நிலை, நாணு முட்கு நண்ணுவழி யடைதர, வொய்யெனப் பிரியவும் விடாஅன்:]

அந்நிலை, பின்னே கூட்டிற்று.

நண்ணுவழி நாணும் உட்கும் அடைதர ஒய்யென பிரியவும் விடான் - அங்ஙனம் அவன்நணுகாநின்றவிடத்துத் தனக்கு இயல்பாகிய நாணமும் அச்சமும் அவ்விடத்தேவந்து தோன்றுகையினாலே விரையத் தன்னிடத்து நின்றும் இவள் நீங்கவும் விடானாய்,

185 - 6. [கவைஇ, யாக மடைய முயங்கலின்:] அந்நிலை கவைஇ ஆகம் அடைய முயங்கலின் - அங்ஙனம் நின்றநிலையிலே கையாலேயணைத்து இவள் மார்பு தன்மார்பிலே யொடுங்கும்படி தழுவுகையினாலே,

இதனால் எதிர்ம் வேட்கையுரைத்தலும் கூறினாள்.

186 - 7. [அவ்வழிப், பழுமிள குக்க பாறை நெடுஞ்சுனை:]

பழு மிளகு உக்க பாறை நெடு சுனை - பழுத்த மிளகுசிந்திக்கிடக்கின்ற கற்பாறையிடத்து நீண்டசுனையிலே,

188. முழு முதல் கொக்கின் தீங்கனி உதிர்ந்தென - பெரிய அடியினையுடைய மாவினுடைய இனியபழங்கள் உதிர்ந்தனவாக, (அப்பழத்தாலும்).

189-190. [புள்ளெறி பிரசமொ டீண்டிப் பலவின், னெகிழ்ந்துகு நறும்பழம் விளைந்ததேறல் :]

பலவின் நெகிழ்ந்து உகு நறு பழம் - பலவினுடைய விரிந்துதேன்பரக்கின்ற நறியபழத்தாலும்,

விளைந்த தேறல் - உண்டான கட்டெளிவு,

புள் எறி பிரசமொடு ஈண்டி - நிரம்புதலால் தன்னை நுகர்கின்ற ஈயினைத் தள்ளியுகுத்த தேனாலே வந்து திரளுகையினாலே,

191. நீர் செத்து அயின்ற தோகை - தனக்கு எளிய நீராகக்கருதி அத்தேறலையுண்ட மயில்,

191-2. [வியலூர்ச், சாறுகொ ளாங்கண் விழவுக்கள நந்தி:] சாறு கொள் ஆங்கண் வியல் ஊர் விழவு களம் நந்தி - விழாக்கொள்ளுதற்குரிய அவ்விடங்களையுடைய அகற்சியையுடைய ஊர்களில் விழாக்கொள்ளுதலையுடைய களத்தே மிக்கு,

ஆங்கணென்றது - கோயில்களை.

193. அரி கூட்டு இன்னியம் கறங்க ஆடும் மகள் - அரித்தெழுகின்ற ஓசையைக் கூட்டுதலையுடைய இனிய வாச்சியங்களொலிப்ப ஆடுகின்றமகள்,

194. கயிறு ஊர் பாணியின் தளரும் சாரல் - கழாய்க்கயிற்றிலே ஏறியாடுகின்ற தாளத்தினால் தான் ஆற்றாது தளருமாறுபோலத் தளருஞ்சாரல்,

(கு - பு.) கழாய் - ஆடுதற்கு நாட்டின மூங்கில்.

தேறலயின்ற தோகை கூத்தாட ஆற்றாது தளருஞ் சாரலையுடைய குன்றென்க.

இதற்கு உள்ளுறையுவமங் கொள்ளுமாறு: - மிளகுக்கபாறை அந்நிலத்து மாக்களுறைகின்ற ஊராகவும், நெடுஞ்சுனை தலைவன் குடியாகவும், மாம்பழத்தாலும் பலாப்பழத்தாலும் விளைந்ததேறல் தந்தையாலும் தாயாலுமுளனாகிய தலைவனாகவும், பிரசம் இவரைக்கூட்டின பால்வரை தெய்வமாகவும், அதனையுண்டமயில் உயர்ந்த தலைவனைத் தன்குலத்திற்கு ஒத்தானாகக்கருதி நுகர்ந்த தலைவியாகவும், அத்தேறலிற்பிறந்த களிப்புக் களவொழுக்கத்தாற்பிறந்த பேரின்பமாகவும், மயில் ஆடவாற்றாத்தன்மை வருந்திக்குறைந்த தன்மையாகவும் உள்ளுறையுவமங்கொள்க.

(கு - பு.) உள்ளுறையுவமம் - ஒரு பொருளை உள்ளுறுத்து அதனைவெளிப்படாமற்கூறுமுவமம்; அது, கருப்பொருள்களுள் தெய்வமொழிந்தவற்றை இடமாகக்கொண்டு புலப்படுமென்பர்; இதனை, தொல்காப்பியம், அகத்திணையியல், சுகூ - ம் சூத்திர முதலியவற்றாலும் அவற்றின் உரையாலும் விளங்க வுணர்க.

195-7. [வரையர மகளிரிற் சாஅய் விழைதக, விண்பொருஞ் சென்னிக் கிளைஇய காந்தட், டண்கம ழலரி தாஅய்:] விண் பொரு சென்னி கிளைஇய காந்தள் தண் கமழ் அலரி வரை அரமகளிரில் சாஅய் விழைதக தாஅய் - விண்ணைத்தீண்டுகின்ற சிகரங்களிலே கிளைத்த செங்காந்தளினுடைய குளிர்ந்த மணக்கின்ற பூக்கள் கீழே வரையரமகளிர் பரந்து விளையாடுதலின் தங்நலம் சிறிது கெட்டு விரும்புதல்தரும்படி கீழேவந்து பரந்து,

197 - 9. நல் பல வம்பு விரி களத்தில் கவின் பெற பொலிந்த குன்று கெழு நாடன் - நன்றாகிய பலவாகிய கச்சுப்பரந்த களம்போலே அழகுபெறப் பொலிவுபெற்ற மலை பொருந்தின நாடன்,

உயர்ந்தநிலத்தேநின்று மணக்கின்ற காந்தள் வரையரமகளிரால் கீழ்நிலத்தே பரந்து அவ்விடத்தைக் கச்சுவிரித்தாற்போல அழகுபெறுத்துமென்றதனால், நம்மிலுயர்ச்சியையுடைய தலைவன் நமது நல்வினையால் தனதுபெருமைகள் தாமுமொழிந்து இவ்விடத்தே வந்துகூடி நமக்கும் உயர்ச்சியுளதாக்கி நம்மை அழகுபெறுத்துகின்றானென்று உள்ளுறையுவமமெய்திற்று.

199. எம் விழை தரு பெருவிறல் - எம்மை எப்பொழுதும் விரும்புதலைத்தருகின்ற பெரியவெற்றியையுடையவன்,

200. அவ்வழி (கஅசு) உள்ளத் தன்மை யுள்ளினன் கொண்டு - தான் முயங்குகையினாலே அப்பொழுது இவளுள்ளத்து நிகழுந்தன்மை மேல்வரைந்துகொண்டு இல்லறநிகழ்த்துதலாயிருக்குமென்று நினைந்தனனாய் அதனையுட்கொண்டு,

அவ்வழி இங்கே கூட்டிற்று.

(கு - பு.) 'அவ்வழி' 186 - ம் அடியிலுள்ளது.

201 - 3. [சாறயர்ந் தன்ன மிடாஅச் சொன்றி, வருநர்க்கு வரையா வளநகர் பொற்ப, மலரத் திறந்த வாயில் பலருண :]

பலர் உண மலர திறந்த வாயில் வளநகர் - பலரும்வந்து உண்ணும்படி அகலக் கதவு திறந்துகிடக்கின்ற வாசலையுடைய வளநகர்,

மிடா சொன்றி வருநர்க்கு வரையா சாறு அயர்ந்து அன்ன வளநகர் பொற்ப - மிடாச்சோற்றை வருவார்க்கெல்லாம் வரையாமலிடுகின்ற விழாக் கொண்டாடினாற் போன்ற செல்வத்தையுடைய அகம் பொலிவுபெறும்படி,

முன்புள்ள இயல்புகூறிற்று,

204. பை நிணம் ஒழுகிய நெய் மலி அடிசில் - பசுத்த நிணமொழுகின நெய்மிக்க அடிசிலை நீஇடுகையினாலே,

205 - 6. வசை இல் வான் திணை புரையோர் கடும்பொடு விருந்து உண்டு எஞ்சிய மிச்சில் - குற்றமில்லாத உயர்ந்தகுலத்திற்பிறந்த உயர்ந்தோர் தமதுசுற்றத்தோடே விருந்துண்டு மிக்க அடிசிலை,

206. பெருந்தகை - பெரிய தகைமைப்பாடுடையவன்,

207 - 8. நின்னொடு உண்டலும் புரைவது என்று ஆங்கு அறம் புணையாக தேற்றி - நீயிடுகையினாலே யானுண்டலும் உயர்ந்ததென்றுசொல்லி அப்பொழுது இல்லறம் தங்களைக்கரையேற்றுவதாகத் தெளிவித்து,

ஓடு, ஆலாக்குக.

208 - 210. பிறங்கு மலை மீமிசை கடவுள் வாழ்த்தி கைதொழுது ஏமுறு வஞ்சினம் வாய்மையின் தேற்றி - பெரியமலையில்மிகஉயர்ந்தவிடத்தேயுறைகின்ற முருகனையும் வாழ்த்தி வணங்கி அவன்முன்னே இவள் மயக்கமுறுதற்குக் காரணமான வஞ்சினத்தை உண்மையால்தெளிவித்து,

வஞ்சினம் - பிரியின் அறனல்லதுசெய்தேனாவேனென்னுமொழி. முன் தேற்றுதலின், ஏமுறுவஞ்சினமென்றார்.

(கு - பு.) முன்தேற்று - முதலில் தேற்றுவது.

211. அம் தீம்தெண்ணீர் குடித்தலின் நெஞ்சு அமர்ந்து - அம்மலையில் அழகிய இனிய அருவிநீரை அவன்குடிக்கையினாலே இவள்நெஞ்சு சூளுறவிலே பொருந்தி,

நீர்குடித்தலும் ஒருசூளுறவென்று கொள்க. நெஞ்சமைந்தென்றும்பாடம்

212 - 4. [அருவிட ரமைந்த களிறுதரு புணர்ச்சி, வானூரி யுறையுள் வயங்கியோ ரவாவும், பூமலி சோலை யப்பகல் கழிப்பி :] வான் உரி உறையுள்

வயங்கியோர் அவாவும் அரு விடர் அமைந்த பூமலி சோலை களிறு தரு புணர்ச்சி அப்பகல் கழிப்பி - ஆகாயத்திடத்தே தமக்குரிய இருப்பினையுடைய விளங்கிய தேவர்விரும்பும்அரிய முழைஞ்சுகளினிடத்தேபொருந்தின பூமிக்க சோலையிலே களிறுகூட்டின கூட்டத்தை அன்றைப்பகற்பொழுதெல்லாம் போக்கி,

உரிய உறையுள், விகாரம்.

உண்மைசெப்புங்கிளவி கூறினாள்.

215 - 6. [எல்லை செல்ல வேழூர் பிறைஞ்சிப், பல்கதிர் மண்டிலங் கல் சேர்பு மறைய :] பல் கதிர் மண்டிலம் ஏழ் ஊர்பு எல்லை செல்ல இறைஞ்சி கல் சேர்பு மறைய - பலகிரணங்களையுடைய ஞாயிறு ஏழுகுதிரைபூண்ட தேரையேறிப் பகற்பொழுது போம்படி தாழ்ந்து அத்தகிரியைச்சேர்ந்து மறைகையினாலே,

217. மான் கணம் மாமுதல் தெவிட்ட - மான்றிரள் மரத்தடிகளிலே திரள,

அசையிடுதலுமாம்.

217 - 8. ஆன் கணம் கன்று பயிர் குரல மன்று நிறை புகுதர - பசுவினுடையதிரள் கன்றுகளையழைக்குங் குரலையுடையவாய் மன்றுகள்நிறையப் புகுதலைச்செய்ய,

219 - 220. ஏங்கு வயிர் இசைய கொடு வாய் அன்றில் ஓங்கு இரு பெண்ணை அகமடல் அகவ - ஊதுகின்ற கொம்புபோன்ற ஓசையையுடைய வளைந்த வாயையுடைய அன்றில் உயரும் பெரியபனையில் உள்மடலிலேயிருந்து பேட்டையழைக்க,

221. பாம்பு மணி உமிழ - பாம்பு தான்மேய்தல் காரணமாகத் தன்னிடத்துமாணிக்கத்தை ஈன,

221 - 2. [பல்வயிற் கோவலர், ஆம்பலந் தீங்குழற் றெள்விளி பயிற்ற:] கோவலர் பல்வயின் ஆம்பல் அம் தீங்குழல் தெள் விளி பயிற்ற - இடையர் பலவிடங்களினின்று ஆம்பலென்னும் பண்ணினையுடைய அழகிய இனிய குழலிடத்துத் தெளிந்த ஓசையைப் பலகாலுமெழுப்ப,

223. ஆம்பல் ஆய் இதழ் கூம்பு விட - ஆம்பலினது அழகியஇதழ்கள் தளையவிழ,

223 - 5. [வளமனைப், பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி, யந்தி யந்தண ரயர :]

அந்தணர் அந்தி அயர - பார்ப்பார் அந்திக்காலத்துச் செய்யுந்தொழில்களை நிகழ்த்த,

வளம் மனை பூந்தொடி மகளிர் சுடர் தலைக்கொளுவி அந்தி அயர - செல்வத்தையுடைய மனைகளிற் பொலிவுபெற்ற தொடியினையுடைய மகளிர் விளக்கை அவ்விடத்தேகொளுத்தி அந்திக்காலத்திற் றொழிலைநிகழ்த்த,

225 - 6. கானவர் விண் தோய் பணவை மிசை ஞெகிழி பொத்த - அக்காட்டில்வாழ்வார் விண்ணைத்தீண்டுகின்ற பரணின்மேலே தீக்கடைகோலாலே நெருப்பைப் பிறப்பித்து எரிப்ப,

227. வானம் மா மலை வாய் சூழ்பு கறுப்ப - மேகம் பெரிய மலையிடத்தைச்சூழ்ந்து கறுப்ப,

227 - 8. கானம் கல்லென்று இரட்ட - காட்டிலுள்ள விலங்குகளெல்லாம் கல்லென்னும் ஓசையை யுடையவாய் ஒன்றற்கொன்று மாறிக்கூப்பிட,

கானம் - ஆகுபெயர்.

228. புள்ளினம் ஒலிப்ப - பறவைகள் குடம்பைக்கண்ணேநின்று ஆரவாரிக்கையினாலே,

229 - 230. * [சினைஇய வேந்தன் செல்சமங் கடுப்பத், துனைஇய மாலை துன்னுதல் காணூஉ :]

(கு - பு.) சினைஇய - கோபித்த. சமம் - போர். துனைஇய - விரைந்த.

தெவிட்டப் (உகஎ) புகுதர (உகஅ) அகவ (உஉ0) உமிழப் (உஉக) பயிற்றக் (உஉஉ) கூம்புவிட (உஉங) அயரப் (உஉ௫) பொத்தக் (உஉ௬) கறுப்ப (உஉஎ) இரட்ட ஒலிப்பச் (உஉஅ) செல்சமங்கடுப்ப (உஉ௯) மாலை துன்னுதல்கண்டு (உங0) என முடிக்க.

இவ்வெச்சங்கள் எதிர்காலமுணர்த்தின. † "நிலனொருங்கு மயங்குதலின்றென மொழிப." எனவே காலமிரண்டு மயங்குமென்றலின், குறிஞ்சியில் மாலைக்காலங்கூறினார்.

231 - 4. [நேரிறை முன்கை பற்றி நுமர்தர, நாடறி நன்மண மயர்கஞ் சின்னாட், கலங்கலோம்புமி னிலங்கிழை யீரென, வீர நன்மொழி தீரக்கூறி:]

இலங்கிழையீர் - விளங்குகின்ற பூணினையுடையீர்,

நுமர் நேர் இறை முன்கை பற்றி தர நாடு அறி நல் மணம் அயர்கம் - நும்முடையசுற்றத்தார் நுமது நேரிய இறையினையுடைய முன்கையைப்பிடித்து எமக்குத்தர நாட்டிலுள்ளாரெல்லாமறியும் நன்றாகிய கலியாணத்தினைப் பின்பு நிகழ்த்துவேம்;

சில் நாள் கலங்கல் ஓம்புமின் என ஈரம் நன்மொழி தீரக் கூறி - யாம் இக்களவொழுக்கத்தாற்பெறும் பேரின்பம்பெறுதற்குச் சிறிதுநாள் இங்ஙனம் ஒழுகாநின்றேமென்று நெஞ்சுகலங்குதலைப் பாதுகாப்பீராகவென்று அருளுடைத்தாகிய நல்லவார்த்தையை இவள்நெஞ்சில் வருத்தந் தீரும்படி சொல்லி,

235. துணை புணர் ஏற்றின் எம்மொடு வந்து - ஆவைப்புணர்ந்த ஏறுபோலே விடாமல் எம்முடனேகூடவந்து,

236 - 7. துஞ்சா முழவின் மூதூர் வாயில் உண் துறை நிறுத்து பெயர்ந்தனன் - ஓசையை ஒருகாலுமறாத முழவினையுடைய பழைய நம்மூர் வாசலில் பலரும் நீருண்ணுந் துறையிலே எம்மைநிறுத்தி மீண்டுபோனான்;

---

* இதற்குப் பழையஉரை கிடைத்திலது.

† தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், கஉ.

இதனால் வேட்கையுரைத்தல் கூறினாள்.

237-9. அதற்கொண்டு அன்றை அன்ன விருப்போடு என்றும் இரவரல் மாலையனே - அப்புணர்ச்சி தொடங்கி அம்முதனாள் போன்ற விருப்பத்தோடே எந்நாளும் இரவுக்குறியிலே வருதலைத் தனக்கியல்பாகவுடையன்;

ஏகாரம் - ஈற்றசை.

239-241. வருதோறும் காவலர் கடுகினும் கதன் நாய் குரைப்பினும் நீ துயிலெழினும் நிலவு வெளிப்படினும் - அங்ஙனம் வரும்போதெல்லாம் ஊர்காவலர் கடுகிக்காத்தாராயினும் கோபத்தையுடைய நாய் குரைத்ததாயினும் நீ துயிலுணர்ந்தாயாயினும் நிலவு வெளியாக எறித்ததாயினும்,

242-3. வேய் புரை மெல் தோள் இன்துயில் பெறாஅன் - மூங்கிலையொத்த மெல்லிய தோளிற்பெறும் இனிய துயிலைப் பெறாதுபோவன்;

பெயரினும் முனியல் உறாஅன் - யாங்கள் குறியல்லதனைக் குறியாகக் கருதிச் செல்லாநின்று மீண்டு மனையிடத்தே புகுதினும் அதற்கு வெறுத்தலைச்செய்யான்;

244. இளமையின் இகந்தன்றும் இலனே - அவன்றான் இளமைப்பருவத்தைக் கடந்ததுமிலன்;

244 - 5. [வளமையிற், றன்னிலை தீர்ந்தன்று மிலனே:] வளமையில் என்றும் (உசஉ) தன்நிலை தீர்ந்தன்றும் இலனே - நற்குணங்களைத் திரித்தற்குரிய செல்வச்செருக்கான் எந்நாளும் தன்குலத்திற்குரிய நற்குணங்களின் நீங்கியதுமிலன்;

ஏகாரங்கள் - ஈற்றசை.

"நேரிறை முன்கை ........... தன்னிலை திரிந்தன்று ன்லனே" (231 - 44) என்பனவற்றை உண்மைசெப்பலென்னுங்கிளவிக்கு உதாரணமாகக்காட்டினார், நச்சினார்க்கினியர்; (தொல். பொருளியல், 13).

245 - 6. கொன் ஊர் மாய வரவின் இயல்பு நினைஇ தேற்றி - அலர் முதலியவற்றான் அச்சத்தையுடைய இவ்வூரின்கண்ணே தனக்குப் பொய்யாயிருக்கின்ற இரவுக்குறியிலே கூடுதற்கு வருகின்ற வரவினது தன்மையை இஃதொழுக்கமன்றென்று நினைத்து அவன்வரைந்துகொள்ள இல்லறநிகழ்த்துதலே நல்லொழுக்கமென்று துணிகையினாலே,

(கு - பு.) அலர் - பலரறிந்து கூறும் பழிமொழி.

247 - 8. [நீரொறி மலரிற் சாஅ யிதழ்சோரா, வீரிய கலுழுமிவள் பெருமதர் மழைக்கண் :] இவள் பெரு மதர் மழை கண் நீர் எறி மலரிற் சாஅய் இதழ் சோரா ஈரிய கலுழும - இவளுடைய பெரிய மதர்த்த குளிர்ந்த கண்கள் பெருந்துளியெறிந்துபெய்தமலர்போலே அழகுகெட்டு இமைசோர்ந்து ஈரத்தினையுடையவாய்க் கலங்காநிற்கும்.

249 - 261. [ஆகத் தரிப்பனி யுறைப்ப நாளும், வலைப்படு மஞ்ஞையி னலஞ்செலச் சாஅய், நினைத்தொறுங் கலுழுமா லிவளே கங்கு, லளைச்செறி யுழுவையு மாளியு முளியமும், புழற்கோட் டாமான் புகல்வியுங் களிறும், வலியிற் றப்பும் வன்கண் வெஞ்சினத், துருமுஞ் சூரு மிரைதே ரரவமு, மொ

டுங்கிருங் குட்டத் தருஞ்சுழி வழங்குங், கொடுந்தாண் முதலையு மிடங்கருங் காரமு, நூழிலு மிழுக்கு மூழடி முட்டமும், பழுவும் பாந்தளு முளப்படப் பிறவும், வழுவின் வழாஅ விழுமமவர், குழுமலை விடரக முடையவா லெனவே:]

இவள் அவர் குழுமலை விழுமம் உடையவால் என நினைத்தொறும் வலைப் படு மஞ்ஞையின் நலம் செலச் சாஅய் அரிப்பனி நாளும் ஆகத்து உறைப்பக் கலுழும் - இவள் அங்ஙனந்தேற்றிக் கண்ணழுகின்றதற்கு மேலே அவர்வரு கின்ற மலை இடும்பையுடையவாயிருக்குமென்று நினைக்குந்தோறும் வலையி லகப்பட்ட மயில்போலே தன்னலம் போம்படி நுணுகிக் கண்ணில் அரித்து வீழ்கின்ற நீர் நாள்தோறும் மார்பிலே துளிப்பக் கலங்காநிற்கும்;

(கு - பு.) நுணுகி - மெலிந்து.

கங்குல் - இராக்காலத்து,

அளை செறி உழுவையும் - முழைஞ்சிடத்திலே செறியும் புலிகளும்,

(கு - பு.) முழைஞ்சு - குகை.

ஆளியும் - யாளிகளும்,

உளியமும் - கரடியும்,

புழல் கோடு ஆமான் புகல்வியும் - உள்ளூப்பொய்யான கொம்பையு டைய ஆமானிலேறும்,

(கு - பு.) ஆமான் - காட்டுப்பசு.

களிறும் - யானையும்,

வலியின் தப்பும் வன்கண் வெஞ்சினத்து உருமும் - வலியினாற்கெடுக்கும் தறுகண்மையை யுடைத்தாகிய வெவ்விய சினத்தையுடைய உருமேறும்,

சூரும் - கொடுந்தெய்வமும்,

இரை தேர் அரவமும் - இரைதேடித்திரியும் பாம்பும்,

ஒடுங்கு இருங்குட்டத்து அரு சுழி வழங்கும் கொடு தாள் முதலையும் இடங்கரும் காரமும் - புடைபட்ட கரிய ஆழத்திடத்துப் போதற்கரிய சுழி யிடத்தேதிரியும் வளைந்ததாளையுடைய முதலையும் இடங்கரும் காரமும்,

இவை மூன்றும் சாதி விசேடம்.

நூழிலும் - வழிபறிப்பார் கொன்றுகுவிக்குமிடங்களும்,

நூழில் - கொடிப்பிணக்கென்பாருமுளர்.

இழுக்கும் - வழுக்குநிலமும்,

ஊழ் அடி முட்டமும் - முறையடிப்பாடாய்ப் பின்பு வழிமுட்டாயிருக் கும் இடங்களும்,

பழுவும் - பிசாசும்,

பாந்தளும் - பெரும்பாம்பும்,

உளப்படப் பிறவும் வழுவின் வழாஅ விழுமம் - உழுவைமுதலாக எண் ணப்பட்ட இவையெல்லாமுட்பட வேறும் தப்புஞ்செயலிற் றப்பாத இடும் பைகளை, [illegible]

விழுமஞ்செய்வனவற்றை விழுமமென்றார்; இஃது ஆகுபெயர்.

அவர் குழு மலை விடரகம் உடையவால் என - தலைவருடைய கிளைமையுடைத்தாகிய மலையின்முழைஞ்சிடம் உடையவாயிருக்குமென்று.

அன்னாய் வாழி; அன்னாய், யான் கூறுகின்றதனை விரும்புவாயாக (க); நீயும் எய்யாமையலையாகி வருந்துதி (அ); இவளும் (உசு) ஏனையுலகத்தும் இயைவதாலெனக்கூறி (உச) மெலியும் (உரு); யானும் (உகூ) சான்றோர் போல (உஅ) வருந்தாநின்றேன் (உகூ); எண்ணாது (௩க) எமியேந்துணிந்த அருவினை (௩உ) நிகழ்ந்தவண்ணம் நீயுணரச் (௩௩) செப்புதலையமைந்தேன்; அதுகேட்டுச் சினவாதீமோ (௩ச); தினையிற் படுபுள்ளோப்பி (௩அ) வருதியரென நீ போகவிடுகையினாலே (௩கூ) யாங்களும்போய் இதணமேறிக் (சக) கிளிகடி மரபினவற்றை வாங்கி ஓட்டிக் (சச) கொண்மூப் (ரு0) பொழிந்தென (ரு௩) நெடுங்கோட்டிழிதருந் தெண்ணீ (ருச) ரருவி (ருரு) ஆடிப் (ருசு) பாய்சுனைகுடைவுழிப் (ருஎ) பாயம்பாடிக் (ருஅ) கூந்தலைப் பிழிவனந்துவரிச் (சு0) சிவந்த கண்ணேமாய் (சுக) மலிவனமறுகிப் (கூஎ) பரேரம் புழகுடனே (கூசு) காந்தள் (சுஉ) முதலியவற்றையும் பிறவற்றையும் (கூரு) பாறையிலேகுவித்துத் (கூஅ) தெள்விளி பயிற்றி (க00) ஓப்பியும் (க0க) தழைதைஇ உடுத்துக் (க0உ) கோதையை (க0௩) முச்சியிலேகட்டிச் (க0ச) செயலைத் (க0ரு) தண்ணிழலிலே இருந்தனமாக (க0சு), குன்றுகெழு நாடனாகிய எம்பெருவிறல் (ககக) அணிபெறவந்து (க௩சு) இளையீர், இறந்த (கசக) கெடுதியுமுடையேனென்றனன்; அதனெதிர் (கசஉ) சொல்லேமாதலிற் கலங்கி (கச௩) மெல்லியலீர், சொல்லலும் பழியோவெனச்சொல்லி (கசரு) ஓச்சி (கரு0) அவித்துச் (கருக) சொல்லற்பாணிநின்றனனாக (கருஉ), வேழம் எதிர்தருகையினாலே (கசுரு) விரைந்தவற்பொருந்தி (கசுஅ) நடுங்கா, நிற்கப் (கசுகூ) பகழியைவாங்கி (கஎ0) அணிமுகத் தழுத்தலின் (கஎக) அதுபுறங்கொடுத்தபின் (கஎச) கலுழிபாய்தலின் (கஎஅ) வாழையினடுங்கினமாக, அதுகண்டு பெருந்தகை (கஎகூ) எடுத்து அஞ்சலோம்பெனச்சொல்லி (கஅக) நீவி நினைந்து (கஅஉ) என் முகநோக்கி நக்கனன் (கஅ௩); அவ்வழி நாணுமுட்கும் அடைதருகையினாலே (கஅச) இவள்நீங்கவும் விடானாய் (கஅரு) அந்நிலை (கஅ௩) முயங்கலின், அவ்வழி (கஅசு) யிவளுள்ளத்தன்மை யுள்ளினனாய் அதனையுட்கொண்டு (உ00) விருந்துண்டெஞ்சிய மிச்சிலை (உ0சு) நீயிடுகையினாலே யானுண்டலும் புரைவதென்று சொல்லித் (உ0எ) தேற்றிப் (உ0அ) பெருந்தகை (உ0சு) கடவுளும் வாழ்த்திக் கைதொழுது (உ0கூ) வஞ்சினம்வாய்மையிற் றேற்றித் (உக0) தெண்ணீர்குடித்தலின் நெஞ்சமர்ந்து (உகக) சோலையிலே (உகச) களிறுதருபுணர்ச்சியைக் (உகஉ) கழிப்பி (உகச) மண்டிலம் மறைகையினாலே (உகசு) மாலைதுன்னுதல் கண்டு (உ௩0) இலங்கிழையீர், கலங்கலோம்புமினென (உ௩௩) ஈரநன்மொழிகூறி (உ௩ச) எம்மோடுவந்து (உ௩ரு) உண்துறைநிறுத்துப் பெயர்ந்தனன்; அதற்கொண்டு (உ௩எ) என்றும் (உ௩அ) இரவில்வருமாலையன்; வருந்தோறும் (உ௩கூ) கடுகினும் குரைப்பினும் (உச0) துயிலெழினும் வெளிப்படினும் (உசக) இன்றுயில் (உசஉ) பெருமறற் போவன்; அதுவேயன்றிப் பெயரினும்

முனியலுறுன் (உ௪௩); இகந்தன்றுமிலன் (உ௪௪); என்றும் (உ௪உ) தீர்ந் தன்றுமிலாதவன் (உ௪௫) மாயவரவினியல்புநினைந்து தேற்றுகையினுலே (உ௪௬) இவள்கலுழும் (உ௪௮); அங்ஙனம் அழுகின்றதற்குமேலே அவர் வருகின்ற (உ௬0) குழுமலைவிடரகம் (உ௬௧) விழுமம் (உ௬0) உடையவெ‌ன (உ௬௧) நினையுந்தோறும் (உ௫௧) சாஅய் (உ௫0) உறைப்பக் (உ௪௯) கலங்கா நிற்கும் (உ௫௧); இதுகாண் நல்வினை நிகழ்ந்தவண்ணமென்றுளென வினை முடிக்க.

ஆரியவரசன்பிரகத்தனைத் தமிழறிவித்தற்குக் கபிலர்பாடிய குறிஞ்சிப் பாட்டிற்கு மதுரைஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று.

வெண்பா.

௧. நின்குற்ற மில்லை நிரைதொடியும் பண்புடைய
ளென்குற்றம் யானு முணர்கலேன் - பொன்குற்
றருவி கொழிக்கு மணிமலை நாடன்
றெரியுங்காற் றீய திலன்.

உ. ஆற்றல்சால் கேள்வி யறம்பொரு ளின்பத்தைப்
போற்றிப் புனைந்த பொருளிற்றே - தேற்ற
மறையோர் மணமெட்டி னைந்தா மணத்திற்
குறையக் குறிஞ்சிக் குணம்.

# முகவுரை.



சென்னை யூனிவர்ஸிடியாரால் 1906-ம்௵த்து பி. எ. பட்டப்பரீக்ஷைக்குப் பாடமாக நியமிக்கப்பட்ட **பட்டினப்பாலையையும்**, அதை அறிந்து கொள்ளுதற்கு இன்றியமையாத மதுரை ஆசிரியர் **நச்சினார்க்கினிய** ருரையையும் வெளிப்படுத்தத் தொடங்கி, மாணாக்கர்களுக்கு அவை விளங்கும் வண்ணம் நூதனமாக எளியநடையில் எழுதிய குறிப்புக்களை உரியவிடங்களிற் சேர்த்துப் பதிப்பிக்கலானேன்.

**பட்டினப்பாலை**யென்பது கடைச்சங்கப்புலவர்களான நக்கீரனார்முதலியோரியற்றிய பத்துப்பாட்டினுள் ஒன்பதாவது; கடியலூர் உருத்திரங்கண்ணனாரால் இயற்றப்பெற்றது. வேற்றுநாட்டுக்குச்செல்லத்தொடங்கிய தலைவன், தனது நெஞ்சைநோக்கி, 'நெஞ்சே, காவிரிப்பூம்பட்டினத்தைப் பெற்றாலும் யான் தலைவியைப்பிரிந்து நின்னுடன்வாரேன்' என்று கூறுதல் முகமாகக் காவிரிப்பூம்பட்டினத்தின் வளத்தையும் சோழன் கரிகாற்பெருவளத்தானது வீரச்செயல்களையும் அவனது செங்கோலையும் பேரழகுபயப்பச் சிறப்பித்துப் பாராட்டிக் கூறப்பெற்றது.

இதன்முதலில் உள்ள உகஅ - அடிகளாற் காவிரிப்பூம்பட்டினத்தின் வளமும், உஉ௦ - வது முதலிய எகூ - அடிகளாற் சோழன்கரிகாற் பெருவளத்தானுடைய பெருமையும், ௩௦௦ - ம் அடியால், செல்லக்கருதிய காடுகள் அவனுடைய வேலினும் வெம்மையையுடையனவென்பதும், ௩௦க - ம் அடியால், தலைவியின்தோள்கள் அவனுடைய செங்கோலினும் தண்மையையுடையனவாதலால், இவள் வருந்தற்குரியளல்லளென்பதும், உகக, உஉ௦ - ம் அடிகளால், நெஞ்சே, இவள் இங்கே தனித்திருப்ப யான் நின்னொடுவருதலைச் செய்யேனென்பதும் கூறப்பட்டுள்ளன.

ஆசிரியர் நச்சினார்க்கினியர், பதங்களை அந்வயித்து இப்பாட்டிற்குப் பொருளெழுதியது, தொல்காப்பியம், பொருளதிகாரம், செய்யுளியல் உகக-ம் சூத்திரமாகிய மாட்டிலக்கணத்தை மேற்கோளாகக்கொண்டென்று உணர்க. மற்ற விசேடங்கள், அங்கங்குள்ள குறிப்புரையால் விளங்கும்.

இந்நூல், பலருரைகளில் மேற்கோளாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளது; **சீவகசிந்தாமணி** முதலிய பலநூலாசிரியர்கள் இதிலுள்ளவாக்கியங்களைத் தாமியற்றும் நூல்களுள் ஆங்காங்கு அமைத்து அழகுபடுத்தியிருக்கின்றனர்; "முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவம்" என்பது விதியன்றோ; இதனை ஆண்டாண்டுள்ள குறிப்புரைகள் ஒருவாறு விளக்கும்.

இதிற் பண்டைக்காலச்செய்திகள் பல காணப்படும். இதிலுள்ள விஷயம் ஒவ்வொன்றும் யாவரும் எப்பொழுதும் அனுபவித்துக்கொண்டிருக்கும் அனுபவமாக உள்ளதாதலின், இந்நூல் படிப்பவர்களுக்கு மிக்க இன்பத்தை விளைவிக்குமென்பது கூறாமலே விளங்கும்; செயற்கையழகினும் இயற்கையழகு சிறந்ததென்பது எல்லாருக்கும் தெரிந்தவிஷயமே.

விளங்க எழுதவேண்டியவைகளைப் பலகாரணங்களால் நான் எழுதாதிருத்தல் கூடும்; கல்வியறிவு ஒழுக்கங்களிற்சிறந்து கலாசாலைகளில் தமிழ்ப் பண்டிதர்களாக வீற்றிருக்கும் விவேகிகள் அக்குற்றத்தைப் பொறுக்கும்வண்ணம் நிரம்பக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இங்ஙனம்,

**வே. சாமிநாதன்.**

# நூல்.



நக்கீரனார்முதலிய சங்கப்புலவர்களியற்றிய **பத்துப்பாட்டுக்கள்** இன்னவையென்பதைப் பின்னுள்ள வெண்பாவாலுணர்க :—

> "முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
> பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
> கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
> பாலை கடாத்தொடும் பத்து."

அவற்றுள் :—

க.—**திருமுருகாற்றுப்படை** :—கூகஎ - அடிகளையுடையது ; முருகக்கடவுள்மீது மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியது ; இதில் முருகக்கடவுளுடைய ஸ்தலங்களுட்சிறந்த திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்), திருவாவினன்குடி (பழனி), திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை யென்னும் ஆறுபடைவீடுகளும், அவற்றில் அவர் எழுந்தருளியிருக்கும் விதமும் முறையே பாராட்டிக் கூறப்படும்.

உ.—**பொருநராற்றுப்படை** : — உசஅ - அடிகளையுடையது ; இளஞ்சேட்சென்னி புதல்வனாகிய சோழன்கரிகாற்பெருவளவனை முடத்தாமக்கண்ணியார் பாடியது ; இதில் கரிகாற்பெருவளவன்கொடையும் அவன்வீரமும் அவனாண்ட சோழநாட்டின் வளமும் காவிரிநதியின் சிறப்பும் நன்றாகக் கூறப்படும்.

ந.—**சிறுபாணாற்றுப்படை** :—உசுக - அடிகளையுடையது ; ஏறுமாநாட்டு நல்லியக்கோடனென்பவனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடியது ; இதில் நல்லியக்கோடனது வண்மையும் அவனுடைய நகரங்களாகிய எயிற்பட்டினம் வேலூர் ஆமூர் முதலியவற்றி னியல்பும், அவற்றிலிருந்த மாந்தர்களது நற்குண நற்செய்கைகளும் தமிழ்நாட்டு மூவேந்தர்களுடைய இராஜதானிகளாகிய மதுரை வஞ்சி உறையூ ரென்னு மூன்றுநகரங்களி னிலைமையும், பேகன் பாரி காரி ஆய் அதிகன் நள்ளி ஓரியென்னும் வள்ளல்களெழுவரும் இன்னஇன்ன கொடையாற் பெயர்பெற்றார்க ளென்பதும் கூறப்படும்.

ச.—**பெரும்பாணாற்றுப்படை** :—௫00 - அடிகளையுடையது ; காஞ்சிநகரத்திருந்த தொண்டைமான் இளந்திரையனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியது ; இதில் அவனது வண்மையும், தொண்டைநாட்டிலேயுள்ள குறிஞ்சிமுதலிய ஐந்திணைவளங்களும், அவற்றில்வாழும் மாந்தருடைய தொழில் ஊண் ஒப்புரவு முதலியனவும், காஞ்சிநகரத்தின் சிறப்பும், திருமாலின் நூற்றெட்டுத்திருப்பதிகளுள் ஒன்றாகிய திருவெஃகாவென்பதும் கூறப்பட்டுள்ளன.

௫.—முல்லைப்பாட்டு:—இது ௧0௩. - அடிகளையுடையது; பகைமேற் சென்ற தலைவன் வருமளவும் தலைவி ஆற்றியிருந்தவிடத்து அவன் வந்ததனைக் கண்டு தோழிமுதலியோராகிய வாயில்கள் தம்முட்கூறியதாகக் காவிரிப்பூம் பட்டினத்துப் பொன்வாணிகனார் மகனார் நப்பூதனார் பாடியது; இது தலைவனைப்பிரிந்து தனித்திருக்கும் தலைவியின் இயல்பையும் கார்காலத்தின் தன்மையையும் படைவீட்டிற் பகைவர் துயரத்தோடிருத்தலையும் தலைவனது சௌரியத்தையும் விளங்கக்கூறும்.

௬.—மதுரைக்காஞ்சி:—எ௮௨ - அடிகளையுடையது; தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு வீடுபேறு நிமித்தம் நிலையாமையைச் செவியறிவுறுத்தி மாங்குடிமருதனார் பாடியது; இதில் பாண்டிநாட்டின் ஐந்திணைவளங்களும், மதுரையம்பதியினழகும், அப்பாண்டியனது வீரமுதலியனவும், சேரராஜனது நாளோலக்கச் சிறப்பும், அக்காலத்திருந்த பலசிற்றரசர்களுடைய பெருமையும், அருச்சுனனுக்குக் கண்ணன் உபதேசித்த பகவத்கீதையின் மேம்பாடும் இன்னும் பலவும் கூறப்பட்டுள்ளன.

௭.—நெடுநல்வாடை:—௧௮௮ - அடிகளையுடையது; பாண்டியன் நெடுஞ்செழியனை நக்கீரனார் பாடியது; இதில் ஐப்பசிகார்த்திகை மாதங்களாகிய கூதிர்க்காலத்தினியல்பும் தனித்திருந்த தலைவியது வருத்தமிகுதியும் படைவீட்டில் தலைவனிருக்கும் வண்ணமும் விளங்கக் கூறப்பட்டுள்ளன.

௮.—குறிஞ்சிப்பாட்டு:—௨௬௧ - அடிகளையுடையது; ஆரியவரசன் பிரகத்தனைத் தமிழறிவுறுத்தற்குக் கபிலர் பாடியது; இதில் மலைவளங்களும், இல்லறமுறைமையும், தலைவனும் தலைவியும் தம்முள்வைக்கத்தகுமன்புடைமையும், கற்பின் இன்றியமையாமையும், பல மலர்விசேடங்களும் அழகாகக் கூறப்பட்டுள்ளன; இது பெருங்குறிஞ்சியென்றும் பெயர்பெறும்.

௯.—பட்டினப்பாலை:—௩0௧ - அடிகளையுடையது; இந்நூல், வஞ்சிப்பா என்பதும் பெரும்பாலும் ஆசிரியவடிகளும் சிறுபான்மை வெள்ளடியும் கலியடியும் இதில்வந்துள்ளன என்பதும் ஒருசார் பழையவுரையாசிரியர்களுடைய கொள்கை; இதனை, பின்வருவனவற்றாலுணர்க. 'பட்டினப்பாலையென்னும் வஞ்சிநெடும்பாட்டினுள், (௨௨) "நேரிழை மகளி ருணங்குணாக் கவரும்" என்றித்தொடக்கத்தன ஆசிரியவடி; (௬௪ - ௬௫) "வயலாமைப் புழுக்குண்டும், வறளடம்பின் மலர்மலைந்தும்" என்பது கலியடி; இதனை, "வயலாமைப் புழுக்குண்டும் வறளடம்பின் மலர்மலைந்தும், கயனாட்டக் கடைசியர்தங் காதலர்தோள் கலந்தனரே" என உச்சரித்துக் கலியடியாமாறு கண்டுகொள்க. (௨௩) "கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை" என்பது வெள்ளடி; இதனை, "கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை, யாழிசூழ் வையக் கணி" என உச்சரித்து, 'வெள்ளடியாமாறு கண்டுகொள்க' என்பது, யாப்பருங்கலம், அடியோத்து, ௯ - ம் சூத்திரவிருத்தியுரை;

இத்னை, யாப்பருங்கலக்காரிகை, ஒழிபியல், ௬-ம் கலித்துறையின் விசேடவுரையாலும் உணர்க; இதன் மற்றவரலாற்றை முகவுரையிற் காண்க.

௧௦.—மலைபடுகடாம்: —ருஅ௩-அடிகளையுடையது; பல்குன்றக்கோட்டத்துச் செங்கண்மாத்துவேள் நன்னன்சேய் நன்னனை இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பாடியது; இதில் அவனூர்க்குச்செல்லும் வழியினியல்பும், அவ்வவ்விடத்துக்கிடைக்கும் உணவின் வகைகளும் அவனது மலை சோலை காடுகளின் வளங்களும், அவனது வள்ளன்மையும், ஆற்றலும், அவனது சுற்றத்தினொழுக்கங்களும், அவனது நாளோலக்கச் சிறப்பும், அவனது நவிர மென்னும் மலையில் காரியுண்டிக்கடவு ளென்னும் திருநாமத்தோடு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானது மகிமையும், அவனுடைய முன்னோர்களின் பெருமையும், அவனூரினியல்பும், அவனது சேயாறென்னும் ஆறுமுதலியவற்றின் வளங்களும் விளங்கக் கூறப்பட்டுள்ளன. இது கூத்தராற்றுப்படை யெனவும் பெயர்பெறும்.

---

## நூலாசிரியர்.

இந்நூலாசிரியராகிய கடியலூர் உருத்திரங்கண்ணனாரென்பவர், கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவர். இவருடைய ஊராகிய கடியலூரென்பது இன்னநாட்டிலுள்ளதென்று தெரியவில்லை.

**இவருடைய தந்தையார்**: ஐயந்தீர்தற்பொருட்டுத் தந்தையின்பெயரைப் புதல்வனுடையபெயர்க்கு விசேடணமாக்கிவழங்குதல் மரபாக இருத்தலாலும், உருத்திரங்கண்ணனாரென்னும் பெயர்த்தொகையை உருத்திரனாருடைய புதல்வராகிய கண்ணனாரென விரித்தற்கு இடமுண்டாதலாலும் 'உருத்திரனார்' என்பவர், இவருடைய தந்தையாராகக் கருதப்படுகிறார்; உருத்திரனாரென்னும் பெயரொன்று, குறுந்தொகையில், "புறவுப்புறத்தன்ன" என்னும் 274-ம் செய்யுளியற்றியவர்பெயராகக் காணப்படுகின்றது.

**இவர்சாதி**: தொல்காப்பியம், மரபியலில், "ஊரும் பெயரும்" என்னும் ௭௪-ம் சூத்திரத்தின் விசேடவுரையில், 'உறையூர் ஏணிச்சேரிமுடமோசி, பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகன், கடியலூருருத்திரங்கண்ணன் என்பன அந்தணர்க்குரியன' என்பது வரையப்பெற்றிருத்தலால், இவர் அந்தணராகக் கருதப்படுகிறார்.

**இவரதுசமயம்**: பெரும்பாணாற்றுப்படையில், [அடிகள், 372 - 373] "காந்தளஞ் சிலம்பிற் களிறுபடிந் தாங்குப், பாம்பணைப் பள்ளி யமர்ந்தோனாங்கண்" எனக் காஞ்சிநகரத்துள்ள விஷ்ணுஸ்தலங்களுள் ஒன்றாகிய திருவெஃகாவென்னுந் திருப்பதியையும் அதிற் பள்ளிகொண்டருளிய திருமாலையும் பாராட்டிக் கூறியிருத்தலின், இவர் வைஷ்ணவசமயத்தில் அதிகப்பற்றுடையவரென்று சொல்லுவதற்கு இடமுண்டு.

**இவரியற்றியவை:** பத்துப்பாட்டினுள், 4 - வதாகிய பெரும்பாணாற்றுப் படையும், 9 - வதாகிய இந்நூலும், எட்டுத்தொகையுட் குறுந்தொகைக்கண்ணதாகிய, "நெடுநீராம்பல்" என்னும் 352 - ம் செய்யுளும், அகநானூற்றின் கண்ணதாகிய, "வயங்குமணிபொருத" என்னும் 166 - ம் செய்யுளுமாகிய இவைகள் இவரால் இயற்றப்பெற்றவையென்று இப்பொழுது தெரிகின்றது.

**இவரை ஆதரித்தபிரபுக்கள்:** பெரும்பாணாற்றுப்படைத்தலைவனாகிய தொண்டைமான் இளந்திரையனும், இந்நூற்றலைவனாகிய சோழன் கரிகாற் பெருவளத்தானும் இவரை ஆதரித்ததலைவர்கள்.

**இவர்பெற்றபரிசில்:** சோழன் கரிகாற்பெருவளத்தான் இந்நூலைக் கேட்டுமகிழ்ந்து பதினாறுநூறாயிரம்பொன் இவர்க்குப் பரிசளித்தானென்று தெரிகின்றது. இதனை, கலிங்கத்துப்பரணி, இராசபாரம்பரியம், 22: "தழுவு செந்தமிழ்ப் பரிசில் வாணர்பொன், பத்தொ டாறுநூ றாயி ரம்பெறப், பண்டு பட்டினப் பாலை கொண்டதும்" என்பதனாலுணர்க.

**இவரதுகாலம்:** கடைச்சங்கப்புலவர்களுடையகாலம், இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறுவருஷங்களுக்கு முற்பட்டதென்று இங்கிலீஷ்பாஷையிலும் தமிழ்ப்பாஷையிலும் பயிற்சியுள்ள பலபுலவர்கள் நுணுகி ஆராய்ந்து தக்க ஆதாரங்கள்காட்டியெழுதி மேன்மேலும் வெளிப்படுத்திவருதல் இக்காலத்தில் யாவருக்கும் தெரிந்ததாதலின், கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவராகிய இவர்காலமும் அதுவேயென்பது கூறாமலேவிளங்கும்.

---

## இந்நூல் உரையாசிரியராகிய
# நச்சினார்க்கினியர் வரலாறு.

### விருத்தம்.

எவனாலை வாயிடைவந் தமுதவா யுடையனென வியம்பப் பெற்றோன்
எவன்பண்டைப் பனுவல்பல விறவாது நிலவவுரை யெழுதி யீந்தோன்
எவன்பரம வுபகாரி யெவனச்சி னார்க்கினிய னெனும்பே ராளன்
அவன்பாத விருபோது மெப்போது மலர்கவென தகத்து மன்னோ.

இந்நூலின் உரையாசிரியராகிய ஆசிரியர் நச்சினார்க்கினியர், பாண்டி வளநாட்டுள்ள மதுராபுரியிற் பிராமணகுலத்திற் பாரத்துவாசகோத்திரத்திற்பிறந்தவர். தமிழ்ப்பாஷையிலுள்ள பல்வகையான எல்லாநூல்களிலும் அதிபாண்டித்தியமுடையவர். இவரது சமயம் சைவமே. இவர் இன்னாரென்பது, "வண்டிமிர் சோலை மதுரா புரிதனில், லெண்டிசை விளங்க வந்த

வாசான், பயின்ற கேள்விப் பாரத் துவாச, ஞன்மறை துணிந்த நற்பொரு ளாகிய, தூய ஞான நிறைந்த சிவச்சுடர், தானே யாகிய தன்மை யாளன்" என்னும் உரைச்சிறப்புப்பாயிரத்தால் விளங்கும். சிவஸ்தலங்களுட்சிறந்த சிதம்பரத்தினது திருநாமங்களாகிய 'திருச்சிற்றம்பலம்,' 'பெரும்பற்றப்புலியூர்' என்பவற்றை முறையே ஆறெழுத்தொருமொழிக்கும் எழெழுத்தொருமொழிக்கும் உதாரணமாக இவர், தொல்காப்பியம் எழுத்ததிகாரத்து மொழிமரபில், "ஓரெழுத்தொருமொழி" என்னுஞ் சூத்திரத்து விசேடவுரையிற் காட்டியிருத்தலாலும், சைவசமயத்துச் சிறந்தநூல்களாகிய திருவாசகம் திருச்சிற்றம்பலக்கோவையார் என்பவற்றினின்றும் தமது உரைகளிற் பலவிடங்களில் இலக்கிய விலக்கணப் பொருள்களுக்கன்றித் தத்துவப்பொருளுக்கும் மேற்கோள்கள் எடுத்துக்காட்டியிருத்தலாலும், அங்ஙனம் மேற்கோள்கொண்ட சிலவிடங்களில் எழுதியுள்ள விசேடவுரைகளாலும், நாமகளிலம்பகத்து 'மேகம் மீன்ற' என்னும் ௬௬-ம் செய்யுளில், 'போகம்மீன்ற புண்ணியன்' என்பதற்கு எழுதிய விசேடவுரையாலும், திருமுருகாற்றுப்படை யுரையிற் காட்டிய சில நயங்களாலும், உரைச்சிறப்புப்பாயிரத்தில், "தூய ஞான நிறைந்த சிவச்சுடர், தானே யாகிய தன்மை யாளன்" எனக்கூறப்பெற்றதனாலும், மற்றுஞ் சிலவற்றாலும், இவர் சைவசமயியாதல் நன்குவெளியாகும்.

இவ்வுரையாசிரியர், பத்துப்பாட்டினுள் இந்நூலுக்கன்றி மற்றநூல்களுக்கும் தொல்காப்பியத்திற்கும் கலித்தொகைக்கும் குறுந்தொகையில் பேராசிரியர் பொருளெழுதாதொழிந்த இருபது செய்யுட்களுக்கும் உரைசெய்தருளினர். இன்னும் சிலநூல்களுக்கு இவர் உரையியற்றினரென்பர்; அவை இவையென்று புலப்படவில்லை. இக்காலத்து வழங்கும் திருக்கோவையாருரை பேராசிரியராற் செய்யப்பட்டதென்று தெரிகின்றமையாலும், இவர் அந்நூற்குச்செய்த வேறுரை கிடையாமையாலும் அதற்கும் திருக்குறள் முதலிய மற்றுஞ்சிலவற்றிற்கும் இவர் உரைசெய்திருப்பதாக இவருடைய உரைச்சிறப்புப்பாயிரத்திலேனும் வேறொன்றிலேனும் கூறப்படாமையாலும், அவைகள் இங்கே எழுதப்பட்டில.

சீவகசிந்தாமணிக்கு நச்சினார்க்கினியர் முதன்முறை ஓருரையெழுதி, அக்காலத்துப் பிரசித்திபெற்றிருந்த சைனவித்துவான்கள் சிலருக்குக்காட்ட, அவர்கள் அவ்வுரையை அங்கீகரியாமை கண்டு, பின்பு ஆருகதநூல்கள் பலவற்றையும் நலமுற ஆராய்ந்து இரண்டாமுறை ஓர்உரையையெழுதி அவர்களுக்குக் காட்டவே, அவர்கள் உற்றுநோக்கி வியந்து அவ்வுரையை அங்கீகரித்துக்கொண்டாரென்று சைனர் கூறுகின்றனர்.

நாமகளிலம்பகத்தில் "கண்ணுளார் நுங்காதலர்" என்னும் ௬௩-ம் செய்யுளுரையில் 'ஈங்குத் தன்மையையுணர்த்துதல், "செலவினும் வரவினும்" என்னுஞ் சூத்திரத்திற் கூறினும்' என்றும், குணமாலையாரிலம்பகத்தில் "மங்கை நல்லவர்" என்னுஞ்செய்யுளுரையில் 'ஆசிரியர் "நண்டுந் தும்பியும்"

என்று தும்பியைப்பின்வைத்தது. மேல்வருஞ் சூத்திரத்தில், "மாவு மாக்களு மையறி வென்ப" என்ற ஐயறிவு இதற்கும் ஏறுதற்கென்றுணர்க; இதனை வாராததனால் வந்ததுமுடித்த லென்னுந் தந்திரவுத்தியாற் கொள்க வென்று ஆண்டு உரை கூறிப்போந்தாம்' என்றும் நச்சினார்க்கினியர் எழுதியிருத்தலால், இவர் தொல்காப்பியத்திற்கு உரையெழுதினபின்பு சீவகசிந்தாமணிக்கு உரையெழுதினரென்று விளங்குகின்றது.

தொல்காப்பியவுரைமுதலியவற்றில் இவரால் எடுத்துக்காட்டப்பட்டுள்ள மேற்கோள்களமைந்த நூல்களுள் இதுகாறும் விளங்கியவை வருமாறு:—

க. அகத்தியம்.
உ. அகநானூறு.
ங. அணியியல்.
ச. அவிநயம்.
ரு. ஆசாரக்கோவை.
சு. இராமாயண வெண்பா.
எ. இறையனாரகப்பொருள்.
அ. ஏலாதி.
கூ. ஐங்குறுநூறு.
கo. ஐந்திணையெழுபது.
கக. ஐந்திணையைம்பது.
கஉ. கடகண்டு.
கங. கலித்தொகை.
கச. களவழிநாற்பது.
கரு. காக்கைபாடினியம்.
கசு. குணநாற்பது.
கஎ. குறிஞ்சிப்பாட்டு.
கஅ. குறுந்தொகை.
ககூ. கூத்தநூல்.
உo. கைந்நிலை.
உக. கொன்றைவேந்தன்.
உஉ. சிலப்பதிகாரம்.
உங. சிறுகாக்கைபாடினியம்.
உச. சிறுபஞ்சமூலம்.
உரு. சிறுபாணாற்றுப்படை.
உசு.
உஎ.
உஅ. தகடூர்யாத்திரை.
உகூ. திணைமாலைநூற்றைம்பது.
நo. திணைமொழியைம்பது.
நக. திரிகடுகம்.
நஉ. திருக்குறள்.
நங. திருக்கோவையார்.
நச. திருமுருகாற்றுப்படை.
நரு. திருவாசகம்.
நசு. தொல்காப்பியம்.
நஎ. நற்றிணைநானூறு.
நஅ. நாடகநூல்.
நகூ. நாலடியார்.
சo. நெடுநல்வாடை.
சக. பட்டினப்பாலை.
சஉ. பதிற்றுப்பத்து.
சங. பரிபாடல்.
சச. பல்காப்பியம்.
சரு. பல்காயம்.
சசு. பழமொழி.
சஎ. பன்னிருபடலம்.
சஅ. பாரதவெண்பா.
சகூ. புறநானூறு.
ருo. புறப்பொருள்வெண்பாமாலை.
ருக. பூதபுராணம்.
ருஉ. பெருங்கதை.
ருங. பெரும்பாணாற்றுப்படை.
ருச. பெரும்பொருள்விளக்கம்.
ருரு. பொய்கையார் முதலாயினோர் செய்த அந்தாதி.
ருசு. பொருநராற்றுப்படை.
ருஎ. மணிமேகலை.

தொல்காப்பியவுரைமுதலியவற்றில் வேதம், வேதாங்கம் முதலிய பல நூல்களிலிருந்தும் பல உரைகளிலிருந்தும் பற்பல அரியவிஷயங்களை ஆங்காங்கு எடுத்துக்காட்டி நன்குவிளக்கிப்போகின்றமையின், இவரை வடமொழியிலும் மிக்க பயிற்சியுள்ளவராகச் சொல்லுதற் கிடமுண்டு.

உரையாசிரியர், சேனாவரையர், பேராசிரியர், ஆளவந்தபிள்ளையாசிரியர் முதலிய உரையாசிரியர்கள் இவருடைய உரையில் எடுத்துக்கூறப்பட்டிருத்தலின், அவர்களுக்கு இவர் காலத்தினாற்பிற்பட்டவரென்று தெரிகின்றது.

அமிழ்தினுமினிய தமிழ்மடவரல் செய் அருந்தவத்தின் பெரும்பயனாக அவதரித்தருளிய இம்மகோபகாரியின் அருமைபெருமைகள் விரிவஞ்சி விடுக்கப்பட்டன.

இவருடைய மேம்பாட்டைப்பாராட்டி அக்காலத்து ஆன்றோராற்செய்யப்பட்ட உரைச் சிறப்புப்பாயிரச் செய்யுட்கள் வருமாறு:—

### வெண்பா.

பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியு
மாரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்குஞ் - சாரத்
திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
விருத்திநச்சி னார்க்கினிய மே.

தொல்காப் பியத்திற் றொகுத்த பொருளனைத்து
மெல்லார்க்கு மொப்ப வினிதுரைத்தான் - சொல்லார்
மதுரைநச்சி னார்க்கினியன் மாமறையோன் கல்விக்
கதிரின் சுடரெறிப்பக் கண்டு.

### ஆசிரியப்பா.

பாற்கடல் போலப் பரந்த நன்னெறி
நூற்படு வான்பொரு ணுண்ணிதி னுணர்ந்த
போக்கறு கேள்விப் புலவோர் புலத்தி
னாற்பொருள் பொதிந்த தூக்கமை யாப்பினைத்
தேக்கிய சிந்தைய னாகிப் பாற்பட
வெழுத்துஞ் சொல்லும் பொருளுமிம் மூன்று
மிழுக்கற வாய்ந்த வழக்கினெறேல் சீர்த்தித்

தொல்காப் பியமெனுந் தொடுகடற் பரப்பை
மறுவுங் குறைவு மின்றி யென்றுங்
கலையி னிறைந்த கதிர்மதி யென்ன
நிலையுடை கலத்தி னெடுங்கரை காணக்
கல்லா மாந்தர் கற்பது வேண்டியு
நல்லறி வுடையோர் நயப்பது வேண்டியு
முறையிடை யிட்ட காண்டிகை யுரைத்து
மான்றோர் புகழ்ந்த வறிவினிற் றெரிந்து
சான்றோ ருரைத்த தண்டமிழ்த் தெரிய
லொருபது பாட்டு முணர்பவர்க் கெல்லா
முரையற முழுதும் புரைபட வுரைத்து
மொலித்திரைத் தலத்தி னுணர்ந்தோ ருரைக்குங்
கலித்தொகைக் கருத்தினைக் காட்சியிற் கண்டதற்
குள்ளுறை யுவமமு மேனை யுவமமுந்
தெள்ளிதிற் றெரிந்து திணைப்பொருட் கேற்ப
வுள்ளுறை யுவமத் தொளித்த பொருளைக்
கொள்பவர் கொள்ளக் குறிப்பதிற் றுணர்த்தி
யிறைச்சிப் பொருளுக் கெய்தும் வகையைத்
திறப்படத் தெரிந்து சீர்பெறக் கொளீஇத்
துறைப்படு பொருளொடு சொற்பொருள் விளக்கி
முறைப்பட வினையை முடித்துக் காட்டிப்
பாட்டிடை மெய்ப்பாடு பாங்குறத் தெரித்துப்
பாற்பட நூலின் யாப்புற வுரைத்த
நாற்பெயர் பெயரா நடப்பக் கிடத்திப்
போற்ற வின்னுரை பொருள்பெற விளம்பியும்
வையம் புகழ்ந்து மணிமுடி சூட்டிய
பொய்யில் வான்கதை பொதிந்த செந்தமிழ்ச்
சிந்தா மணியைத் தெண்கடன் மாநிலம்
வந்தா தரிப்ப வண்பெரு வஞ்சிப்
பொய்யா மொழிபுகழ் மையறு காட்சித்
திருத்தகு முனிவன் கருத்திது வென்னப்
பருப்பொருள் கடிந்து பொருட்டொடர்ப் படுத்து
வினையொடு முடியப் புனையுரை யுரைத்து
நல்லறி வுடைய தொல்பே ராசான்
கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்
பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்
கிதுபொரு ளென்றவ னெழுதா தொழிய
விதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்துங்

தண்டமிழ் தெரித்த வண்புகழ் மறையோன்
வண்டிமிர் சோலை மதுரா புரிதனி
லெண்டிசை விளங்க வந்த வாசான்
பயின்ற கேள்விப் பாரத் துவாச
னுண்மறை துணிந்த நற்பொரு ளாகிய
தூய ஞான நிறைந்த சிவச்சுடர்
தானே யாகிய தன்மை யாள
னவின்ற வாய்மை நச்சினார்க் கினிய
னிருவினை கடியு மருவியம் பொதியின்
மருவிய குறுமுனி தெரிதமிழ் விளங்க
வூழி யூழி காலம்
வாழி வாழியிம் மண்மிசை தானே.

விருத்தம்.

பச்சைமா லனைய மேகம் பௌவநீர் பருகிக் கான்ற
வெச்சினாற் றிசையு முண்ணு மமிழ்தென வெழுநா வெச்சின்
மெச்சினா ளுளும் விண்ணோர் மிசைகுவர் வேத போத
னச்சினார்க் கினிய னெச்சி னறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்.



உ

கணபதி துணை.

# பத்துப்பாட்டு.



## ௯.—பட்டினப்பாலை.

### நச்சினார்க்கினியருரை.



வசையில்புகழ் வயங்குவெண்மீன்
றிசைதிரிந்து தெற்கேகினுந்
தற்பாடிய தளியுணவிற்
புட்டேம்பப் புயன்மாறி
வான்பொய்ப்பினுந் தான்பொய்யா
மலைத்தலைய கடற்காவிரி
புனல்பரந்து பொன்கொழிக்கும்
விளைவறா வியன்கழனிக்
கார்க்கரும்பின் கமழாலைத்
தீத்தெறுவிற் கவின்வாடி
நீர்ச்செறுவி னீணெய்தற்
பூச்சாம்பும் புலத்தாங்கட்
காய்ச்செந்நெற் கதிரருந்து
மோட்டெருமை முழுக்குழவி
கூட்டுநிழற் றுயில்வதியுங்
கோட்டெங்கிற் குலைவாழைக்
காய்க்கமுகிற் கமழ்மஞ்ச
ளினமாவி னிணர்ப்பெண்ணை
முதற்சேம்பின் முளையிஞ்சி
யகனகர் வியன்முற்றத்துச்
சுடர்நுதன் மடநோக்கி
னேரிழை மகளி ருணங்குணாக் கவருங்
கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை

பொற்காற் புதல்வர் புரவியின் றுருட்டு
முக்காற் சிறுதேர் முன்வழி விலக்கும்
விலங்குபகை யல்லது கலங்குபகை யறியாக்
கொழும்பல்குடிச் செழும்பாக்கத்துக்
குறும்பல்லூர் நெடுஞ்சோணாட்டு
வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி
நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி
பணைநிலைப் புரவியி னணைமுதற் பிணிக்குங்
கழிசூழ்படப்பைக் கலியாணர்ப்
பொழிற்புறவிற் பூந்தண்டலை
மழைநீங்கிய மாவிசும்பின்
மதிசேர்ந்த மகவெண்மீ
னுருகெழுதிற லுயர்கோட்டத்து
முருகமர்பூ முரண்கிடக்கை
வரியணிசுடர் வான்பொய்கை
யிருகாமத் திணையேரிப்
புலிப்பொறிப் போர்க்கதவிற்
றிருத்துஞ்சுந் திண்காப்பிற்
புகழ்நிலைஇய மொழிவளர
வறநிலைஇய வகனட்டிற்
சோறுவாக்கிய கொழுங்கஞ்சி
யாறுபோலப் பரந்தொழுகி
யேறுபொரச் சேறாகித்
தேரோடத் துகள்கெழுமி
நீறாடிய களிறுபோல
வேறுபட்ட வினையோவத்து
வெண்கோயின் மாசூட்டுந்
தண்கேணித் தகைமுற்றத்துப்
பகட்டெருத்தின் பலசாலைத்
தவப்பள்ளித் தாழ்காவி
னவிர்சடை முனிவ ரங்கி வேட்கு
மாவுதி நறும்புகை முனைஇக் குயிறம்
மாயிரும் பெடையோ டிரியல் போகிப்
பூதங் காக்கும் புகலருங் கடிநகர்த்

தூதுணம் புறவொடு துச்சிற் சேக்கு
முதுமரத்த முரண்களரி
வரிமண லகன்றிட்டை
யிருங்கிளை யினனொக்கற்
கருந்தொழிற் கலிமாக்கள்
கடலிறவின் சூடுதின்றும்
வயலாமைப் புழுக்குண்டும்
வறளடம்பின் மலர்மலைந்தும்
புனலாம்பற் பூச்சூடியு
நீனிற விசும்பின் வலனேர்பு திரிதரு
நாண்மீன் விராய கோண்மீன் போல
மலர்தலை மன்றத்துப் பலருடன் குழீஇக்
கையினுங் கலத்தினு மெய்யுறத் தீண்டிப்
பெருஞ்சினத்தாற் புறக்கொடாஅ
திருஞ்செருவி னிகன்மொய்ம்பினோர்
கல்லெறியுங் கவண்வெரீஇப்
புள்ளிரியும் புகர்ப்போந்தைப்
பறழ்ப்பன்றிப் பலகோழி
யுறைக்கிணற்றுப் புறச்சேரி
மேழகத் தகரொடு சிவல்விளை யாடக்
கிடுகுநிரைத் தெஃகூன்றி
நடுகல்லி னரண்போல
நெடுந்தூண்டிலிற் காழ்சேர்த்திய
குறுங்கூரைக் குடிநாப்ப
ணிலவடைந்த விருள்போல
வலையுணங்கு மணன்முன்றில்
வீழ்த்தாழைத் தாட்டாழ்ந்த
வெண்கூ தாளத்துத் தண்பூங் கோதையர்
சினைச்சுறவின் கோடுநட்டு
மனைச்சேர்த்திய வல்லணங்கினான்
மடற்றாழை மலர்மலைந்தும்
பிணர்ப்பெண்ணைப் பிழிமாந்தியும்
புன்றலை யிரும்பரதவர்
பைந்தழைமா மகளிரொடு

பாயிரும் பனிக்கடல் வேட்டஞ் செல்லா
துவவுமடிந் துண்டாடியும்
புலவுமணற் பூங்கானன்
மாமலை யணைந்த கொண்மூப் போலவுந்
தாய்முலை தழுவிய குழவி போலவுந்
தேறுநீர்ப் புணரியொடு யாறுதலை மணக்கு
மலியோதத் தொலிகூடற்
றீதுநீங்கக் கடலாடியு
மாசுபோகப் புனல்படிந்து
மலவனாட்டியு முரவுத்திரை யுழக்கியும்
பாவை சூழ்ந்தும் பல்பொறி மருண்டு
மகலாக் காதலொடு பகல்விளை யாடிப்
பெறற்கருந் தொல்சீர்த் துறக்க மேய்க்கும்
பொய்யா மரபிற் பூமலி பெருந்துறைத்
துணைப்புணர்ந்த மடமங்கையர்
பட்டுநீக்கித் துகிலுடுத்து
மட்டுநீக்கி மதுமகிழ்ந்து
மைந்தர் கண்ணி மகளிர் சூடவு
மகளிர் கோதை மைந்தர் மலையவு
நெடுங்கான் மாடத் தொள்ளெரி நோக்கிக்
கொடுந்திமிற் பரதவர் குரூஉச்சுட ரெண்ணவும்
பாட லோர்த்து நாடக நயந்தும்
வெண்ணிலவின் பயன்றுய்த்துங்
கண்ணடைஇய கடைக்கங்குலான்
மாஅகாவிரி மணங்கூட்டுந்
தூஉவெக்கர்த் துயின்மடிந்து
வாலிணர் மடற்றாழை
வேலாழி வியன்றெருவி
னல்லிறைவன் பொருள்காக்குந்
தொல்லிசைத் தொழின்மாக்கள்
காய்சினத்த கதிர்ச்செல்வன்
றேர்பூண்ட மாபோல
வைகறொறு மசைவின்றி
யுல்குசெயக் குறைபடாது

வான்முகந்தநீர் மலைப்பொழியவு
மலைப்பொழிந்தநீர் கடற்பரப்பவு
மாரி பெய்யும் பருவம் போல
நீரினின்று நிலத்தேற்றவு
நிலத்தினின்று நீர்ப்பரப்பவு
மளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி
யருங்கடிப் பெருங்காப்பின்
வலியுடை வல்லணங்கினோன்
புலிபொறித்துப் புறம்போக்கி
மதிநிறைந்த மலிபண்டம்
பொதிமூடைப் போரேறி
மழையாடு சிமய மால்வரைக் கவாஅன் ௱
வரையாடு வருடைத் தோற்றம் போலக்
கூருகிர் ஞமலிக் கொடுந்தா ளேற்றை
யேழகத் தகரோ டுகளு முன்றிற்
குறுந்தொடை நெடும்படிக்காற்
கொடுந்திண்ணைப் பஃறகைப்பிற்
புழைவாயிற் போகிடைகழி
மழைதோயு முயர்மாடத்துச்
சேவடிச் செறிகுறங்கிற்
பாசிழைப் பகட்டல்குற்
றூசுடைத் துகிர்மேனி
மயிலியன் மானோக்கிற்
கிளிமழலை மென்சாயலோர்
வளிநுழையும் வாய்பொருந்தி
யோங்குவளை மருங்கி னுண்டா துறைக்கும்
காந்தளந் துடுப்பிற் கவிகுலை யன்ன
செறிதொடி முன்கை கூப்பிச் செவ்வேள்
வெறியாடு மகளிரொடு செறியத் தாஅய்க்
குழலகவ யாழ்முரல
முழவதிர முரசியம்ப
விழவறா வியலாவணத்து
மையறு சிறப்பிற் றெய்வஞ் சேர்த்தி

223 - 225. [அருங்களை கவியக் குத்திக் குழிகொன்று, பெருங்கை யானை பிடிபுக் காங்கு, நுண்ணிதி னுணர நாடி :]

225. நுண்ணிதின் உணர நாடி - தன்னுணர்வு கூரிதாகவுணரும்படி இதுவேகாரியமென்று ஆராய்ந்து,

224, 223, 224. பெரு கை யானை அரு களை கவிய குத்தி குழி கொன்று பிடி புக்காங்கு- பெரிய கையினையுடைய யானை தான் அகப்படப்பண்ணின குழியில் ஏறுதற்கரிய கரைகளை இடியும்படி கோட்டாலேகுத்திக் குழியைத் தூர்த்துப் பிடியிடத்தே சென்றாற்போல,

(கு - பு.) கோடு - கொம்பு. பிடி - பெண்யானை. 'பிறர்பிணியகத் திருந்து' என்றதனால், இளமைப்பருவத்தில், இவன் பகைவருடைய காவலி லிருந்தானென்று தெரிகின்றது.

225 - 226. [நண்ணார், செறிவுடைத் திண்காப் பேறி வாள்கழித்து :] நண்ணார் செறிவுடை திண் காப்பு வாள் கழித்து எறி - அப்பகைவருடைய நெருங்கின திண்ணிய காவலாகிய வாட்படையை ஓட்டி அவ்விடத்தினின் றும் போந்து,

இனி, திண்காப்பிடத்தே வாளை உறைகழித்து வெட்டிப்போந்தென்று மாம்.

(கு - பு.) வாட்படை - வாளாயுதத்தையுடைய காலாட்படை.

227. உரு கெழு தாயம் ஊழின் எய்தி - பகைவர் அச்சம்பொருந்து தற்குக் காரணமான தன் அரசுரிமையை முறையாலேபெற்று,

228. பெற்றவை மகிழ்தல் செய்யான் - தான் இறையாகப்பெற்ற அர சுரிமையால் மகிழ்ச்சிபொருந்துதல் செய்யானாய், மேலும் ஆசைமிக்கு,

(கு - பு.) இறை - கப்பம்.

228 - 238. [செற்றோர், கடியரண் டொலைத்த கதவுகொன் மருப் பின், முடியுடைக் கருந்தலை புரட்டு முன்றா, ளுகிருடை யடிய வோங் கெழில யானை, வடிமணிப் புரவியொடு வயவர் வீழப், பெருநல் வானத்துப் பருந்துலாய் நடப்பத், தூறிவர் துறுகற் போலப் போர்வேட்டு, வேறுபல் பூளையொ டுழிஞை சூடிப், பேய்க்க ணன்ன பிளிறுகடி முரச, மாக்க ணகல றை யதிர்வன முழங்க, முனைகெடச் சென்று முன்சம முருக்கி :]

230 - 231. முடி உடை கரு தலை புரட்டும் முன்தாள் உகிர் உடை அடிய - முடியையுடைய கரியதலைகளையுருட்டும் முன்காலில் உகிருடைய அடிகளையுடையவாய்,

234, 235, 228, 229, 231, 232. தூறு இவர் துறு கல் போல உழி ஞை சூடி செற்றோர் கடி அரண் தொலைத்த யானையொடு - தூறுபடர்ந்த நெருங்கின மலைகள்போல உழிஞையைச்சூடித் தம்மரசராற் போர்பெற்றா ருடைய காவலையுடைய அரண்களையழித்த யானைகளோடும்,

(கு - பு.) உழிஞை - பகைவருடைய மதிலைவளைத்தற்கு அறிகுறியாக அணியப்படுமாலை; "எயில்காத்த னொச்சி, யதுவளைத்த லாகு முழிஞை"

என்பதனாலுணர்க. புறத்திணைமாலைகளை வீரர்களுக்கேயன்றி யானை குதிரைகளுக்கும் ஆயுதங்களுக்கும் சூட்டுதல்மரபு. அரண் - கோட்டை.

229, 231. கதவு கொல் மருப்பின் ஓங்கு எழில் யானை - கதவை முறிக்கும் கொம்பினையும் உயர்ந்த அழகினையுமுடைய யானையென்க.

232. வடி மணி புரவியொடு - வடித்த மணிகட்டின குதிரைகளோடும்,

234. போர்வேட்டு - போரைவிரும்பி,

236 - 237. பேய் கண் அன்ன பிளிறு கடி முரசம் மா கண் அகல் அறை அதிர்வன முழங்க - பேயின்கண்ணையொத்த முழங்குகின்ற காவலையுடையமுரசம் பெருமையை உடைத்தாகிய இடத்தையுடைய பாசறையிலே நடுங்குவனவாய் முழங்க,

அகலறை - மலைப்பக்கமுமாம்.

(கு - பு.) பேய்க்கண், வட்டவடிவமுள்ளதாக நூல்கள் கூறும்.

238. முனை கெட சென்று - பகைப்புலங்கெடும்படி சென்று,

233, 232, 238. பெரு நல் வானத்து பருந்து உலாய் நடப்ப வயவர் வீழ முன் சமம் முருக்கி - பெரிய நல்லவானிடத்தே பருந்து உலாவித்திரியும்படியாக வீரர்படும்படி முற்பட்ட தூசியைக்கெடுத்து,

யானைகளோடும் புரவிகளோடும் போர்வேட்டு முரசுமுழங்கச்சென்று பருந்து உலாய்நடப்ப வயவர்வீழ முருக்கியென்க.

(கு - பு.) தூசி - முற்படை.

239. தலை தவ சென்று - அப்பகைவர் அரணிடத்தே மிகநடந்து,

(கு - பு.) தலை - இடம்.

239 - 242. [தண்பணை யெடுப்பி, வெண்பூக் கரும்பொடு செந்நெ னீடி, மாயிதழ்க் குவளையொடு நெய்தலு மயங்கிக், கராஅங் கலித்த கண்ணகன் பொய்கை :] வெண்பூ கரும்பொடு செந்நெல் நீடி குவளையொடு மா இதழ் நெய்தலும் மயங்கி கராம் கலித்த கண் அகல் பொய்கை தண் பணை எடுப்பி - வெள்ளிய பூக்களையுடைய கரும்புகளுடனே செந்நெல்லும்வளர்ந்து குவளையோடே பெருமையையுடைய இதழ்களையுடைய நெய்தலுமயங்கப்பட்டு முதலைகள் செருக்கித் திரிந்த இடமகன்ற பொய்கைகளையுடைய தண்ணியமருதநிலத்துள்ள குடிகளையோட்டி,

243 - 244. [கொழுங்காற் புதவமொடு செருந்தி நீடிச், செறுவும் வாவியு மயங்கி நீரற்று :] செறுவும் வாவியும் நீரற்று மயங்கி வேறு பல் பூளை (உழிஞை) யொடு கொழு கால் புதவமொடு செருந்தி நீடி - செய்களும் வாவிகளும் நீரற்றுத் தம்மில் ஒன்றாய் இருவகைப்பட்ட பலவாகிய பூளைகளோடே கொழுவிய தண்டுகளையுடைய அறுகோடே கோரைகளும் வளரப்பட்டு,

வேறுபல்பூளை, இங்கேகூட்டிற்று. சிறுபூளையும் பெரும்பூளையுமுண்மையின், 'வேறுபல்பூளை' என்றார்.

(கு - பு.) செய் - வயல்.

245. அறு கோடு இரலையொடு மான்பிணை உகளவும் - அறல்பட்ட கொம்பினையுடைய புல்வாய்க்கலையோடு மான்பிணை துள்ளிவிளையாடும்படியாகவும்,

(கு - பு.) புல்வாய் - ஒருவகைமான். கலை - ஆண்மான்.

தலைதவச்சென்று தண்பணையெடுப்பி (உ௩௧) நீடி (உ௪0) உகளவு (உ௪௫) மென்க.

246 - 249. [கொண்டி மகளி ருண்டுறை மூழ்கி, யந்தி மாட்டிய நந்தா விளக்கின், மலரணி மெழுக்க மேறிப் பலர்தொழ, வம்பலர் சேக்குங் கந்துடைப் பொதியில்:]

கொண்டி மகளிர் உண் துறை மூழ்கி மெழுக்கம் அந்தி மாட்டிய நந்தா விளக்கின் மலரணி கந்து உடை பொதியில் - பகைவர்மனையோராய்ப் பிடித்துவந்த மகளிர்பலரும் நீருண்ணுந்துறையிலே சென்றுமுழுகி மெழுகுமெழுக்கத்தினையும் அவர்கள் அந்திக்காலத்தேகொளுத்தின அவியாத விளக்கினையுமுடைய பூக்களைச்சூட்டின தறியினையுடைய அம்பலம்,

கந்து - தெய்வம் உறையுந் தறி.

பொதியிலைமெழுகி விளக்குமிட்டிருக்க பகைவர்மகளிரைவைத்தார், அதனால் தமக்குப் புகழுளதாமென்றுகருதி.

(கு - பு.) 'மெழுகும்' என்பது வருவிக்கப்பட்டது. கொண்டி - கொள்ளுதல். தறி - தூண். அம்பலம் - பொதுவிடம்.

249, 248, 249. வம்பலர் பலர் ஏறி தொழ சேக்கும் பொதியில் - புதியவர்கள் பலருமேறித் தொழுதற்குத்தங்கும் பொதியில்,

250 - 251. பரு நிலை நெடுதூண் ஒல்க தீண்டி பெரு நல் யானையொடு பிடி புணர்ந்து உறையவும் - அத்தெய்வமுறையும் அம்பலத்தினின்ற பருத்த நிலைமையினையுடைய நெடியதூண் சாயும்படி தம்முடம்புரிஞ்சிப் பெரிய நல்ல களிறுகளுடனே பிடிகள் கூடித்தங்கும்படியாகவும்,

(கு - பு.) களிறு - ஆண்யானை.

252 - 255. [அருவிலை நறும்பூத் தூஉய்த் தெருவின், முதுவாய்க் கோடியர் முழவொடு புணர்ந்த, திரிபுரி நரம்பின் தீந்தொடை யோர்க்கும், பெருவிழாக் கழிந்த பேஎமுதிர் மன்றத்து :] தெருவில் அருவிலை நறு பூ தூஉய் முதுவாய் கோடியர் முழவொடு புணர்ந்த திரி புரி நரம்பின் தீ தொடை ஓர்க்கும் பெரு விழா கழிந்த பேஎம் முதிர் மன்றத்து - ஆண்டுள்ள தெருவின்கண்ணே விலைகூறுதற்கரிய நறியபூக்களைச்சிதறி அறிவுவாய்த்தலையுடைய கூத்தருடைய மத்தளத்தில் தாளத்தோடேகூடின முறுக்குதல் புரிந்த நரம்பின் இனிதாகிய கட்டினையுடைய யாழைக்கேட்கும் பெரிய திருநாளின்றுகிய அச்சமுதிர்ந்த மன்றத்திடத்தே,

தூஉய் ஓர்க்குமென்க. தொடை, ஆகுபெயர்.

(கு - பு.) தொடை - கட்டு; யாழிசைக்கானமையின், ஆகுபெயர்.

256 - 257. * [சிறுபூ நெருஞ்சியோ டறுகை பம்பி, யழல்வா யோரி யஞ்சுவரக் கதிப்பவும் :]

(கு - பு.) சிறு பூ நெருஞ்சியோடு - சிறிய பூக்களையுடைய நெருஞ்சிக ளோடு, அறுகை பம்பி - அறுகம்புற்கள் பரவப்பெற்று, அழல் வாய் ஓரி - கொடிய வாயையுடைய நரிகள், அஞ்சு வர கதிர்ப்பவும் - பிறர்க்கு அச்சம் தோன்ற மிக்குமுழங்கவும்.

258. அழு குரல் கூகையோடு ஆண்டலை விளிப்பவும் - இசைக்கு வருந்திக்கூப்பிடுகின்ற குரலையுடைய கூகைகளுடனேகூடி ஆண்டலைப்புள் கூப்பிடும்படியாகவும்,

(கு - பு.) கூகை - கோட்டான், ஆண்டலைப்புள் - ஆண்மக்களுடைய தலைகளைப்போன்ற வடிவமுடைய ஒருவகைப்பறவை.

259 - 260. கணம் கொள் கூளியொடு கதுப்பு இருத்து அசைஇ பிணம் தின் யாக்கை பேய்மகள் துவன்றவும் - திரட்சிகொண்ட ஆண்பேய்க ளுடனே மயிரைத்தாழ்த்து இளைத்துப் பிணத்தைத்தின்னும் வடிவையுடைய பேய்மகள் நெருங்கும்படியாகவும்,

261. கொடு கால் - வளைந்த கால்களையுடைய, பேய்மகள் (உசுப) என முன்னேகூட்டுக.

262, 261, 262. விருந்து மாடத்து நெடு கடை துவன்றி உண்டு ஆறு பெரு சோறு அட்டில் - விருந்தினர் மாடத்திடத்து நெடிய தலைவாசலிலே முற்படநெருங்கியிருந்து பின்பு உள்ளேசென்று உண்டு மிக்குக்கிடக்கின்ற பெரியசோற்றையுடைய அடுக்களை,

(கு - பு.) விருந்தினர் - புதியராய்வந்தவர். அடுக்களை - மடைப் பள்ளி.

263 - 264. ஒண் சுவர் நல் இல் உயர் திணை இருந்து பைங்கிளி மிழற்றும் பால் ஆர் செழு நகர் - சாந்திட்ட சுவர்களையுடைய நன்றாகிய அகங்களின் உயர்ந்ததிண்ணைகளிலேயிருந்து பசியகிளி வார்த்தைசொல்லு தற்குக் காரணமாகிய பால்நிறைந்த வளவியவூர்,

திண்ணை, விகாரம். இனி உயர்திணை, உயர்ந்த மேனிலமென்றுமாம்.

(கு - பு.) அகம் - வீடு. 'திண்ணை' என்பது, 'திணை' என்று ஆன மையின், விகாரம் ; இடைக்குறை.

265 - 267. [தொடுதோ லடியர் துடிபடக் குழீஇக், கொடுவி லெயி னர் கொள்ளை யுண்ட, வுணவில் வறுங்கூட் டுள்ளகத் திருந்து :] கொடு வில் எயினர் தொடுதோல் அடியர் துடி பட குழீஇ கொள்ளை உண்ட உணவு இல் வறு கூடு உள்ளகத்து இருந்து - கொடிய வில்லினையுடைய வேடர் செருப் புத்தொட்ட அடியினையுடையராய்த் துடியொலிப்பத் திரண்டு கொள்ளை

* இதற்குப் பழைய உரை கிடைக்கவில்லை.

யாகக் கொண்டுவிண்ட நெல் பின் இல்லையான வறுவிய கூட்டினுடைய உள்ளாகிய இடத்தேயிருந்து,

(கு - பு.) துடி - உடுக்கை. கூடு - தானியச்சேர்.

268. வளை வாய் கூகை நன்பகல் குழறவும் - வளைந்த வாயினையுடைய கூகை அடியொத்தகாலத்தே கூப்பிடும்படியாகவும்,

செழுநகர் (உசு௪) அட்டிலிடத்துக் (உசு௫) கூட்டினுள்ளேயிருந்து (உசு௭) கூகை குழறவு (உசு௮) மென்க.

269 - 270. [அருங்கடி வரைப்பி னூர்கவி னழியப், பெரும்பாழ் செய்து மமையான் மருங்கற:] அரு கடி வரைப்பின் ஊர் கவின் அழிய மருங்கு அற பெரு பாழ் செய்தும் அமையான் - அரிய காவலையுடைய மதிலையுடைய பகைவர்படைவீடுகள் அழகழிய அவர்கள்குலமின்றாகப் பெரிய பாழாகப்பண்ணியதனாலும் செற்றம் ஆறானாய்,

(கு - பு.) செற்றம் - தணியாக்கோபம்.

பெற்றவை மகிழ்தல்செய்யானாய் (௨௨௮), மேலும் ஆசைமிக்கு யானைகளோடும் (உ௩௧) புரவிகளோடும் (உ௩௨) போர்வேட்டு (உ௩௪) முரச (உ௩௬) முழங்கச் (உ௩௭) சென்று முன்சமமுருக்கித் (உ௩௮) தலைதவச்சென்று எடுப்பி (உ௩௯) உகளவும் (உ௪௫) உறையவும் (உ௫௧) கதிர்ப்பவும் (உ௫௭) விளிப்பவும் (உ௫௮) குழறவும் (உசு௮) துவன்றவும் (உசு௦) பாழ்செய்தும் (௨௭௦) ஊர்கவினழியப் (உசு௯) பாழ்செய்தும் அமையானு (௨௭௦) யென வினைமுடிக்க.

பாழ்செய்தல் இரண்டிடத்தும் கூட்டுக.

271 - 272. மலை அகழ்க்குவனே கடல் தூர்க்குவனே வான் வீழ்க்குவனே வளி மாற்றுவன் என - இவன் தெய்வத்தன்மையுடையனாதலின் இம்மலைகளையெல்லாம் அகழ்தலைச்செய்வன்; கடல்களையெல்லாம தூர்த்தலைச்செய்வன்; தேவருலகைக் கீழ்வீழ்த்தலைச்செய்வன்; காற்றை இயங்காமல் விலக்குவனென்று உலகத்தார் மேற்கூறும்படியாக, துறைபோகலின் (௨௭௩) என்க.

பெரும்பாழ்செய்தும் அமையானாய், இங்ஙனம் பாழ்செய்தவன் மேல் இவையுஞ்செய்வனென்று கூறும்படியாகத் துறைபோனானென்றவாறு.

(கு - பு.) அகழ்தல் - தோண்டுதல்.

273. தான் முன்னிய துறை போகலின் - தான் கருதிய போர்த்துறைகளெல்லாம் பொருதுமுடித்தானாகலின்,

274. பல் ஒளியர் பணிபு ஒடுங்க - பலராகிய ஒளிநாட்டார் தாழ்ந்து தம் வீரம் குறைய,

ஒளியராவார் மற்றை மண்டலத்திற்கு அரசராதற்குரியவேளாளர்.

275. தொல் அருவாளர் தொழில் கேட்ப - பழைய அருவாளநாட்டிலரசரும் தாங்கள் செய்யுந்தொழிலை வந்துகேட்ப,

(கு - பு.) அருவாளநாடு - கொடுந்தமிழ் நாடுகளுள் ஒன்று.

276. வடவர் வாட - அதற்கு வடக்குநாட்டிலுள்ள அரசர் குறைய,

(கு - பு.) அதற்கு வடக்குள்ளநாடு - அருவாள் வடதலை.

276. குடவர் கூம்ப - குடநாட்டிலுள்ளார் மனவெழுச்சி குறைய,

277 - 291. [தென்னவன் றிறல்கெடச் சீறி மன்னர், மன்னெயில் கதுவு மதனுடை நோன்றாண், மாத்தானை மறமொய்ம்பிற், செங்கண்ணாற் செயிர்த்துநோக்கிப், புன்பொதுவர் வழிபொன்ற, விருங்கோவேண் மருங்குசாயக், காடுகொன்று நாடாக்கிக், குளந்தொட்டு வளம்பெருக்கிப், பிறங்குநிலை மாடத் துறந்தை போக்கிக், கோயிலொடு குடிநிறீஇ, வாயிலொடு புழையமைத்து, ஞாயிறொறும் புதைநிறீஇப், பொருவேமெனப் பெயர் கொடுத், தொருவேமெனப் புறக்கொடாது, திருநிலைஇய பெருமன்னெயில் ;]

281. புன் பொதுவர் வழி பொன்ற - புல்லிய இடையராய் அரசாள்வோர் கிளைமுழுதுங் கெட்டுப்போக,

(கு - பு.) கழுவுளென்னும் அரசனொருவன் இடையர்களுக்குத் தலைவனாக இருந்தானென்றும், அவனைத் தகடூரெறிந்த பெருஞ்சேரலிரும்பொறையென்னும் சேரராசன் வென்றானென்றும் தெரிகின்றது ; "ஆன்பயம் வாழ்நர் கழுவு டலைமயங்க", "பொருமுர ணெய்திய கழுவுள் புறம்பெற்று" என்பவற்றாலும் இவற்றின் உரையாலுமுணர்க ; (பதிற். எக, அஅ).

282. இருங்கோவேள் மருங்கு சாய - ஐம்பெருவேளிர் குலமுழுதுங் குறைய,

(கு - பு.) வேளிர் - குறுநிலமன்னர் ; ஐம்பெருவேளிராவார் ; திதியன், எழுனி, எருமையூரன், இருங்கோவேண்மான், பொருநனென்பார் ; "சினங்கெழுதிதியன், போர்வே லியானைப் பொலம்பூ ணெழினி, நாரரி நறவி னெருமை யூரன், றேங்கம ழகலத்துப் புலர்ந்த சாந்தி, னிருங்கோ வேண்மா னியறேர்ப் பொருநன்" என்னும் அகப்பாட்டானுணர்க ; ௩௬.

283. காடு கொன்று - சோழமண்டலத்திற் காடாகிய இடங்களை வெட்டிப்போகட்டு,

283. நாடு ஆக்கி - பண்டுபோலக் குடியிருந்து விளையப்பண்ணி,

284. குளம் தொட்டு - தூர்ந்தகுளங்களைக் கல்லி,

284. வளம் பெருக்கி - நாட்டிற்குச் செல்வத்தைமிகுத்து,

285. பிறங்கு நிலை மாடத்து உறந்தைபோக்கி - பெரிய நிலைகளையுடைய மாடங்களையுடைய உறந்தையென்னுந் தன்னூரைப்போக்கி,

(கு - பு.) உறந்தை - உறையூர். போக்கி - விரிவுறச்செய்து.

286. கோயிலொடு குடி நிறீஇ - கோயில்களோடே பழையகுடிகளையும் பண்டுபோல நிலைநிறுத்தி,

291. திரு நிலைஇய பெரு மன் எயில் - திருமகணிலைபெற்ற பெரிய அக்கத்தையுடைய உறந்தையின் மதிலிடத்தே,

287. வாயிலொடு புழை அமைத்து - பெரிய வாசல்களோடே சிறிய வாசல்களையுமுண்டாக்கி,

288. ஞாயில் தொறும் புதை நிறீஇ - அதன்றலையில் எய்துமறையும் சூட்டுத்தோறும் அம்புக்கட்டுக்களையும் கட்டிவைத்து,

290, 289, 277, 278 - 280, 277. ஒருவேம் எனப் புறக்கொடாது பொருவேமெனப் பெயர்கொடுத்து மன்னர் மன் எயில் கதுவும் மதன் உடை நோன் தாள் மாத் தானை மற மொய்ம்பின் தென்னவன் திறல்கெடச் செங்கண்ணாற் செயிர்த்து நோக்கிச் சீறி - யாம் தமியேமென்றுகருதிப் பல வரசர்கள்வந்தால் முதுகிடாது அவர்களுடனும் பொரக்கடவேமென வஞ்சினத்தைச்சொல்லி அரசருடைய பெரிய அரண்களைக் கோபித்தழிக்கும் செருக்கினையுடைய வலிய முயற்சியினையும் பெருமையினையுடைய நாற்படையினையும் மறத்தையுடைத்தாகிய வலியினையுமுடைய பாண்டியனது வலிகெடும்படி தன் செய்யகண்ணாலே குற்றத்தைச்செய்துபார்த்துக் கோபித்து, பெற்றவைமகிழ்தல் செய்யான் (உஉஅ) என முன்னேகூட்டுக.

"கொடியனெம் மிறையெனக் கண்ணீர் பரப்பிக், குடிபழி தூற்றுங் கோலே னாகுக" * என்றுகூறும் வஞ்சினத்தாற் றனக்கு ஓர் பெயர்பெறுதலின் வஞ்சினத்தைப் பெயரென்றார்.

(கு - பு.) வஞ்சினம் - சபதம்.

292 - 294. [மினறொளி யெறிப்பத் தம்மொளி மழுங்கி, விசிபிணி முழவின் வேந்தர் சூடிய, பசுமணி பொருத பரேரெ றழ்க் கழற்கால்:]

293, 292, 293, 294. விசி பிணி முழவின் வேந்தர் தம் ஒளி மழுங்கி மின் ஒளி எறிப்பச் சூடிய கழல் கால் - இறுகவலித்த வார்க்கட்டினையுடைய முரசுகளையுடைய வழிபாடில்லாத வேந்தர் தம்மரசிழத்தலிற் றமக்கு முன்புள்ள விளக்கங்கெட்டுப் பின்பு அவ்விளங்குகின்ற விளக்கம் தோன்றும்படியாகத் தம் முடிமேலேசூடின வீரக்கழலையுடைய காலினையும்,

(கு - பு.) வலித்த - கட்டின.

294. பசுமணி பொருத பரேர் எறுழ்க் கழல் - ... மணிகளோடே மாறுபட்ட பெரிய அழகிய வலியினையுடைய சுழலென்க.

295 - 297. பொற்றொடி புதல்வர் ஓடி ஆடவும் முற்றிழை மகளிர் ..................திளைப்பவும் செஞ்சாந்து சிதைந்த மார்பின் - பொன்னாற் செய்த தொடியினையுடைய பிள்ளைகள் ஓடிவந்து ஏறி விளையாடுகையினாலும் மெய்ம்முழுதுமணிந்த அணிகலங்களையுடைய மகளிர்......................
......................சேர்தலாலும் சிவந்தசந்தனமழிந்த மார்பினையும்,

297. ஒண்பூண் - ஒள்ளிய பேரணிகலங்களையும்,

298. அரிமா அன்ன அணங்கு உடை துப்பின் - சிங்கவேற்றையொத்த வருத்தத்தையுடைய வலியினையுமுடைய,

* புறநானூறு, எஉ.

299. திரு மா வளவன் - திருவின் பெருமையையுடைய கரிகாற்பெருவளத்தான்,

திண்காப்பு வாள்கழித்தேறிக் (உஉகூ) காடுகொன்று நாடாக்கிக் (உஅங) குளந்தொட்டு வளம்பெருக்கி (உஅச) உறந்தைபோக்கிக் (உஅடு) குடிநிறீஇப் (உஅகூ) பெருமன்னெயிலிலே (உகூக) வாயிலொடு புழையமைத்து (உஅஎ) ஞாயிறுறும் புதை நிறீஇ (உஅஅ) இங்ஙனம் உருகெழுதாயம் ஊழினெய்தித் (உஉஎ) தென்னவன்றிறல்கெடச்சீறி (உஎஎ) அவன் திறையாகத்தந்த அரசவுரிமைகளாற் பெற்றவையில்தான் மகிழ்தல் செய்யானாய் (உஉஅ) மேலுமாசைமிக்கு இவன் மலையகழ்க்குவன், தூர்க்குவன் (உஎக), வீழ்க்குவன், மாற்றுவனென்று உலகம் கூறும்படியாக (உஎஉ) உழிஞைசூடி (உஙடு), யானையோடும் (உஙக) புரவியோடும் (உஙஉ) சென்று முருக்கி (உஙஅ) எடுப்பிப் (உஙகூ) பெரும்பாழ்செய்தும் அமையானாய்ப் (உஎ0) பணிபொடுங்கக் (உஎச) கேட்ப (உஎடு) வாடக் கூம்பப் (உஎகூ) பொன்றச் (உஅக) சாயத் (உஅஉ) தான் முன்னியதுறைபோகையினாலே (உஎங) வழிபடா வேந்தர் (உகூங) தம்மொளிமழுங்கி மின்னொளியெறிப்பச் (உகூஉ) சூடிய (உகூங) காலினையும் (உகூச) மார்பினையும் பூணினையும் (உகூஎ) துப்பினையு (உகூஅ) முடைய கரிகாற்பெருவளத்தா (உகூகூ) னென வினைமுடிக்க.

299 - 300. தெவ்வர்க்கு ஓக்கிய வேலினும் வெய்ய கானம் - பகைவரைக்கொல்லுதற்கு அறுதியிட்டுவைத்த வேலினும், கடியவாயிருந்தனகாடு;

(கு - பு.) அறுதியிட்டு - முடிவுசெய்து.

300 - 301. அவன் கோலினும் தண்ணிய தட மென் தோளே - அவன் செங்கோலினும் குளிர்ந்திருந்தன பெரிய மெல்லிய தோள்கள்.

நெஞ்சே, (உஉ0) இவளை நேசமுடன் கொண்டு செல்வோமென்னின், கானம் அவன் (ங00) ஓக்கிய (உகூகூ) வேலினும் வெய்யவாயிராநின்றன (ங00); இவடோள் (ங0') அவன் (ங00) கோலினும் தண்ணிய (ங0க); இவளைப் பிரியாதுறைதலி ு யான்போதற்கு ஆற்றாவாயிராநின்ற; ஆதலால், பட்டினமபெறினும (உச ‍) ௳ அகிழை ஈண்டுப்பிரிந்திருப்ப (உகக) யான் நின்னுடன் [illegible]; இனி ஆண்டுப்போய் வாழ்வாயாக (உஉ0) வென வினைமுடிக்க.

'வாரேன்' என்றான் அவளை ஆற்றுவித்துப் பின்பு பிரிதல்கருதி; அது, * "செலவிடை யழுங்கல் செல்லாமை யன்றே, வன்புறை குறித்த றவிர்ச்சியாகும்" என்பதனாலுணர்க.

(கு - பு.) "செலவிடை" என்னும் சூத்திரத்திற்குப் பொருள்: செலவு இடை அழுங்கல் - தலைவன் கருதிய போக்கினை இடையிலே தவிர்ந்திருத்தல், செல்லாமை அன்று - பிரிந்துபோதலாற்றாமைக்கன்று; வன்புறை குறித்தல் தவிர்ச்சி ஆகும - தலைவியை ஆற்றுவித்துப்பிரிதற்குத்தவிர்ந்த தவிர்ச்சியாகும். எ - று.

* தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல், சுச.

சோழன் கரிகாற்பெருவளத்தானைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடிய பட்டினப்பாலைக்கு மதுரையாசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியர் செய்தவுரை முற்றிற்று.

—∞✻∞—

## வெண்பா.

*முச்சக் கரமு மளப்பதற்கு நீட்டியகால்*
*இச்சக் கரமே யளந்ததால் - செச்செய்*
*அரிகான்மேற் றேன்றொடுக்கு மாய்புனனீர் நாடன்*
*கரிகாலன் கானெருப் புற்று.*

(இ - பு.) *மு சக்கரமும் - மூன்று உலகங்களையும், அளப்பதற்கு நீட்டிய கால் - அளத்தற்பொருட்டு நீட்டப்பெற்ற காலானது, இ சக்கரமே அளந்தது - இந்த மண்ணுலகத்தைமட்டும் அளந்தது, செ செய் - செம்மையையுடைய வயலின்கண்ணுள்ள, அரிகால் மேல் - நெற்கதிர் அரிந்த தாளின்மேலே, தேன் தொடுக்கும் - வண்டுகள் தேனடைவைக்கப்பெற்ற, ஆய்புனல் நீர்நாடன் - அழகிய புனலையுடைய காவிரிபாயப்பெற்ற நாட்டையுடையவனுன, கரிகாலன் - கரிகாற்பெருவளத்தானது, கால் நெருப்பு உற்று - பாதம் நெருப்புத்தீண்டப்பெற்றமையின். எ - று. மூன்றுலகத்தையும் அளத்தற்குரிய பெருமைவாய்ந்த கரிகாற்பெருவளத்தானுடைய பாதமானது நெருப்புத்தீண்டப்பெற்றமையின் இப்பூவுலகத்தை மட்டும் அளந்தது; இதனுல், இவன் திருமாலைப்போல்வானென்று கூறியபடி. இளமைப்பருவத்தில் நெருப்பில்வீழ்ந்தமையின், இவனுடைய கால் கரிந்துபோயிற்றென்றும், அதனுலேதான் இவன் கரிகாலனென்று பெயர்பெற்றானென்றுங் கூறுவர்; இதனை, "சுடப்பட் டுயிருய்ந்த சோழன் மகனும், பிடர்த்தலைப் பேரானைப் பெற்றுக் - கடைக்காற், செயிராறு செங்கோல் செலீஇயினு னில்லை, யுயிருடையா ரெய்தா வினை" (கoரு) என்னும் பழமொழி வெண்பாவாலும், 'இளமைப் பருவத்துப் பிறராற்சுடப்பட்டு உயிருய்ந்துபோகிய கரிகாலனும் இரும்பிடர்த்தலையாரென்னும் பெயரையுடைய தன்மாமனைத் தனக்குத் துணையாகப்பெறுதலால், பின்னொருகாலத்தின்கண் தன்னுரிமையரசுபெற்றுக் குற்றமற்ற செங்கோலை நடாத்தினுன்; ஆதலால், உயிருடையார் எய்தாததொரு நல்வினைப்பயனில்லை' என்னும் அதனுரையாலும் உணர்க.*



# முகவுரை.



சென்னை யூனிவர்ஸிடியாரால் 1912-ஆம் வருஷத்து பி. ஏ. பட்டப்பரீக்ஷைக்குப் பாடமாக நியமிக்கப்பெற்றுள்ள மலைபடுகடாத்தையும் மதுரை ஆசிரியர் பாரத்துவாசி நச்சினார்க்கினியருரையையும் வெளிப்படுத்தத் தொடங்கி, மாணாக்கர்களுக்கு அவை விளங்கும் வண்ணம் நூதனமாகவெழுதிய குறிப்புக்களையும் உரியவிடங்களிற் சேர்த்துப் பதிப்பிக்கலானேன்.

மலைபடுகடா மென்பது, செங்கண்மாவென்னும் நகரிலிருந்த நன்னனென்னும் சிற்றரசன்மீது பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனாரென்னும் கடைச்சங்கப்புலவரால் இயற்றப்பெற்றுள்ள ஒருபாட்டு. இது கூத்தராற்றுப்படை யெனவும் வழங்கும்.

இதனால், நன்னன்வரலாறுகளும் அவனுடைய பல குணவிசேடங்களும் விளங்குவதுடன் நூலாசிரியராகிய பெருங்கௌசிகனாரது இயல்பும் அவருடைய கல்விமேம்பாடும், பண்டைக்கால இயற்கையும் நன்குவிளங்கும்.

இதன் பகுதிகள், தொல்காப்பியஉரைகள்முதலியவற்றில் உரையாசிரியர்களால் ஆங்காங்கு மேற்கோள்களாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. பலநூலாசிரியர்கள், இதிலுள்ள வாக்கியங்களையும் கருத்துக்களையும் தாமியற்றியநூல்களில் அமைத்து அழகுபடுத்தியிருக்கின்றனர்.

இதில்,படிப்பவர்களுடையமனத்தைக்கவரும் தன்மைநவிற்சியும் ஏற்ற உவமையுமேயன்றிப் பெரும்பாலும் பிறவணிகள் காணப்படா.

இதை இயற்றியவர் கடைச்சங்கப்புலவராதலின், இதன்காலம் கி. பி. முதலாவது அல்லது இரண்டாவது நூற்றாண்டாக இருத்தல் வேண்டுமென்பது சொல்லாமலே விளங்கும்.

நூலைப்பற்றிய பலவகையான ஆராய்ச்சிக்குறிப்புக்களும், இந்நூலின் பொழிப்பாகிய வசனநடையும், அரும்பதஅகராதியும் பிறவும் இப்புஸ்தகத்திற் சேர்க்கப்பெற்றுள்ளன.

இந்நூலை ஆராயுங்காலத்தும் பதிப்பிக்குங்காலத்தும் உடனிருந்து உதவிபுரிந்த மயிலாப்பூர், பி. எஸ். ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ, இ. வை. அநந்தராமையரவர்களுடைய அன்புடைமை என்றும் மறக்கற்பாலதன்று.

இப்புஸ்தகம் பதிப்பிக்கப்பெற்ற அச்சுக்கூடத்தின் சொந்தக்காரர் திடீரென்று காலஞ்சென்றுவிட்டமையாலும், வேறு பலவகையான அசௌகரியங்களாலும் நான் எண்ணியவாறு முன்னமே இதனை வெளியிடக் கூடவில்லை.

இதிற்காணப்படும் குற்றத்தை விவேகிகள் பொறுத்திடுவார்களென்று நம்புகிறேன்.

சென்னை :
9—1—12.

இங்ஙனம்,
வே. சாமிநாதையன்.

இப்புத்தகத்தில் எடுத்துக்காட்டப்பெற்றுள்ள

நூற்பெயர்முதலியவற்றின்

# முதற்குறிப்பகராதி.



அகத் - அகத்திணையியல்.
அகநா - அகநானூறு.
அருச்சுனன் - அருச்சுனன்றவநிலைச் சருக்கம்.
அன்னத்தைக்கண்ணுற்ற - அன்னத்தைக் கண்ணுற்றபடலம்.
இடைச் - இடைச்சொல்லியல்.
இலக்கணவி - இலக்கணவிளக்கம்.
உயிர் - உயிர்மயங்கியல்.
உரி, உரிச் - உரிச்சொல்லியல்.
எச், எச்ச - எச்சவியல்.
ஐங்குறு - ஐங்குறுநூறு.
கண்ணப்ப - கண்ணப்பச்சருக்கம், கண்ணப்பநாயனார்புராணம்.
கந்த - கந்தபுராணம்.
கம்ப - கம்பராமாயணம்.
கரந்தை - கரந்தைப்படலம்.
கலி - கலித்தொகை.
கார் - கார்நாற்பது.
குசேலர்மேல்கடல் - குசேலர் மேல் கடலடைந்தவத்தியாயம்.
குசேலோ - குசேலோபாக்கியானம்.
குற்றியலுகரப் - குற்றியலுகரப்புணரியல்.
குறிஞ்சி - குறிஞ்சிப்பாட்டு
குறு, குறுந் - குறுந்தொகை.
கூர்ம - கூர்மபுராணம்.
சிந்தா - சீவகசிந்தாமணி.
சில, சிலப், சிலப்பதி - சிலப்பதிகாரம்.
சிறுபா, சிறுபாணு - சிறுபாணாற்றுப்படை.
சீகாளத்திப் - சீகாளத்திப்புராணம்.
சீவக - சீவகசிந்தாமணி.
சுயம் - சுயம்வரகாண்டம், சுயம்வரச் சருக்கம்.
சூ - சூத்திரம்.
சூளா - சூளாமணி.
செய் - செய்யுளியல்.
சே - சேனாவரையருரை.
சொல் - சொல்லதிகாரம்.
தணிகை - தணிகையாற்றுப்படை.
தாடகை - தாடகைவதைப்படலம்.
திருக் - திருக்குறள்.
திருச்சிற், திருச்சிற்றம்பல - திருச்சிற்றம்பலக்கோவையார். [ப்படை.
திருமு, திருமுருகு - திருமுருகாற்று
திருவிளை - திருவிளையாடற்புராணம்.
தொல் - தொல்காப்பியம்.
ந - நச்சினார்க்கினியர், நச்சினார்க்கினியருரை.
நக்கீரச் - நக்கீரச்சருக்கம்.
நகர - நகரப்படலம்.
நள, நளவெ - நளவெண்பா.
நற் - நற்றிணை.
நாட்டு - நாட்டுச்சருக்கம்.
நாட்டுப் - நாட்டுப்படலம்.
நாடுகாண் - நாடுகாண்காதை.
நான்மணி - நான்மணிக்கடிகை.
நெடுநல் - நெடுநல்வாடை.
பட், பட்டின - பட்டினப்பாலை.
பதிற், பதிற்று - பதிற்றுப்பத்து.
பிரபுலிங்க - பிரபுலிங்கலீலை.
புள்ளி, புள்ளிமயங்- புள்ளிமயங்கியல்.
பு-வெ - புறப்பொருள்வெண்பாமாலை
புறத் - புறத்திணையியல்.
புறநா - புறநானூறு.
பெரிய - பெரியபுராணம்.
பெரும்பா, பெரும்பாணு - பெரும்பாணாற்றுப்படை.
பொது - பொதுவியல்.
பொரு - பொருளதிகாரம்.
பொரு, பொருந, பொருநரா - பொருநராற்றுப்படை.
மங்கல - மங்கலவாழ்த்துப்பாடல்.
மணி - மணிமேகலை.
மது, மதுரை - மதுரைக்காஞ்சி.
மர - மரபியல்.
மலை - மலைபடுகடாம்.
மாயையுற்பத்தி - மாயையுற்பத்திகதி.
முருகு - திருமுருகாற்றுப்படை.
முல்லை - முல்லைப்பாட்டு.
வஞ்சி - வஞ்சிப்படலம்.
வரைக்காட்சி - வரைக்காட்சிப்படலம்.
வினை - வினையியல்.
வெண்பாப்பாட் - வெண்பாப்பாட்டியல்.

# நூல்.

---

மலைபடுகடாமென்பது நக்கீரனார்முதலிய கடைச்சங்கப்புலவர்களால் இயற்றப்பட்டு அவர்களால் தொகுக்கப்பெற்ற பத்துப்பாட்டினுள் பத்தாவதாகவுள்ளது.

பத்துப்பாட்டுக்களாவன: திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் என்பன. இது,

" முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து "

என்னும் பழையவெண்பாவால் விளங்கும். இவற்றை இயற்றிய ஆசிரியர் இன்னாரென்பது முறையே ஒவ்வொருபாட்டின் உரையிறுதியில் நச்சினார்க்கினியரெழுதிய வாக்கியங்களாலும், இப்பாட்டுக்களைத் தொகுத்தோர் சங்கப்புலவரென்பது மலைபடுகடாத்தின் கசரு-ஆம் அடியின் விசேடவுரையில் அவர் எழுதிய வினாவிடைகளாகவுள்ள வாக்கியங்களாலும் விளங்கும்.

இப்பாட்டுக்கள் பத்தும், முத்தகம், குளகம், தொகைநிலை, தொடர்நிலையென்னும் நால்வகைச் செய்யுட்களுள், தொகைநிலையின் பாற்படுமென்று கூறுவாருமுளர்.

இவற்றுள்,—

முதலாவது திருமுருகாற்றுப்படை நகள - அடிகளையுடையது; முருகக்கடவுள்மீது மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் பாடியது; இதில் முருகக்கடவுளுடைய ஸ்தலங்களுட்சிறந்த திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்), திருவாவினன்குடி (பழனி), திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை யென்னும் ஆறுபடைவீடுகளும், அவற்றில் அவர் எழுந்தருளியிருக்கும் விதமும் முறையே நிரம்பப் பாராட்டிக்கூறப்படும். இது, சைவத் திருமுறைகளில் கக-ஆம் திருமுறைப் பிரபந்தவரிசையிற் சேர்க்கப்

பெற்றுள்ளது. இப்பாட்டு, புலவராற்றுப்படையென்றும் வழங்கப்பெறும்.

இரண்டாவது பொருநராற்றுப்படை உசஅ - அடிகளையுடையது; இளஞ்சேட்சென்னி புதல்வனாகிய சோழன் கரிகாற்பெருவளவனை முடத்தாமக்கண்ணியார் பாடியது; இதில் கரிகாற்பெருவளவன்கொடையும் அவன்வீரமும் அவனாண்ட சோழநாட்டின் வளமும் காவிரி நதியின் சிறப்பும் நன்றாகக் கூறப்படும்.

மூன்றாவது சிறுபாணாற்றுப்படை உசுகூ - அடிகளையுடையது; ஏறுமாநாட்டு நல்லியக்கோடனென்பவனை இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் பாடியது; இதில் நல்லியக்கோடனது வண்மையும் அவனுடைய நகரங்களாகிய எயிற்பட்டினம் வேலூர் ஆமூர் முதலியவற்றினியல்புகளும், அவற்றிலிருந்த மாந்தர்களது நற்குண நற்செய்கைகளும் தமிழ்நாட்டு மூவேந்தர்களுடைய இராசதானிகளாகிய மதுரை வஞ்சி உறையூரென்னு மூன்று நகரங்களினிலைமைகளும் பேகன் பாரி காரி ஆய் அதிகன் நள்ளி ஓரியென்னும் வள்ளல்களெழுவரும் இன்ன இன்ன கொடையாற் பெயர்பெற்றார்களென்பதும் கூறப்பட்டுள்ளன. புறநானூற்றில் கO௫ - ஆம் செய்யுள் முதலியவற்றிற் கூறப்பெற்றுள்ள பாரியென்பவனும் இங்கே கூறப்பெற்றபாரியும் ஒருவனே.

நான்காவது பெரும்பாணாற்றுப்படை ௫OO-அடிகளையுடையது; காஞ்சி நகரத்திருந்த தொண்டைமான் இளந்திரையனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியது; இதில் அவனது வண்மையும், தொண்டைநாட்டிலேயுள்ள குறிஞ்சிமுதலிய ஐந்திணைவளங்களும், அவற்றில்வாழும் மாந்தருடைய தொழில் ஊண் ஒப்புரவு முதலியனவும், காஞ்சி நகரத்தின் சிறப்பும், திருமாலின் நூற்றெட்டுத்திருப்பதிகளுள் ஒன்றாகிய திருவெஃகா வென்பதும் கூறப்பட்டுள்ளன.

ஐந்தாவது முல்லைப்பாட்டு. இது கOங - அடிகளையுடையது; பகைமேற்சென்ற தலைவன்வருமளவும் தலைவி ஆற்றியிருந்தவிடத்து அவன் வந்ததனைக்கண்டு தோழிமுதலியோராகிய வாயில்கள் தம்முட்கூறியதாகக் காவிரிப்பூம்பட்டினத்துப் பொன்வாணிகனார் மகனார் நப்பூதனார் பாடியது; இது தலைவனைப்பிரிந்து தனித்திருக்கும் தலைமகளியல்பையும் கார்காலத்தின் தன்மையையும் பாடிவீட்டிற் பகைவர் துயாத்தோடிருந்தலையும் தலைவனது சௌரியத்தையும் விளங்கக்கூறும்.

ஆறாவது மதுரைக்காஞ்சி எஅஉ - அடிகளையுடையது; தலையாலங் கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனுக்கு வீடுபேறு நிமித்தம் நிலையாமையைச் செவியறிவுறுத்தி மாங்குடிமருதனார் பாடியது; இதில் பாண்டிநாட்டின் ஐந்திணைவளங்களும், மதுரையம்பதியி னழகும், அப்பாண்டியனது வீரமுதலியனவும், சோராசனது நாளோலக்கச் சிறப்பும், அக்காலத்திருந்த பலசிற்றரசர்களுடைய பெருமையும், அருச்சுனனுக்குக் கண்ணன் உபதேசித்த பகவற்கீதையின் மேம்பாடும், இன்னும் பலவும் கூறப்பட்டுள்ளன.

ஏழாவது நெடுநல்வாடை கஅஅ - அடிகளையுடையது. பாண்டியன் நெடுஞ்செழியனை நக்கீரனார் பாடியது; இதில் ஐப்பசி கார்த்திகை மாதங்களாகிய கூதிர்க்காலத்தினியல்பும் தனித்திருந்த தலைவியது வருத்தமிகுதியும் படைவீட்டில் தலைவனிருக்கும் வண்ணமும் விளங்கக் கூறப்பட்டுள்ளன.

எட்டாவது குறிஞ்சிப்பாட்டு உசுக - அடிகளையுடையது; ஆரியவரசன் பிரகத்தனைத் தமிழறிவுறுத்தற்குக் கபிலர் பாடியது; இதில் மலைவளங்களும், இல்லறமுறைமையும், தலைவனும் தலைவியும் தம்முள் வைக்கத்தகுமன்புடைமையும், கற்பின் இன்றியமையாமையும், பல மலர்விசேடங்களும் அழகாகக் கூறப்பட்டுள்ளன; இது பெருங்குறிஞ்சியென்றும் பெயர் பெறும்.

ஒன்பதாவது பட்டினப்பாலை ௩0க - அடிகளையுடையது; சோழன் கரிகாற்பெருவளத்தானைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியது. இதிற் காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்பும், சோழநாட்டின் வளமும், காவிரிநதி பயன்படுதலும், அச்சோழனுடைய பராக்கிரமமும், அவனுடைய செங்கோலின் மேன்மையும் நிரம்ப விரித்துக் கூறப்பட்டுள்ளன. இந்நூலைக்கேட்டு அச்சோழன் கடியலூருருத்திரங்கண்ணனார்க்குப் பதினாறுலக்ஷம் பொன் பரிசளித்தானென்று கலிங்கத்துப்பரணியாற் றெரிகின்றது.

மலைபடுகடாத்தின் வரலாற்றிற்கு அங்கமாகத் திருமுருகாற்றுப்படை முதலிய கூ - பாட்டுக்களின் வாலாறுகள் இதுவரையிற் கூறப்பட்டன.

பத்தாவதாகிய மலைபடுகடாமென்பது *பல்குன்றக் கோட்டத்துச் †செங்கண்மாத்துவேள் நன்னன்சேய் நன்னன்மீது இரணிய

---

* பல்குன்றக் கோட்டமென்பது நன்னனுடையநாடு.

† செங்கண்மா - அவனுடையநகர்.

முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பாடிய ஒரு பாட்டு; ருஅரு - அடிகளையுடையது; ஆசிரியப்பாக்களுள், இது நேரிசையாசிரியப்பா; [நேரிசைஆசிரியப்பாவாவது ஈற்றயலடி முச்சீரடியாகவும், ஏனையஅடிகள் நாற்சீரடிகளாகவும் வரப்பெறுவது]. இப்பாட்டின் ருருஎ - ஆம் அடியின் முதலிலுள்ள, 'அதனால்' என்பது, செய்யுளிலக்கணத்துள் 'கூன்' என்று வழங்கப்படும்.

மலைபடுகடாமென்னும்பெயர்க்காரணம்: இப்பாட்டின் ருசஅ ம் அடியில் மலைக்கு யானையை உவமித்து அதனிடத்தே பிறந்த பல வகையான (உகூஉ - ம் அடி முதலியவற்றைப்பார்க்க) ஓசையைக் கடாம் (மதம்) எனச் சிறப்பித்துப் பாராட்டியிருத்தலால், இப்பாட்டு 'மலைபடுகடாம்' எனப் பெயர்பெற்றதென்பர். இதனை, இப்புத்தகத்தின் கூக - ம் பக்கத்துள்ள உரையாசிரியர் வாக்கியங்களாலறிக. இப்படியே, பதிற்றுப்பத்திலுள்ள பாட்டுக்களெல்லாம் தம்பாலுள்ள தொடர்மொழிகளின் பொருட்சிறப்பால் அத்தொடர்மொழிகளையே தம்பெயர்களாகக்கொண்டு விளங்குதல் இங்கே அறிதற்பாலது.

உதாரணம்: பதிற்றுப்பத்தில், 11 - வது செய்யுளின்பெயர், புண்ணுமிழ்குருதி; 90 - வது செய்யுளின்பெயர் வலிகெழுதடக்கை.

கூத்தராற்றுப்படையென்னும் பெயர்க்காரணம்: ஆற்றுப்படையென்பது, ஒருவர் ஒரு கொடையாளியின்பால் தாம்பெற்ற பெருஞ்செல்வத்தை எதிர்வந்த வறியோர்க்கு அறிவுறுத்தி அவரும் அங்கே சென்று தாம் பெற்றவையெல்லாம் பெறுமாறு வழிப்படுத்தல்; ஆறு-வழி, படை - படுத்தல். ஒவ்வொருவரும் இங்ஙனம் கூறுதற்கு உரியோராயினும், கூத்தர்முதலியோரே எதிர்வந்த கூத்தர் முதலியவர்களுக்குக்கூறி அவர்களை வழிப்படுத்தியதாகச் செய்யுள்செய்தல் மரபு. தொல்காப்பியப் புறத்திணையியலில், ருகூ-ம் சூத்திரத்திலுள்ள, "கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும், ஆற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப், பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச், சென்று பயனெதிரச் சொன்னபக்கமும்" என்பது இதற்குவிதி; 'ஆடன் மாந்தரும் பாடற் பாணரும், கருவிப் பொருநரும் இவருட்பெண்பாலாராகிய விறலியருமென்னும் நாற்பாலாரும் தாம்பெற்ற பெருஞ்செல்வத்தை எதிர்வந்த வறியோர்க்கு அறிவுறுத்தி அவரும் ஆண்டுச் சென்று தாம் பெற்றவையெல்லாம் பெறுமாறு கூறிய கூறுபாடும்' என்பது இதன்பொருள். இங்ஙனம் இயற்றப்பெற்றவைகள்: கூத்தராற்றுப்படை, பாணராற்றுப்படை, பொருநராற்றுப்படை, புலவராற்

றுப்படை, விறலியாற்றுப்படை என ஒவ்வொருவகையிலும் பலபல உள்ளன. பத்துப்பாட்டிலன்றி, புறநானூறு முதலியவற்றிலும் பிற் காலத்து நூல்களாகிய கலம்பகங்களிலும் இவ்வாற்றுப்படைச் செய் யுட்கள் காணப்படுகின்றன. இவை, தனிச்செய்யுளாக ஆக்கப்படும். புறப்பொருள் வெண்பாமாலையில் பாடாண்படலத்தில் வந்துள்ள

[வெண்பா.]

"கொலைவிற் புருவத்துக் கொம்பன்னார் கூத்தின்
றலைவ தவிராது சேறி—சிலைகுலாங்
காரினை வென்ற கவிகையான் கைவளம்
வாரினை கொண்டு வரற்கு".

என்னும் கூத்தராற்றுப்படைச் செய்யுள் முதலியவற்றாலும் இஃது அறியலாகும். கூத்தராற்றுப்படைக்கு இந்நூலையே உதாரணமாக எடுத்துக்காட்டினர் நச்சினார்க்கினியர்; [தொல். பொரு. பக். 212.]

நன்னனென்னும் தலைவன்பாற்சென்று பரிசில்பெற்றுவரும் கூத் தனொருவன் தான்பெற்ற பெருஞ்செல்வத்தை எதிரேவரும் வறியவ னாகிய கூத்தனுக்கு அறிவுறுத்தி, "நீயும் அவன்பாற்சென்று பெருஞ் செல்வம் பெற்று வாழ்வாயாக" என்று வழிப்படுத்தியதாக நன்ன னுடைய பலவகைப்பெருமைகளும் புலப்படும்படி செய்யப்பெற்றிரு த்தலின், இது கூத்தராற்றுப்படையென்று பெயர்பெற்றது. இலக் கணவிளக்கச் செய்யுளியலுரையில் இப்பாட்டுக் கூத்தராற்றுப்படை யென்று வழங்கப்பெற்றுள்ளது.

இப்பாட்டினுள், வந்த கூத்தனைநோக்கி, 'கண்ணுளரொக்கற் றலைவ, சுற்றமும் நீயும் நன்னன்பாற் சேறிராயின், நாடுபடர்மின்; விரி ந்த விடியல் கழிமின்; மாமறையாக்கழிமின்; ஒருவிரொருவி ரோம் பினிர் கழிமின்; செந்நெறிக்கொண்மின்; குறுகாதுகழிமின்; மென் மெலஅகன்மின்; மலைபிறபடக் கழிமின்; கோல்கொண்டு ஊன்றி னிர்கழிமின்; கைபிணிவிடாது கழிமின்; மருப்பிகுத்துத் துனை மின்; அஞ்சாது கழிமின்; சேர்ந்தனிர்கழிமின்; வியங்கொண்மின்; ஆடிக்கொண்டனிர் கழிமின்; புள்ளோர்த்துக்கழிமின்; மருதம்பண் ணிக் கழிமின்; ஒருகரைக்கொண்டனிர் கழிமின்; அயிராது புகு மின்' எனவந்த ஒருகூத்தன் கூறியதாக அமைந்திருப்பதும் கூத்த ராற்றுப்படையென்னும் பெயர்ப்பொருளை வலியுறுத்தும்.

இதனால், நன்னனென்னும் சிற்றரசனுடைய நாட்டுவளங்களும் நாட்டிலுள்ள குடிகளின் இயல்புகளும் அவனுடைய செங்கண்மா

வென்னும் நகரத்தின்சிறப்பும் அவனுடைய அருமையான குணவிசேடங்களும் நவிரமென்னுமலையிலுள்ள காரியுண்டிக்கடவுளென்று திருநாமம்பெற்ற சிவபெருமானது திருக்கோயிலை அவன் பரிபாலித்ததும் பண்டைக்காலத்து நடையுடைமுதலியனவும் பிறவும் நன்கு வெளியாகும்.

இதில், 'கலப்பையிராய் இருந்த கண்ணுளரொக்கற்றலைவ' எனப் பன்மையும் ஒருமையும் விரவியிருத்தல் வழுவெனின், ஆற்றுப்படைச்செய்யுளில் இங்ஙனம் வருதல் இயல்பென ஆன்றோர் அமைத்திருத்தலால், வழுவன்றென்க; இப்புத்தகத்தின் உரு - ம் பக்கத்தாலும் இது விளங்கும்.

இப்பாட்டினுள், முதலாவது அடிமுதலியவற்றில், நன்னன்பாற் பரிசுபெற்றுக் களிப்புற்றுவரும் கூத்தன், வறுமையால் வாட்டமடைந்து சுற்றத்துடன் கவலையுற்று வழியிலிருந்த கூத்தர் தலைவனை விளித்ததும் ருக - ஆம் அடிமுதலியவற்றில் நீ நன்னன்பாற் செல்வாயாயின், வறுமைநீங்கி வாழ்வையென்று நன்னனுடைய அருமைக் குணங்கள் முதலியவற்றையும் அவனுடைய நகரத்திற்குச்செல்லும் வழியின் இயல்புகளையும் தொகுத்துக்கூறலும் கூரு-ஆம் அடிமுதலியவற்றில், முன்தொகுத்துக் கூறியவற்றை விரித்துக்கூறலும் அமைந்துள்ளன.

இந்நூலின் இறுதியடி, "குன்றுசூழ் கிடக்கை நாடுகிழவோனே" என வந்திருப்பதுபோலத் திருமுருகாற்றுப்படையின் இறுதியடி, "பழமுதிர் சோலை மலைகிழவோனே" எனவும், பொருநராற்றுப்படையின் இறுதியடி, "காவிரி புரக்கு நாடுகிழவோனே" எனவும், பெரும்பாணாற்றுப்படையினிறுதியடி, "ஒளிறிலங் கருவிய மலைகிழவோனே" எனவும், திருத்தணிகையாற்றுப்படையின் இறுதியடி, "நிலைபெறு தணிகை மலைகிழவோனே" எனவும் வந்திருத்தலை உற்றுநோக்குகையில், ஆற்றுப்படைச்செய்யுள், "கிழவோனே" என முடியவேண்டுமென்று பண்டைக்காலத்தார் எண்ணியிருந்தார்களென்று நினைத்தற்கு இடமுண்டாகின்றது.

---

# நூலாராய்ச்சி.



இந்நூலில்வந்துள்ள

## (க).—அரும்பதங்கள்.

*இருத்தல். எத்தம். புழுகு.
இருப்பம். கவர்தல் (அழைத்தல்). மருளிபாயாது.
இருயினிர். நிழத்தல். வருடை (எண்கால்வருடை).
உயவை. நுவறிய.

## (உ).—வடமொழிகள்.

ஆணி. கோவலர். பலம். வாதி.
கலவம். திசை. மணி.

## (ங).—ஒருபொருட்பன்மொழிகள்.

அலகைத்தவிர்த்த எண்ணருந்திறத்த. எண்ணுமிகப்பல. பீலியணித்தழை.
தெரிந்துணரும். மீமிசை.
உயர்ந்தோங்கு. நிவந்தோங்கு.

## (ச).—உயிரளபெடைகள்.

அசைஇ. காஅய். துழைஇ. மலைபடுகடாஅம்.
அளைஇ. குரூஉ. தூஉய். மேஎய்.
ஆஅல். குழீஇய. தெரூஅ. வயாஅம்.
இடூஉம். கெழீஇ. தேஎத்து. வழாஅது.
இரீஇ. கைதொழூஉ. தேஎம். வழாஅல்.
இருஅ. கைபுடையூஉ. தொலைஇ. வழீஇ.
இருஅல். கொளீஇ. படர்ந்தாஅங்கு. வழூஉம்.
உணீஇய. சேஎய். பரூஉ. விடாஅன்.
உரீஇ. தரீஇ. புறந்தரூஉம். விரைஇ.
ஊஉன். தரூஉம். பெருஅ வெரீஇ.
ஒரீஇ. தலைஇய. பொரூஉம். வெரீஇய.
கடாஅம். தழீஇய. மகாஅர். வெரூஉம்.
கவைஇய. தாஅய். மாஅ.
கழீஇய. துதைஇ. மாஅத்த.

---

* இதற்கும் பின்னுள்ளவற்றிற்குமுரிய அடிஎண்களை இப்புத்தகத்தின் பின்னுள்ள அரும்பதஅகராதியால் அறிந்துகொள்க.

## (௫).—ஒற்றளபெடைகள்.

கண்ண்டண்ணென. மரங்ங்.

## (௬).—இடைச்சொற்கள்.

அன்ன. இன். கல்லென. போல.
ஆங்கு. உளி. ஞெரேரென. மருள.
இகும். கடுக்கும். தண்ணென. மன்ற.
இம்மென. கடுப்ப. தில்ல. மார்.

## (௭).—தெய்வவகைகள்.

காரியுண்டிக்கடவுள். தெய்வப்பெண்கள். யமன்.
சூரியன். பேய். வீரக்கற்கடவுள்.

## (௮)—சாதிகள்.

இடையர். குயவர். கூத்தர்.
உழவர் (களமர்). குறவர் (வேடர்). யானைப்பாகர்.

## (௯).—விலங்குவகைகள்.

ஆட்டுக்கிடாய். காட்டுப்பசு. பன்றி.
இடபம் (எருது). காட்டெருமை. புலி.
உடும்பு. கீரிப்பிள்ளை. முசுக்கலை.
எண்கால்வருடை. குதிரை. முள்ளம்பன்றி.
எருமைக்கடா. குரங்கு. யானை.
கரடி. செம்மறியாடு. வேங்கை.
கலைமான். பசு.

## (௧௦).—நீர்வாழ்வன.

முதலை. வரால். வாளை.

## (௧௧).—பறவைகள்.

காட்டுக்கோழி. கோழி. பருந்து. பேராந்தை.

## (௧௨).—பண்வகை.

இளி. குறிஞ்சிப்பண். துக்கத்தைப்போக்கும்பாட்டு. வள்ளைப்பாட்டு.

## (௧௩).—வாத்தியங்கள்.

உடுக்கை. கொம்பு. புல்லாங்குழல்.
ஒருகண்மாக்கிணை. சல்லி (சல்லிகை.) பெருவங்கியம்.
காடிகைப்பறை (தட்டை.) சிறுபறை (ஆகுளி). பேரியாழ்.
சீறியாழ். முழவு.
குறுந்தூம்பு. தாளம் (பாண்டில்).

(கச).—கூத்து.

குரவைக்கூத்து. வெறியாட்டு.

(கரு).—இடவகை.

ஊர்.
கல்லையிடித்துண்டாக்கினவழி.
கவர்த்தவழி.
காடு.
காவற்காடு.
குறுங்காடு.
சிற்றூர்.
சிறுகாடு.
தோட்டம்.
நல்லவழி.
நியமம் (கடைத்தெரு).
நீர்த்துறை.
நெற்களம்.
பணைநாடு.
புகார் (காவிரி கடலொடு கலக்குமிடம்).
போர்க்களம்.
விளைநிலம். [முதலியன.
வீடு, குடிசை, அரண்மனை
வெறியாடுகளம்.

(கசா).—நீர்நிலை.

அருவி. கயம். சுனை. மடு.

(கஎ).—மரம், செடி, கொடி, கிழங்கு முதலியன.

அசோகு.
அவரை.
ஆல்.
இஞ்சி.
ஈரப்பலா.
உயவைக்கொடி.
எள்.
ஐவனநெல்.
கடிமரம்.
கண்பு (கோரை.)
கருப்பூரமரம்.
கரும்பு.
கவலைக்கொடி.
களாச்செடி.
குறிஞ்சிமரம்.
கூவைக்கிழங்கு.
கொறுக்காந்தட்டை.
சந்தனமரம்.
சுரபுன்னை.
சேம்பு.
தினை.
தேமாமரம்.
பலா.
புளி.
பெருமூங்கில்.
மரல்.
மிளகு.
மூங்கில்.
வாழை.
வெண்சிறுகடுகு.

(கஅ).—பூக்கள்.

கருநெய்தற்பூ.
காட்டுமல்லிகைப்பூ.
குவளைப்பூ.
செங்காந்தட்பூ.
வெண்காந்தட்பூ.

(கசூ).—மாலைவகை.

கண்ணி. கோதை. தார்.

(உ0).—பாத்திரங்கள்.

கடகப்பெட்டி. மிடா. மூங்கிற்குழாய்.

(உக).—வாகனங்கள்.

குதிரை. தேர். யானை.

## (உஉ).—கருவிகள்.

அம்பு. அரிவாள். கல்யந்திரம். சக்கரம். வில்.
அரம். கத்தி. கவண்கல். தூண்டில். வேல்.

## (உங).—பயிர்த்தொழிலுக்குரியவை.

உழாதுவித்துதல்.
உழுதல்.
ஏர்.
கரும்பாலை [யோட்டல்.
கவண்கல்லால் யானையை
களக்கொடை.
களைக்கொட்டு.
கிளிகடிதல்.
துடுப்பு.
நெல்லறுத்தல்.
நெற்களம்.
பரண்.
பாத்தி.
வயல்.

## (உச).—கைத்தொழிற்சம்பந்தமானவை.

அரம்.
அருங்கலம்.
ஆட்டுத்தோற்படுக்கை.
ஆடை.
ஆணி.
ஆபரணம்.
கண்ணேணி.
காமரம்.
குயவன்சக்கரம்.
குரம்பை (சிறுகுடில்.)
கொடி (துவசம்.)
தொடி (கையணி.)
நூலிழை.
பரண்.
பன்னியபஞ்சு.
யானைமுகபடாம்.

## (உரு).—பலவகைத்தொழில்கள்.

அவலிடித்தல்.
தினை, நெல் இவற்றைக்குத்துதல்.
நெல்லறுக்கும்பொழுது தண்ணுமைகொட்டடல்.
நெல்லறுத்தல்.
பொதிகளைக்காவடியிற்சுமந்துசெல்லல்.
வக்குதல் (வதக்குதல்.)

## (உசு).—உணவுவகைகள்.

அவல்.
எருமைத்தயிர்.
கடமான்தசை.
கரைத்த புளிநீருலையில் அவரைவிதையையும், மூங்கிலரிசியையும், வேறு வேறுவகையான நெல்லரிசியையும் சொரிந்து ஆக்கின புளியங்கூழ்.
கிழங்குகள்.
சோற்றுருண்டை.
தசை.
தினைச்சோறு.
தினைமா.
தேனாலாக்கியகள்.
நெய்யில்வெந்ததசைப்பொரியல்.
நெய்விழுது.
நெய்விழுதுஉள்ளேவைக்கப்பெற்ற தினைச்சோற்றுருண்டை.
நெல்லாலாக்கியகள்.
பலாவிதையின்மாவும், புளியும்கலந்த மோருலையிற்சமைத்த மூங்கிலரிசிச்சோறு.
பழம்.
மூளையாலாக்கியகள்.
வாளைமீன்தசை.

# மலைபடுகடாத்துள் ஒத்தபகுதிகள்.

| வரி. | மூலம். | வரி. | மூலம். |
|---|---|---|---|
| 1 - 3 | திருமழை தலைஇய .......முழவொடு | 532 | மழையெதிர்படுகண்முழவுகண்ணிருப்ப. |
| 6 | கண்ணிடை விடுத்த களிற்றுயிர்த் தூம்பு | 533 | கழைவளர் தூம்பின்கண்ணிடமிமிர. |
| 11 - 2 | பதலையும் பிறவுஞ், கார்கோட் பலவின் காய்த் துணர் கடுப்ப | 142 - 4 | கார்வாய்த்தெதிரிக் கோடியர்முழவிற்றூங்கிஇறைஞ்சின, பலவே. |
| 13 | காயகலப்பையிர் | 365 | காஅய்க்கொண்டநும்மியம். |
| 17 | தொடுத்தவாளியர் துணைபுணர்கானவர் | 274 - 5 | இரூஅ வன்சிலையர் மாதேர்பு கொட்குங்குறவர். |
| 36 - 7 | களங்கனியன்ன.........மருப்பின்.........யாழ் | 534 | கருங்கோட்டுச்சீறியாழ். |
| 47 | கயம்புக்கன்ன.........தண்ணிழல் | 259,265 | கயங்கண்டன்ன பெருமரக்குழாமும். |
| 50 | கலம்பெறுகண்ணுளரொக்கற்றலைவ | 569 | தலைவன்ருமரைமலைய. |
| 58 | மங்கையர்கணவன் | 424 | கொடியோள்கணவன். |
| 65-6 | எதிர்ந்தபுள்ளினிர் | 448 | புள்ளோர்த்துக்கழிமின். |
| 70 | தொலையாநல்லிசை | 388 | செல்லாநல்லிசை. |
| 72 | புலவோர்க்குச்சுரக்குமவனீகைமாரியும் | 75 - 6 | தூத்துளிபொழிந்த பொய்யாவானின்வீயாதுசுரக்குமவன். |
| | | 580 | மழைசுரந்தன்னவீகைநல்கி. |
| 89 | கொடைக்கடனிறுத்தவவன் | 543 | கொடைக்கடனிறுத்தசெம்மலோய். |
| 100 | அகலிருவிசும்பு | 558 | பரந்திடங்கொடுக்கும்விசும்பு. |

| வரி. | மூலம். | வரி. | மூலம். |
|---|---|---|---|
| 138 - 9 | புண்ணரிந்தரலையுக்கனநெடுந்தாளாசினி | 292 | கலைதொடுபெரும்பழம்புண்கூர்ந்தூறலின். |
| 143 | முழவிற்றூங்கியிறைஞ்சினபலவே | 511 | பலவின்முழவுமருள்பெரும்பழம். |
| 145 | தீயினன்னவொண்செங்காந்தள் | 149 | (காந்தள்) நெருப்பினன்னபல்விதழ்தாஅய். |
| 158 | அசைஇயற்சேர்ந்தல்கி | 256 | அற்சேர்ந்தல்கியசைதலோம்பி. |
| 165 | நும்மில்போலநில்லாதுபுக்கு | 491 | அருங்கடிவாயிலயிராதுபுகுமின். |
| 171 | வேய்ப்பெயல்விளையுட்டேக்கட்டேறல் | 522 | திருந்தமைவிளைந்ததேக்கட்டேறல். |
| 174 | பழஞ்சிதைதவெண்காழ் | 337 - 8 | பலவின்சுளைவிளை தீம்பழ மூண்டுபடுமிச்சிற்காழ். |
| 177 | பிணவுநாய்முடுக்கியதடி | 563 | முடுவறந்தபைந்ிணத்தடி. |
| 213 | குமிழிசுழலுங்குண்டுகயம் | 474 - 6 | வனைகலத்திகிரியிற்குமிழிசுழலும் ஆறு. |
| 217 | துருவினன்னபுன்றலைமகார் | 253 | புட்கைபோகியபுனறலைமகார். |
| 238-9 | நெடுவரைநேமியிற்றொடுத்தபிரசம் | 524 - 5 | நெடுவரைநேமியிற்செல்லும் இறால். |
| 240 | ஞெரேரெனநோக்கல் | 579 - 80 | ஞெரேரெனநல்கி. |
| 319 | திருந்துவேலண்ணற்குவிருந்திறைசான்மெனை | 467 | திண்டேர்நன்னற்குமயினிசான்மெனை. |
| 358 | இறும்பூதுகளுலியவின்குரல்விறலியர் | 536 | கடவதறிந்தவின்குரல்விறலியர். |
| 377 | மழைமருள்பஃறோல் | 530 | வானத்தன்னவளமலியானை. |
| 384 | களிறுமலைந்தன்னகண்கூடுதுறுகல் | 572 | வரைமருள்வேழம். |
| 386 | ஒன்னாத்தெவ்வர் | 397 | ஒட்டாதகன்றவொன்னாத்தெவ்வர். |
| 469 - 70 | நல்யாழ்மருதம்பண்ணி | 534 | மருதம்பண்ணியயாழ். |
| 476 | கட்கின்சேயாற்றின் | 555 | கலுழிக்கட்கின்சேயாற்று. |
| 478 | நிதியந்துஞ்சுநிவந்தோங்குவரைப்பு | 575 | நிலந்தினக்கிடந்தநிதியம். |



# மலைபடுகடாத்திலும் பிறநூல்களிலுமொத்தபகுதிகள்.

| அடியின் எண். | மலைபடுகடாத்தின் மூலம். | பிறநூல்களின்பகுதிகளும், அவைஉள்ளஇடங்களும். |
|---|---|---|
| 1 | திருமழைதலைஇய. | தலைப்பெயறலைஇய—முருகு. 9. |
| | ,, | வானந்தண்டளிதலைஇய—பதிற்று. 31. |
| 2-3 | பண்ணமைத்துத் திண்வார் விசித்தமுழவ. | பண்ணமை முழவு—பதிற்று. 41. |
| 5 | பீலியணிதழைக்கோடு. | தாழ்பீலிப் பல்லியமும்—பு - வே. காந்தை. 3. |
| 6 | கண்ணிடைவிடுத்த களிற்றுயிர்த்தூம்பு. | கண்விடுதூம்பிற் களிற்றுயிர் தொடுமின்—புறநா. 152. |
| | ,, | கண்ணறுத்தியற்றியதூம்பு—பதிற்று. 41. |
| 9 | அரிக்குரற்றட்டை. | தேரை, தட்டைப்பறையிற் கறங்கும்—குறு. 193. |
| 3-13 | முழவொடாகுளி..... .. .. சுருக்கிக்காயகலப் பையிர். | ஒருதலைப்பதலை தூங்க வொருதலைத் தூம்பகச் சிறுமுழாத்தூங்குத் தூக்கி, சுவலமுந்தப்பலகாயஇளைஞர்—புறநா. 103, 139. |
| | ,, | முழவும் பதலையும் பிறவுங், கண்ணறுத் தியற்றிய தூம்பொடு சுருக்கிக், காவிற்றகைத்த துறைகூடு கலப்பையர். பதிற்று. 41. |
| ✓16 | எடுத்துநிறுத்தன்ன இட்டருஞ்சிறுநெறி. | விசும்பினுக் கேணி நெறியன்ன சின்னெறி—திருச்சிற். 149. |
| 21 | தொடித்திரிவன்ன தொண்டுபடு திவவின். | குறுந்தொடி யேய்க்கு மெலிந்து வீங்குதிவவின்—பெரும்பா. 13 |
| 22 | கடிப்பகையனைத்தும். | தினையரிசி யவைய லன்ன, வேய்வை போகிய விரலுளர் நரம்பின்—பொருந. 16 - 17. |
| ,, | கேள்விபோகா. | கேள்வி போகிய—பொருந. 18. |
| 23 | சுகிர்புரிநரம்பின். | சுகிர்புரி நரம்பும்—சீவக. 728. |

| அடியின் எண். | மலைபடுகடாத்தின் மூலம். | பிறநூல்களின்பகுதிகளும், அவைஉள்ளஇடங்களும். |
|---|---|---|
| 24-5 | வரகின் குரல்வார்ந்தன்ன துளை. | கழுகின்பாளையம்பசும்பூக்கருவிருந்தன்ன துளை—பெரும்பா.7-8. |
| 27 | துளைசெறிய ஆணிமுடுக்கி. | துளைவாய் தூர்ந்த துரப்பமையாணி—பொருந. 10. |
| 29 | பொன்போற் பச்சை. | விளக்கழலுருவின் விசியுறுபச்சை—பொருந. 5. |
| 30 | வதுவை நாறும் வண்டுகமழைம்பால். | விழவொலி கூந்தல்—ஐங்குறு. 306. |
|  | ” | மணங்கமழ்மாதரை மண்ணியன்ன—பொருந. 19. |
| 31-2 | மடந்தை மாண்ட நுடங்கெழிலாகத் தடங்கு மயிரொழுகிய வவ்வாய்கடுப்ப. | செய்யோளவ்வயிற்றுஐதுமயிரொழுகியதோற்றம்போல — பொருந. 6 - 7. |
| 36-7 | களங்கனியன்ன மருப்பின்யாழ். | களங்கனியன்ன கருங்கோட்டுச் சீறியாழ்—புறநா. 127, 145. |
| 37 | வணர்ந்தேந்து மருப்பு. | பாம்பணந் தன்ன வோங்கிரு மருப்பு—பொருந. 13 |
| 41-6 | உயர்ந்தோங்கு பெருமலையூறின்றேறலின்மெலிந்த கல்பொருசிறடி விறலியர் நிற்புறஞ் சுற்ற. | கோடியர் நெடுவரை, யருவிடர்ச் சிறுநெறி யேறலின் வருந்தித், தடவரல் கொண்ட தகைமெல் லொதுக்கின், வளைக்கை விறலியென் பின்ன ளாக—புறநா. 135. |
| 42-3 | மதந்தபுஞமலி நாவினன்ன, துளங்கியன்மெலிந்தகல்பொருசிறடி. | உயங்குநாய் நாவி னல்லெழிலசைஇ, வயங்கிழை யுலறியஅடி—சிறுபா. 17 - 8. |
|  | ” | வருந்துநாய் நாவிற் பெருந்தகு சீறடி—பொருந. 42. |
|  | ” | நாய் நாச்சீறடி—சீவக. 2694. |
|  | ” | வருந்து நாய்நாவிற் சீறடி—கூர்ம - இராமன்வனம். 15. |
| 44 | கணங்கொடோகையிற் கதுப்பிகுத்து. | கதுப்பென மணிவயிற் கலாபம் பரப்பி—சிறுபா. 14 - 5. |
|  | ” | புகை, மாடமாலை மேனலார் மணிக்குழலின் மூழ்கலிற், கோடுயர்ந்த குன்றின்மேற் குழீஇய மஞ்ஞை தஞ்சிற, காடு மஞ்சினுள் விரித்திருந்த வண்ண மன்னரே—சீவக. 71. |
|  | ” | மயிற்குழா, மோடிவளைக்கின்ற தொப்பவே—நீடியநற், பைங்கூந்தல் வல்லியர்கள் பற்றி—நளவெண்பா, சுயம். 25. |
| ” | கதுப்பிகுத்தசைஇ. | கதுப்பிகுத்தசைஇ—பட். 259. |

| | | |
|---|---|---|
| 45-6 | விலங்கு மலைத்தமர்ந்த சேயரிநாட்டத்து...... விறலியர். | மடமானேக்கின் வாணுதல் விறலியர்—**சிறுபா. 31.** |
| 47 | கயம்புக்கன்ன.........தண்ணிழல். | பொய்கையும் போன்றதே ஈசனெந்தை யிணையடி நீழலே—**தேவாரம்.** |
| | ,, | காவகம், ........, நிழல்தேறித் தெண்கயம் புக்கதுபோன்றது—**சீவக. 872.** |
| | ,, | வெவ்வாறு மெனக்குளிர்ந்து வெயிலியங்கா வகையியங்கும் வீரி பூஞ் சோலை—**கம்ப. நாடவிட்ட. 22.** |
| 48 | புனல்கால்கழீஇய மணல்வார்புறவு. | புனல்கால் கழீஇய பொழில்—**பெரும்பா. 380.** |
| 52-3 | மீமிசைநல்யாறு கடற்படர்ந்தாங்கு யாமவணின்றும் வருதும் | மலையி னிழிந்து மாக்கட னேக்கி, நிலவரை யிழிதரும் பல்யாறு போலப், புலவரெல்லா நின்னேக்கினரே—**புறநா. 42.** |
| | ,, | கல்வீழருவி கடற்படர்ந் தாங்கு—**பெரும்பா. 427.** |
| | ,, | கடுவரை நீரிற் கடுத்துவர—**பு - வெ. வெட்சி. 11.** |
| | ,, | பெய்யு மாரியாற் பெருகு வெள்ளம்போய், மொய்கொள் வேலை வாய் முடுகு மாறுபோல்—**கம்ப. கையடை. 15.** |
| 53 | யாமவணின் றும் வருதும்நீயிரும். | யாமவ ணின்றும் வருதுநீ யிருமிவண்—**சிறுபா. 143 - 4.** |
| | ,, | யாமவ ணின்றும் வருதுநீயிரும் இருநிலம்—**பெரும்பா. 28 - 9.** |
| 54-5 | கனிபொழி கானங்கிளையொடுணீஇய, துனை பறைநிவக்கும் புள்ளினமான. | பழுமர முள்ளிய பறவையிற் புக்கு—**பொருந. 64 - 7.** |
| | | பழுமரந் தேரும் பறவைபோலக், கல்லென் சுற்றமொடு கால் கிளர்ந்து திரிதரும் ..பாண—**பெரும்பா. 20 - 22.** |
| | ,, | வள்ளியோற் படர்ந்து புள்ளிற் போகி—**புறநா. 47.** |
| 57 | வாங்கமைத்திரடோள். | வாங்கமை மென்றோள்—**பதிற்று. 12.** |
| 58 | மங்கையர் கணவன். | கொடுங்குழை கணவ, திருந்திழை கணவ, வாணுதல் கணவ, நன்னுதல் கணவ, ஆன்றோள் கணவ, நல்லோள் கணவன், சேயிழை கணவ, புரையோள் கணவ, சேயிழை கணவ, ஒண்டொடி கணவ—**பதிற்று. 14, 24, 38, 42, 55, 61, 65, 70,88,90.** |
| | ,, | செயிர்தீர் கற்பிற் சேயிழை கணவ—**புறநா. 3.** |
| 59-60 | முழைபாழ்படுக்குந் துன்னருந்துப்பி னிசை. | முனைபாழ் படுக்குந் துன்னருந்துப்பிற் பகை—**குறிஞ்சி. 128 - 9.** |

| அடியின் எண். | மலைபடுகடாத்தின் மூலம். | பிறநூல்களின்பகுதிகளும், அவைஉள்ளஇடங்களும். |
| --- | --- | --- |
| 60 | இசைநுவல்வித்தின் நசையேருழவர். | வித்தியபனுவல்—புறநா. 237. |
| 61 | புதுநிறைவந்த புனலஞ்சாயல். | நீரினு மினியசாயற் பாரி—புறநா. 105. |
| | ,, | வானிநீரினுந் தீந்தண்சாயலன்—பதிற்று. 86. |
| | ,, | வேனிற் புனலன்ன நுந்தை—கலி. |
| 65-6 | பொழுதெதிர்ந்த புள்ளினிர் மன்றவெற்றுக் குறுதலின். | நாளன்று போகிப் புள்ளிடைதட்ப—புறநா. 124. |
| | | ஒருநெறி யெதிர்ப்பா டுற்றது முன்னைப் பெருந்தவப் பயனது போலும்—தணிகையாற்றுப்படை. 169 - 70. |
| 68 | வீற்றுவளஞ் சுரக்குமவனுடு. | நாடென்ப நாடாவளத்தன—திருக். 739. |
| ,, | வளஞ்சுரக்குநாடு. | நிலஞ்சுரக்கு நிறைவளம்—கம்ப. நாட்டு. 38. |
| 70 | தொலையா நல்லிசை. | கெடா நல்லிசைநிலைஇ, நல்லிசை நிலைஇய நனந்தலை யுலகத்து—பதிற்று. 14, 86. |
| ,, | ,, | ஒருவனதிரண்டு யாக்கை யூன்பயி னரம்பின் யாத்த, வுருவமும் புகழு மென்றுங் கவற்றினும் காத்துவந்து, மருவிய வுருவ மிங்கே மறைந்துபோ மற்றயாக்கை, திருவமர்ந் துலகமேத்தச் சிறந்துபின் னிற்கு மன்றே ; பொன்று மிவ்வுடலின் பொருட், டென்று நிற்கு மிரும்புக, ழின்று நீர்கழிந் தீர்களாற், குன் றின் மேற்குடைவேந்திர்காள்—சூளா. 776, 1356. |
| 71-2 | பலர்புறங்கண்டவ ரருங்கலந் தரீஇப், புலவோர்க்குச் சுரக்குமவனீகை மாரியும். | ஒன்னுத் தெவ்வ ருலைவிடத் தொழிந்த, விசும்புசெ லிவுளியொடு பசும்படை தரீஇ—பெரும்பா. 491 - 2. |
| | ,, | யவனர்ப்பிணித்து நன்கலம் வயிரமொடு கொண்டு பிறர்க்குதவி ; அமர்கடந்துபெற்ற அரியவென்றுேம்பாதுவீசிக், கலஞ்செலச்சுரத்தல் ; வென்று கலந்தரீஇயர்—பதிற்று. 20, 44, 53. |
| | ,, | அவ்வெயிற்கொண்ட செய்வுறு நன்கலம், பரிசின் மாக்கட்கு வரிசையினல்கி—புறநா. 6. |

| | | |
|---|---|---|
| | ,, | குரிசி லடையாரைக் கொண்டகூட் டெல்லாம் பரிசின் முகந்தன பாண்—பு - வெ. வஞ்சி. 16. |
| 73 | இகழுநர்ப்பிணிக்கு மாற்றலும்புகழுநர்க்கு அரசுமுழுதுகொடுப்பினு மமராநோக்கம். | செற்ற தெவ்வர் கலங்கத் தலைச்சென் றஞ்சுவரத்தட்கு மணங் குடைத் துப்பு—மதுரை. 139 - 40. |
| | ,, | நட்டவர் குடியுயர்க்குவை—மதுரை. 131. |
| 75-6 | தூத்துளிபொழிந்த பொய்யாவானின்வீயாது சுரக்குமவ னுண் மகிழிருக்கையும். | ஆர்கலி வானந் தளிசொரிந்தா அங்கு உறுவரார நன்கலஞ் சிதறி—பதிற்று. 43. |
| 84-5 | பாயிரு ணீங்கப் பகல்செய்யா வெழுதரும் ஞாயிறன்னவவன் வசையில்சிறப்பும். | பாயிரு ணீங்கப் பல்கதிர் பரப்பி ஞாயிறு குணமுதற் றோன்றி யாங்கு ; மாயிரு விசும்பிற்பன்மீனொளிகெட ஞாயிறு தோன்றி யாங்கு மாற்றார் உறுமுரண் சிதைத்தநின் னோன்றாள் வாழ்த்தி—பதிற்று. 59, 64. |
| 89 | கொடைக்கடனிறுத்தவவன். | கொடைக்கட னிறுத்த கூம்பா வுள்ளத்து—பெரும்பா. 446. |
| 90 | கொடுந்தாண் முதலை. | கொடுந்தாண் முதலையு மிடங்கரும்—குறிஞ்சி. 257. |
| 91 | கல்லகழ்கிடங்கு. | கல்லிடித் தியற்றிய விட்டுவாய்க் கிடங்கு—மதுரை. 730. |
| | ,, | பாருடைத்த குண்டகழி—புறநா. 14. |
| | ,, | சுற்று முற்றுபா ரெலாம்போழ்ந்த மாகிடங்கு—கம்ப. நகர. 17. |
| 92 | வரைபுரைநிவப்பின் வான்றோயிஞ்சி. | கோடுறழ்ந் தெடுத்த கொடுங்க ணிஞ்சி—பதிற்று. 16 |
| 97-8 | வானமின் னுவசிவுபொழியவானு, திட்டவெல்லாம் பெட்டாங்குவிளைய. | மழை தொழி லுதவ மாதிரங் கொழுக்கத், தொடுப்பினு யிரம் வித்தியது விளைய—மதுரை. 10 - 11. |
| 100 | அகலிருவிசும்பினுஅல். | அகலிரு விசும்பிற் பாயிருள்—பெரும்பா. 1. |
| 102 | நீலத்தன்னவிதைப்புனம். | நீலத்தன்ன பைம்பயிர்—மதுரை. 279. |
| 107-8 | கயமுனி முயங்குகைகடுப்பக் கொய்பதமுற்றன வெனல். | யானை, இறங்கு கைகடுப்ப, வாங்கிய பெருங்குரற் சிறுதினை—குறிஞ்சி. 35 - 8. |
| | ,, | உறங்குபிடித் தடக்கை யொருங்கு நிரைத்தவைபோல், இறங்கு குரலிறடி—பெருங்கதை, குறிஞ்சி நிலங்கடந்தது. |
| 111 | மேதியன்னகல். | எருமை யன்ன கருங்கல்—புறநா. 5. |
| 118-9 | குறையறைவாராநிவப்பிற் கரும்பு - (அறை - பாத்தி.) | கரும்புநடு பாத்தியிற் கலித்த—ஐங்குறு. 65. |
| | | கரும்புநடு பாத்தியன்ன—குறு. 262 |

| அடியின் எண். | மலைபடுகடாத்தின் மூலம். | பிறநூல்களின் பகுதிகளும், அவைஉள்ளஇடங்களும். |
|---|---|---|
| 118-9 | ,, | கரும்பின் பாத்திப்பூத்த—பதிற்று. 13. |
| ,, | அறையுற்று அலமருங்கரும்பு. | அறைக்கரும்பு - பொருந. 193. |
| | ,, | அறையுறுகரும்பின்—பதிற்று. 75. |
| 121 | தோரையவற்பதங்கொண்டன. | அவலவெலன்கின்ற நெல்—தொல். எச். 26 - ம் சூ. உரை. |
| 122 | தொய்யா துவித்திய. | உழாதுவித்துநவும்—பதிற்று. 13. |
| 124 | மையெனவிரிந்தன நீணறுநெய்தல். | மணிமருணெய்தல்—மதுரை. 282. |
| 125-6 | செய்யாப்பாவை வளர்ந்து கவின்முற்றிக் காயங்கொண்டனவிஞ்சி. | பாவையிஞ்சி—பெருங்கதை. [116. |
| 134 | காலமன்றியுமரம்பயன் கொடுத்தலின். | காலமன்றியு மரம் பயம் பகரும், யாணரறாஅ வியன்மலை—புறநா. |
| | ,, | தீங்கனி காலமன்றிக் கனிவது காண்டிரால்—கம்ப. நாடவிட்ட. 18. |
| 137 | கூவைநூறொருடுகுழீஇயின. | கூவைநீறுங் கொழுங்கொடிக் கவலையும்—சிலப். காட்சி. 42. |
| | ,, | பாவை யிஞ்சியுங் கூவைச் சுண்ணமும்—பெருங்கதை. |
| 140-41 | ஆகுளிகடுப்பக் குடிஞையிரட்டுமலை. | துடிக்குடிஞை—பொருந. 210. |
| | ,, | துடி குடிஞையோ டிரட்டுமலை—புறநா. 170. |
| 145 | தீயினன்னவொண்செங்காந்தள். | கார்த்திகை நாட்டவரிட்ட விளக்கிற்பூத்தனதோன்றி—கார். 26. |
| | ,, | தோன்றி வில்விளக்கே பூக்கும்—நளவெ. கலிதொடர். 28. |
| 149-50 | பல்விதழ்தாஅய் வெறிக்களங் கடுக்கும்வியலறை. | நீலத்தன்ன பைம்பயிர் மிசைதொறும்......மலர வெறிக்களங்கடுப்ப—மதுரை. 279 - 84. |
| | ,, | பூம்போது சிதைய வீழ்ந்தெனக் கூத்த ராடுகளங்கடுக்கும்—புறநா. 28. |
| 152 | ஊஞர்வட்டியர். | வேட்டுவன் மான்றசை சொரிந்த வட்டியும்—புறநா. 33. |
| 159 | கன்றெறியொள்ளிணர்ச்செயலை. | எரியவிர் உருவினங் குழைச் செயலை; செந்தீயொண்பூம் பிண்டி—குறிஞ்சி. 105; 118 - 9. |

